தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்

5 கலர் டிவி

இரண்டு நபருக்கு மோட்டார் சைக்கிள்

10 தங்க வளையல்கள் (1பவுன்)

250 மி. லி. கிங் சைஸ் ரூ. 3.16 ஆதாயம் !

10 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 1000/-

25 தங்க லாக்கட்கள் 1/2 பவுன்

200 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 500/-

400 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 250/-

UJALA FOR SUPER WHITENESS OF CLOTHES

## உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்

இப்போது உஜாலாவின் டாம்ப்பர் - ப்ரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - ப்ரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்ற நாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமின்ஸ் இல்லாத ஒயிட்னர் உஜாலா - வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மையற்றது. அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.



Write to : **Jyothy Laboratories (UJALA)**, 2- A, Singarayar Mansion, Abhirami Avenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.




# தேசியக் கொடியேற்றாத கட்சிகள்!

**காங்கிரஸ் மற்றும் அதிலிருந்து பிரிந்து வந்த தேசியக் கட்சிகள் தவிர மற்ற கட்சியினர் சுதந்தர தினத்தை, தேசியக் கொடியேற்றி கட்சி சார்பில் கொண்டாடுவதில்லை. ஏன்? சம்பந்தப்பட்ட கட்சியினரிடமே கேட்டோம்....**



**எஸ்.எஸ். தியாக ராஜன்** *(மாநில துணைச் செயலாளர், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி)* :

1947ல் நமக்கு அளிக்கப்பட்டது ஆட்சி மாற்றமே தவிர, உண்மையான விடுதலை அல்ல என்பது எங்கள் கருத்து. காந்திஜியின் அகிம்சை, மற்றும் சத்தியாக்கிரக முறைகளால் மட்டுமே நமக்குச் சுதந்தரம் கிடைக்கவில்லை. குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் 1946ல் நடைபெற்ற கப்பல் படை கலகம் (Royal Indian Navy Mutiny) ஒரு பெரிய எழுச்சியைத் தோற்று வித்தது. ஆகவே தொடர்ந்து ஆயுத போராட்டத்தில் ஈடுபட்டு முழுச் சுதந்தரத்தைப் பெற நாங்கள் முடிவு செய்தோம்.

கட்சி தடை செய்யப்பட்டது. 1950ல் நாடு குடியரசாகும் போது தான் கம்யூனிஸ்ட் கட்சி மீதிருந்த தடை நீங்கியது. நாட்டு விடுதலைக்குப் பாடுபட்ட எங்கள் தலைவர்கள் பலர் அடக்குமுறைக்கு ஆளாகி, தலைமறைவு வாழ்க்கை வாழ வேண்டியிருந்தது. அப்போதைய கசப்பான அனுபவம், காங்கிரஸ் மீது ஒரு வெறுப்பை வளர்த்தது. இது தவிர, விடுதலைப் போராட்டத்தின் போது எங்கள் தலைவர்கள் செய்த மகத்தான தியாகத்தை மறைத்து, ஏதோ காங்கிரஸ் தலைவர்கள் மட்டுமே போராடி சுதந்தரத்தைப் பெற்றுத் தந்தது போல ஒரு மாயத் தோற்றத்தை உருவாக்கினர். மேலும், காங்கிரஸ் கொடியும் தேசியக் கொடியும் பெரிய வேறுபாடும் இன்றி இருந்தது. வெறுப்புக்கான கூடுதல் காரணம். கட்சி ரீதியாக சுதந்தர தினத்தைக் கொடியேற்றி நாங்கள் கொண்டாடாமல் இருப்பதற்கு இவையே காரணங்கள். 1975ல் எமர்ஜென்ஸிக்கு முன்பே, பாசிச, மற்றும் பிற்போக்கு சக்திகளால் நாட்டுக்கு ஆபத்து என்பதை உணர்ந்து, அதைப் பாதுகாக்கும் பொறுப்பு எங்களுக்கும் உண்டு என்பதை வலியுறுத்தும் விதமாக விஜயவாடாவில்

நடைபெற்ற அகில இளைய மாநாட்டில் தேசியக் கொடி ஏற்றி மாநாட்டைத் துவங்கினோம். அந்த நடைமுறை இன்னமும் தொடர்கிறது. பொன்விழா சுதந்தர தினத்தை சிறப்பாகக் கொண்டாட இருக்கிறோம். தேசிய உணர்வு என்பது காங்கிரஸ் உணர்வுக்கு மாறானது என்பதை காங்கிரஸ் புரிந்து கொள்ள வேண்டும்.



**என். சங்கரய்யா** *(தமிழ் மாநிலச் செயலாளர், மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட்.)* :

இந்திய விடுதலைக்காக காங்கிரஸ் தலைவர்கள் மட்டும் போராடவில்லை. சோஷலிஸ்டுகள் கம்யூனிஸ்டுகள் என எல்லோருமே போராடினார்கள். காங்கிரஸ் இயக்கத்தில், துவக்கத்தில் இருந்தே வலது - இடது சாரி எண்ணம் கொண்டவர்கள் இருந்தனர். இடது சாரி எண்ணம் கொண்டவர்கள், தீவிர நடவடிக்கைகளே விடுதலைக்கான வழி வகுக்கும் என்று கருதினர். நேதாஜி போன்றவர்கள் அது போன்ற தலைவர்கள். பகத்சிங் இறக்கும் போது 'நான் ஒரு கம்யூனிஸ்ட்' என்று கூறித்தான் இறந்தார். போஸின் இந்திய தேசியப் படை தலைவர்களை ஏகாதிபத்திய அரசு கைது செய்ததும், அதைத் தொடர்ந்து கப்பல் படை செய்த கலகமும், இந்தியா முழுதும், ஆட்சிக்கு எதிரான பெரிய கலவரங்களாக வெடித்தன. அவைகளைக் கட்டுப்படுத்த முடியாமல், விட்டால் போதும் என்றாகி விட்டது பிரிட்டிஷ் அரசுக்கு. இதுதான் உண்மை. எங்கள் போராட்ட வரலாறுகளை மறைத்துவிட்டு, ஏதோ காங்கிரஸ்காரர்கள்தான் சுதந்தரம் வாங்கிக் கொடுத்ததாக ஒரு மாயத் தோற்றத்தை உருவாக்கினார்கள். இதனால் ஏற்பட்ட அதிருப்தி காரணமாகவே நாங்கள் சுதந்தர தினத்தின் போது கட்சி ரீதியான கொண்டாட்டங்களில் ஈடுபடுவதில்லை. அதே சமயம் 1957ல் நம்பூதிரிபாடு தலைமையில் கேரளாவில் ஆட்சிக்கு வந்த போது தேசிய நிகழ்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துச் செயல்பட்டோம். மற்றவர்களுடைய தியாகத்தை காங்கிரஸ்காரர்கள் மதிப்பார்களேயானால், எங்களைப் போன்றோரும், முழு மனத்தோடு கொண்டாட்டங்களில் ஈடுபடுவோம். தமிழக மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைப் பொறுத்தவரை, ஆகஸ்ட் 15 அன்று பேரணிகள், பொதுக்கூட்டங்கள் நடத்துவோம். இந்த முறை கட்சி அலுவலகத்தில் நானே தேசியக் கொடியேற்றி நடத்தி வைக்கிறேன்.



**கே.ஏ. கிருஷ்ணசாமி** *(முன்னாள் அமைச்சர்)* :

திராவிட இயக்க கட்சிகளில் - அவை எத்தனை பிளவு பட்டிருப்பினும், அடிநாதம் என்பது, தமிழர்களுக்காக வாழ்வது, மொழி, பண்பாட்டைக் காப்பது என்பதுதான். 'பிரிட்டிஷ்காரன் நம்மை விட்டுப் போய் விட்டாலும், தமிழர்களுக்கு உண்மையான சுதந்தரம் என்பது வடநாட்டவர்கள் பிடியிலிருந்து விடுபடும் போதுதான்' என்றவர் பெரியார். ஆனால் அண்ணா அவர்கள் 'இரண்டு எதிரிகளில் ஒருவர் ஒழிந்தது ஒரு சந்தோஷமான விஷயமென்றும், மற்றொரு எதிரியை, போராடி வெற்றி கொள்வோம்' என்றும் சொன்னார்.

பல்வேறு துறைகளில் வடக்கத்தியர்களின் ஆதிக்கம், இந்தி மொழித் திணிப்பு போன்றவற்றால் திராவிட இயக்கத்தவர்களுக்கு தேசிய அளவில் ஓர் ஒட்டுதல் இல்லாமல் இருக்கிறது. காங்கிரஸ் என்பது விடுதலைக்காகப் பாடுபட்ட ஓர் இயக்கம் (movement). அது பின்னாட்களில் கட்சியாக மாறி ஏதோ தேசியம் என்றாலே 'காங்கிரஸ்தான் என்ற மயக்க நிலைக்கு மக்கள் தள்ளப்பட்டார்கள். இதன் காரணமாக, இயல்பாகவே காங்கிரஸ் மீது எரிச்சலாக இருக்கும் திராவிட இயக்கத்தவர்கள், எந்த அடிப்படையில் கட்சி ரீதியாக சுதந்தர தினத்தைக் கொண்டாட முடியும்? காங்கிரஸ் வேறு; தேசியம் வேறு.

ஆனாலும் திராவிட இயக்கக் கட்சிகள் ஆட்சியில் இருக்கும் போது மரபுகளை அனுசரித்து, தேசிய நிகழ்ச்சிகளுக்கு உரிய மரியாதையும், கௌரவமும் அளித்து வருகின்றன. நானே அமைச்சர் பொறுப்பிலிருக்கும் போது தேசியக் கொடியேற்றியும் நிகழ்ச்சிகளுக்கு எந்தத் தயக்கமுமில்லாமல் செல்வேன். ஆனால் இப்போது கூப்பிட்டால் யோசிக்க வேண்டியிருக்கும். காரணம் திராவிட

காதில்
விழுந்
தவை:

# தி.மு.க. ஆட்சியிலும் தொடரலாமா?



ஆடி மாதம் வந்து விட்டால் அம்மன் கோயில்கள் களைகட்டி விடும். இந்த வருடம் பல அம்மன் கோயில் விழாக்களில் முக்கிய பிரமுகராகப் பங்கேற்பவர் 'ஆன்மீகச் செம்மல்' கதாகரன். அட வேறு யாருமில்லை... மாஜி வளர்ப்பு மகன்தான். ஆடித் திருவிழாவுக்கு அவரைக் கூப்பிட்டால் கோவிலுக்கு கணிசமான நிதியும் கிடைக்கிறதாம். ஆனால் ஒரே ஒரு கண்டிஷன் தான். போஸ்டர்களில் 'ஆன்மீகச் செம்மல்' என்று பெரிதாகப் போட வேண்டுமாம்!

● அ.இ.அ.தி.மு.க. ஆட்சியில் ஜெ. ஏதாவது ஒரு நிகழ்ச்சியில் பங்கு கொண்டால் நிகழ்ச்சிக்குச் சம்பந்தமில்லாத அமைச்சர்கள்கூட முன் வரிசையில் ஆஜராகி இருப்பார்கள். இதனால் விழா ஏற்பாடு செய்தவர்கள் முக்கிய விருந்தினர்களை இரண்டாவது வரிசைக்குத் தள்ள வேண்டியிருக்கும். இப்போது தி.மு.க. ஆட்சியிலும் இந்த நிலை தொடர்கிறது. கலைஞர் எந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டாலும் ஜூனியர் அமைச்சர்களிலிருந்து சீனியர்கள் வரை முதல் வரிசையில் வந்து ஆஜராகி விடுகிறார்கள்!

● 'தேவேந்திர குல வேளாளர் தலைவர் டாக்டர் கிருஷ்ணசாமிக்கும் இளைய பெருமாளுக்கும் லடாய். தமது வயதுக்கும், சீனியாரிட்டிக்கும் மரியாதை கொடுக்கத் தெரியாதவராக இருக்கிறார் கிருஷ்ணசாமி என்று சொல்கிறார் இளையபெருமாள். சென்ற வாரம் ஊர்வலம் நடத்தி, கவர்னரிடம் மனு கொடுத்தார் அல்லவா கிருஷ்ணசாமி. 'இந்த மனுவை எப்படித் தயாரிக்க வேண்டும் என்பதை விவாதிக்க வேண்டும். இங்கே வாருங்கள்; அங்கே வாருங்கள்' என்று இளையபெருமாளை அலைக்கழித்தாராம் டாக்டர். கடுப்பாகிப் போன 'பெரியவர்' மறுநாள் நடக்க இருந்த ஊர்வலத்திலும் கலந்து கொள்ளாமல், கலைஞரைச் சந்தித்து 'கை குலுக்கி'க் கொண்டார்.

● தினமலர் பத்திரிகை ஆசிரியர் கிருஷ்ணமூர்த்தி, பழைய நாணயங்களைச் சேகரிக்கும் ஆர்வலர். இது சம்பந்தமாக அவர் எழுதிய புத்தகம் ஒன்றை கலைஞர் வெளியிட இருக்கிறார். 'தினமலர்' துவங்கி இத்துணை வருட காலங்களில் கலைஞர் முதல் முறையாக 'தினமலர்' விழாவில் பங்கேற்கிறார்.

— தில்லப்பா

---

இயக்கத்தவர்களான நாங்கள் நடந்து வந்த பாதை அப்படி!

**'மிசா' கணேசன் (தி.மு.க. தலைமை நிலையச் செயலாளர்.) :**

தேசிய நிகழ்ச்சிகள் எதுவாக இருந்தாலும், காங்கிரஸ்காரர்கள் அவர்களுடைய நிகழ்ச்சிகள் போலக் கொண்டாடுவதுதான் நமது நாட்டில் வழக்கமாக இருந்து வருகிறது. பெரியார், அண்ணா ஆகியோர் தீவிர காங்கிரஸ் எதிர்ப்பாளர்கள். காரணம் வடக்கின் ஆதிக்கம் மற்றும் இந்தி மொழித் திணிப்பின் 'சின்னமாக' காங்கிரஸ் கட்சியைக் கருதினார்கள்., ஆகவே காங்கிரஸ் கொடி, திராவிட இயக்கத்தவர்களுக்கு ஒருவித 'ஒவ்வாமையை' உண்டாக்கி விட்டது என்று கூடச் சொல்லலாம். இதன் காரணமாக சுதந்தர தினத்தின் போது கட்சி ரீதியான கொண்டாட்டங்கள் எதுவும் நடைபெறுவதில்லை. அதே சமயம் தி.மு.க. ஆட்சியிலிருக்கும் போது ஜனநாயக மரபை அனுசரித்து, தேசிய நிகழ்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துச் செயல்பட்டு வருகிறது. ஆயினும் தேசிய உணர்வை வெளிப்படுத்துவதில், மற்ற கட்சிக்காரர்களுக்கு சற்றும் குறைந்தவர்கள் அல்ல நாங்கள்.

சந்திப்பு : ஆரெஸ்வி

# எம்.என். நம்பியார்

1

# நான் வில்லன்

நான் நடிச்ச படங்கள்ல நிறைய சஸ்பென்ஸ் இருக்கும். எதிர்பாராத திருப்பங்கள் வரும். ஆனா, என் வாழ்க்கையில அப்படி எந்த திருப்பங்களோ, பரபரப்பான செய்திகளோ கிடையாது. தெளிந்த நீரோடை போல லைஃப் ஓடிக்கிட்டே இருக்கு. அதுவுமில்லாம நான் எப்பவுமே என் மேல வெளிச்சம் விழறதை விரும்பறவன் இல்லே. நடிக்கும்போது விளக்கு வெளிச்சம் விழறதை மட்டும்தான் விரும்புவேன். நடிப்பு நேரம் போக மத்த நேரங்கள்ல ஒதுங்கி இருந்துதான் பழக்கம். அதனாலதான் இதுக்கு முன்னாடி பல பத்திரிகைகள்ல என்னோட நினைவுகளை எழுதணும்னு கேட்டப்போ, நான் வெற்றிகரமாக மறுத்து வந்தேன். இப்ப 'கல்கி'யிலிருந்து எனக்கு வந்த அன்புக் கட்டளையை தட்டமுடியாம மாட்டிக்கிட்டேன்.

அனுபவங்களைச் சொல்லக் கூடாதுன்னு பிடிவாதம் எதுவும் இல்லே. 'நம்பியார் வாழ்க்கையில பயங்கர டர்னிங் பாயின்ட்ஸ் இருக்கும்பா'ன்னு நம்பி ஏமாந்துடக் கூடாது பாருங்க, அதான் காரணம்.

'அதௌ கீர்த்தனாரம்பரத்திலே'ன்னு ஆரம்பிக்கிறதுக்கு முன்னாடி இன்னிக்கு ஆகஸ்டு 15. பொன் விழா வேற. அதனால 1947 ஆகஸ்டு 15-ம் தேதி நான் எப்படி நம்ம நாட்டு விடுதலையைக் கொண்டாடினேன்னு ஞாபகம் வருது. அதை உங்ககிட்ட முதல்ல பகிர்ந்துக்கிறேன்.

அன்னிக்குக் கோவையில சென்ட்ரல் ஸ்டுடியோவில திருவிழாக் கோலம்தான். நாட்டு சுதந்தரத்தைப் பெரிய அளவில கொண்டாடணும்னு ஜுபிடர் பிக்சர்ஸ் என்னையும், எம்.ஜி.ஆரையும் ஆகஸ்டு 14-ம் தேதி இரவு பதினோரு மணிக்கே கூட்டிக்கிட்டுப் போய்ட்டாங்க. நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ராணுவத்தில் இருந்த கேப்டன் லக்ஷ்மி கூட அன்னிக்கு எங்க விழாவுக்கு வந்திருந்தாங்க. ஒரே ஆட்டம், பாட்டம், கொண்டாட்டம் தான். அந்த நாளை என் வாழ்நாள்ல மறக்க முடியாது.

நம்ம நாட்டு சுதந்தரத்தோட அருமை இப்போ இருக்கற இளைய சமுதாயத்துக்குத் தெரியும். அவங்களை விட என்னைப் போன்றவங்களுக்குக் கொஞ்சம் உணர்வுபூர்வமாகவே தெரியும்னு சொல்வேன். ஏன்னா நான் பிரிட்டிஷ் அடிமையாகப் பொறந்தவன். தியேட்டர்ல படம் பாக்கப் போனா, படம் முடிஞ்சதும் எழுந்து வெளியே வர முடியாது. வாட்ச்மேன் தடுத்துடுவான். படம் முடிஞ்சு மன்னரைத் துதித்துப் பாட்டு போட்ட பிறகு தான் வெளியே வர முடியும். ரயில்ல வெள்ளைக்காரனைப் பாத்தா பயபக்தியா ஒதுங்கணும்.

சுதந்தரம் சும்மா கிடைக்கல்லே. அன்றைய தியாகிங்க – 'அன்றைய'ங்கற வார்த்தையை அன்டர்லைன் பண்ணிக்கணும் – தங்களோட சொல், செயல், சிந்தனை எல்லாத்துக்கும் ஒரே நபர்தான் வச்சிருந்தாங்க. தேசம். வேற ஒண்ணும் அவங்களுக்குத் தெரியாது. ஊர், பேர் தெரியாத எத்தனையோ பேர் செஞ்ச தியாகம் தான் இப்ப நாம கொண்டாடற பொன் விழாவுக்குக் காரணம்.

கடைசியில என்ன ஆச்சு? நம்ம உடம்பில இருந்து ரெண்டு கையை வெட்டிக் குடுத்துத் தான் சுதந்தரம் வாங்கினோம். கை முக்கியமா, விடுதலை முக்கியமான்னு வந்தப்ப, விடுதலைதான் முக்கியம்னு ஒரு கட்டாயம். இந்தியாவின் மேற்கு, கிழக்கு பகுதிகளை வெட்டி பாகிஸ்தானுக்குக் கொடுத்துத்தான் சுதந்தரக்

காத்தை சுவாசிச்சோம். அப்படி வெட்டிய ரணம் இன்னும் ஆறலேங்கறது என்னோட தனிப்பட்ட அபிப்ராயம்.

விடுதலையையும் வெள்ளைக்காரன் ஒண்ணும் பிரியமா கொடுக்கலை. 'இவன் நல்லா இருக்கக்கூடாது'ன்னுதான் குடுத்தான். அதுதான் உண்மை. திடீரென பாகிஸ்தான் காஷ்மீர் மீது படையெடுத்தப்போ இந்தியா காஷ்மீருக்கு உதவி பண்ண வேண்டி வந்தது.

பாகிஸ்தானுக்கு எப்பவுமே ஆங்கிலேய - அமெரிக்க ஆதரவு உண்டு. ஏன், நாம ஐ.நா.வுக்கு காஷ்மீர் பிரச்னையைக் கொண்டு போனப்ப பிரிட்டன் அவங்களுக்குத்தானே சப்போர்ட் பண்ணாங்க. இப்ப அமெரிக்காகாரன். இவன்தான் இப்ப உலகத்துக்கே போலீஸ்.

ஏதோ பிரசங்கம் பண்றானேன்னு நினைக்க வேண்டாம். நான் வரலாற்றுப் பிரியன். நெறய விஷயங்களைப் படிப்பேன். அப்பப்ப நினைப்பேன்.

**1947**-ஐ நினைக்கறப்போ அதுக்கு ஒரு பதின்மூன்று வருஷத்துப் பின்னாடி போய்ப் பாக்கிறேன்.

தினம் பள்ளிக்கூடத்துக்குப் போறப்ப, வழியில குரங்குத் தொப்பி போட்டுக்கிட்டு நெறைய பசங்க சூரிய நமஸ்காரம் பண்ணிக்கிட்டிருக்கறதைப் பார்ப்பேன். அவங்க 'மதுரை தேவி பால வினோத சங்கீத சபா'ங்கற நாடகக் கம்பெனி பசங்க. நவாப்ராஜ மாணிக்கம்தான் வாத்தியார். எங்க ஸ்கூல் போற வழியிலதான் கம்பெனி வீடு இருந்தது. அவங்க சூரியநமஸ்காரம் பண்றதைப் பார்க்கறப்போ எனக்கும் மனசில ஏதோ ஓர் எண்ணம் ஏற்பட்டு 'நாமும் இங்கே சேரணும்னு' தோணிச்சி. என் மாமாகிட்ட சொன்னேன்.

'அதெல்லாம் வாணாம்பா. அங்கே வசதியெல்லாம் இருக்காது. விறகு பொளக்கச் சொல்வாங்க.'

நான் பிடிவாதமா இருந்தேன்.

'ப்ளூ மவுண்டன்'னு ஒரு தியேட்டர் ஊட்டியில இருந்தது. இப்ப இல்ல. அந்த தியேட்டர் அதிபர் என் மாமாவுக்குச் சிநேகிதம். அவர் சிபாரிசு பண்ணி, நான் அந்த ட்ராமா கம்பெனியில சேர்ந்தேன்.

அங்க என்ன விசேஷம்னா, பாடம் படிக்கிற மாதிரி அதே அக்கறையோட தினமும் கதர் நூல் நூக்கணும். நாங்க நூத்து நிறைய வச்சிருப்போம்.

அப்பல்லாம் கதர் பெருமையை விளம்பரப்படுத்தி காந்திஜியின் கதர்ப் பிரசாரத்துக்கு ரொம்ப உதவியா இருந்தவர் அய்யா முத்து கவுண்டர்னு ஒருத்தர். அவர் எங்க கம்பெனிக்கு அப்பப்ப வந்து, நாங்க நூத்து வச்சிருந்த நூலை எடுத்துப் போய் அதுக்குப் பதிலா கதர்த் துணி கொண்டு வந்து கொடுப்பார். நாங்க அதைத்தான் போட்டுப்போம். நான் அப்ப காங்கிரஸில் நாலணா மெம்பர். 'அப்ப' அண்டர்லைன்.

**1942**-ல் மகாத்மா காந்தியோட பிரைவேட் செகரட்டரியா இருந்த மகாதேவ தேசாய் காலமான போது, இந்தியா முழுக்க ஒரு பெரிய எழுச்சி ஏற்பட்டது. அவர் செத்துப் போன அன்னிக்கு ராத்திரி எங்க கம்பெனியில் டிராமா போடாம நிறுத்திட்டாங்க. மறுநாள் முழுக்க அதைப் பத்தித்தான் - அதாவது அந்த எழுச்சி பத்தித்தான் நாங்கள்லாம் பேசினோம். ஏதாவது செய்யணும்னு வெறி. எங்காவது உடனே போய் தண்டவாளம் பேக்கணும், தந்திக் கம்பி அறுக்கணும்னு எனக்குள்ளே ஒரே வேகம்.

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

''குழாயடியில சண்டை போடறது அரசியல்வாதிங்க ஓய்ப்ன்னு எத வச்சி சொல்றீங்க?''

''உன் புருசன் ஹவாலாவுல பிடிபட்டு... உன் வீட்ல சி.பி.ஐ. ரெய்டு பண்ணன்னு திட்டிக்கறாங்களே...''





''அந்த ஹோட்டல் முதலாளி பலே கில்லாடி.''

''எப்படிச் சொல்றே?''

''முந்தின நாள் மீந்து போன பஜ்ஜிங்களை மறுபடியும் எண்ணெயில போட்டு 'மறுமலர்ச்சி பஜ்ஜி'ன்னு வித்திடறாரே...''

— நாகூர் ஆர். லோகநாதன்

கம்பெனி அப்போ நாகர்கோவில் பக்கம் ஒழுகின சேரிங்கற இடத்தில கேம்ப் போட்டிருந்தது.

என் நண்பன் சொன்னான். 'வா... மன்னார்குடிக்குப் போய் தண்டவாளம் பெயர்க்கலாம். அது எங்க ஊர்."

நான் இதுபத்தி பேசிக்கிட்டுத் திரிஞ்சது எங்க கம்பெனி வாத்தியார் காதுக்குப் போச்சு. பகல் சாப்பாடு முடிஞ்சதும் அவர் வழக்கமா படுக்கற இடத்துக்கு என்னைக் கூப்பிட்டு அனுப்பினார்.

"என்னடா விஷயம்?"

"ஊருக்குப் போவணும்."

"எந்த ஊருக்கு?"

"மன்னார்குடிக்கு."

"அதான் உன்னோட ஊரா?" (இக்கட்டான கேள்வி. என் ஊர் அது இல்லைன்னு அவருக்குத் தெரியும்.)

"இல்ல... போவணும்."

"ஏண்டா?"

"தண்டவாளம் பேத்து தந்திக்கம்பி அறுக்கணும்."

"எதுக்காக?"

"வெள்ளைக்காரனுக்கு எதிர்ப்பு."

"நீ பேத்துட்டா அவன் போயிடுவானா?"

"நான் மன்னார்குடி போவணும்."

'பளார்'னு ஒரு அறை என் கன்னத்தில் விழுந்தது. எங்களுக்கு வாத்தியார், முதலாளி எல்லாம் நவாப் ராஜமாணிக்கம்தான். வாத்தியார்னு அவரை மொறைக்கலாம்னா, முதலாளிங்கற ஸ்தானம் கண் முன்னால வந்து நிற்கும். சரி, முதலாளின்னு மொறைக்கலாம்னா பாடம் கத்துக் குடுக்கற, நடிப்பு சொல்லித்தர வாத்தியார்ங்கற ஸ்தானம் வந்து நிக்கும். அவரை மொறச்சிக்க வழியே இல்லை.

"நீங்க அடிச்சா கூடப் பரவாயில்லை. நான் ஊருக்குப் போவணும்."

பளார்... பளார்னு அடியோ அடி.. அப்படி ஒரு அடியை அதுக்கு முன்னே நான் என் வாழ்நாளில் வாங்கியதில்லை. வலிதாங்காம அப்படியே கீழே உக்காந்துட்டேன். பகல் சாப்பிடக்கூடப் போகவில்லை.

"மடையா.. தண்டவாளம் பெயர்த்தால் தான் தியாகம்னு இல்லடா. இப்போ நீ இங்க பண்ணி வர்றியே அது கூட சுதந்திரப் போராட்டம்தான். கதர் உடுத்தற. டிராமாவில தேசபக்தின்னா இன்னா, நாட்டை எப்படி மதிக்கணும்னு சொல்றேயில்ல.. அதெல்லாம் கூட ஒரு வகையில வெள்ளைக்காரனை எதிர்த்து நாம நடத்தற போராட்டம்தான்..." இப்படி எனக்கு அட்வைஸ் பண்ணிட்டு, சாப்பாடு எல்லாம் கொண்டு வரச் சொல்லி அவரே எதிர்ல இருந்து என்னை சாப்பிடச் சொன்னார்.

இதையெல்லாம் இப்ப ஏன் சொல்றேன்னா, இவ்வளவையும் நான் 1947 ஆகஸ்டு பதினைஞ்சாம் தேதி ஜுபிடர் பிக்சர்ஸ் கொண்டாடிய விழாவில உட்கார்ந்திருந்தப்ப நெனச்சுப் பார்த்தேன். இதைச் சொல்ற போது கூட ஃப்ளாஷ்பேக்கா ஒவ்வொரு சீனும் என் நினைவில ஓடிக்கிட்டே இருக்கு.

கூடவே இன்னும் எவ்வளவோ காட்சிகள்.

(தொடரும்)

வண்ணப்படம் : **யோகா**

## சினிமா ஸ்டிரைக் :

# நிஜக் காரணம் என்ன?

**தினம் தினம் பத்திரிகைகளில் சினிமா உலக பிரச்னை பற்றிய அறிக்கைப் போர் நடந்து கொண்டிருக்க, நடிகர் மன்சூர் அலிகான் ஒரு சிறு புத்தகம் எழுதியிருக்கிறார்.**



**தலைப்பு : "என்ன நடக்கிறது? — ஓர் ஆய்வு."**

**இவர் அதிரடியாகச் சொல்கிற ஒரு கருத்து : "இது ஒரு தொழிலாளர் பிரச்னையே அல்ல. ஏன் என்றால், சம்பளப் பிரச்னையை வைத்து இந்த ஸ்டிரைக் நடக்கவில்லை. முதலாளி தொழிலாளியை அடித்துவிட்டார் என்றும் ஆரம்பிக்கப்படவில்லை. 'இது ஈகோவின் விளைவு' என்றுதான் எல்லா தரப்பிலும் வர்ணிக்கப்படுகிறது!"**

**இந்தப் புத்தகம், பலரது கவனத்தையும் ஈர்த்துள்ளது. "இப்படி ஓர் ஆய்வை எழுத வேண்டும் என்ற எண்ணம் எப்படி வந்தது?"**

**"பத்திரிகைகள், பரபரப்புக்காக எழுதுவதில் கவனம் செலுத்துகிறார்களேயொழிய, உண்மையான விஷயம் என்ன என்று அலசி ஆராயவில்லை என்று நான் நினைத்தேன். ஒருநாள் இரவு, நாமே முழு விவரங்களையும் ஒரு சிறு புத்தகமாய் எழுதினால் என்ன என்று தோன்றியது. இரவோடு இரவாய் உட்கார்ந்து மடமடவென்று எழுதி அச்சிட்டு விட்டேன்!" என்றார் மன்சூர்.**

**— கௌதம்**

# முயற்சி செய்யணும்;

ஸ்ரீ மூகாம்பிகை கம்பைன்ஸ் பெருமையுடன் வழங்கும் முத்தமழை. இன்று பாடல் பதிவுடன் இனிதே தொடங்குகிறது. கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷன் - அமுதன்.

தினத்தந்தியில் முழுப் பக்க கலர் விளம்பரம் பார்த்தபோது எனக்குள் ஜிவ்வென்று சந்தோஷப் பறவை ஒன்று சிறகடித்துப் பறப்பது போலிருந்தது.

அமுதன்? அமுதன்?

கடைசியில் அவன் கனவு நனவாகி விட்டதா? அப்பா! எத்தனை சந்தோஷமாக இருக்கிறது! என்னால் முடியாமல் போனது! என்னால் மட்டுமல்ல... எங்கள் செட்டில் மிச்சம் ஏழு பேராலும் முடியாமல் போனது!

சினிமாக் கனவுடன் கம்பெனிகளுக்குப் படையெடுக்கும் எத்தனையோ நூற்றுக்கணக்கான இளைஞர்களுள் நானும் ஒருவனாக இருந்தேன். அது 1988 ஆம் வருஷம். மாபெரும் டைரக்டராகி, தமிழகத்தையே கலக்கும் கனவுடன் தினசரி மைலாப்பூரிலுள்ள அந்தப் பெரிய 'பா' டைரக்டரின் அலுவலகத்துக்குப் படையெடுப்பேன், அஸிஸ்டெண்டாகச் சேர.

அவரது அலுவலகத்துக்கு எதிரே உள்ள குட்டிச் சுவரில் எனக்கு முன்னதாக ஏழெட்டுப் பேர் தவமிருப்பார்கள், என் போன்ற கனவுடனே! தினசரிப் பழக்கத்தில் நாங்கள் நண்பர்களானோம். அவர்களில் ஒருத்தன் அமுதன்.

ஒல்லியாக, குண்டு கண்ணாடியுடன் குச்சி முடியும் அழுக்கு டிரெஸ்ஸுமாக சூளைமேட்டிலிருந்து சைக்கிளில் வருவான் தினசரி.

குட்டிச்சுவர் மேடையில் நாங்கள், டைரக்டர் வரும்வரை உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்போம். மெல்லிய குரலில் எங்கள் கனவுகள் அரங்கேறும் பீடம் அது!

'எனக்கு மட்டும் வாய்ப்புக் கிடைச்சி, அஸிஸ்டெண்ட்டா சேர்ந்து, தொழில் கத்துக்கிட்டு, பிறகு ஒரு டைரக்ஷன் சான்ஸ் அடிச்சா...' என்று நாங்கள் நிறைய 'if' போட்டுப் பேசும்போது, அமுதன் மட்டும் தீர்மானமாகத் தன் முதல் படம் எப்படி இருக்கும் என்று உரத்த குரலில் சொல்லிக் கொண்டிருப்பான். கையை அசைத்து அசைத்து, அடிக்கடி முடியைக் கோதிக் கொண்டபடிக்கு அவன் பேசுகிற காட்சியைப் பார்த்தால் அப்போதே அவன் சினிமாக்காரன்தான் என்று சொல்லிவிடத் தோன்றும்.

"அமுதா, இன்னும் நாம முதல் அடியே எடுத்து வெக்கலை. அதுக்குள்ள நீ முதல் படம் பத்திப் பேசறது அவசியமா?" என்பேன் நான்.

"என்ன தப்பு? முயற்சியின் சரியான தொடக்கமே பாதி வெற்றி போலத்தான்னு பிரடரிக் மார்ஸே சொல்லியிருக்கார்" என்பான்.

அவன் பேச்சு தடாலடியாக இருக்கும். குரசேவா, ஃபெலினி, கொடார்ட் என்று எங்களுக்கு முற்றிலும் அந்நியமான பல திரையர்களைப் பற்றி மணிக்கணக்கில் பேசுவான். வெறும் பேச்சு அல்ல; பல ஃபிலிம் சொஸைடிக்களில் அவன் உறுப்பினன் என்பது எங்களுக்குத் தெரியும். ஒரு தீவிரமான சினிமா கலைஞனாக ஆவதற்குத் தன்னாலான அனைத்து முயற்சிகளையும் அவன் எடுத்துக் கொண்டிருந்தான் என்பதை நாங்கள் அறிந்தே இருந்தோம்.

தன் முயற்சி, ஈடுபாடு

எஸ். ஐ. ஆர்.

# தகுதியையும் வளர்க்கணும்!

களை அவன் ஒரு போதும் ரகசியமாக வைக்க மாட்டான். உரத்த குரலில் வெளிப்படுத்துவான்.

"அலட்டல் கேஸ்!" என்று நண்பர்களில் சிலர் அவன் காதுபடவே சொல்வதுண்டு. அமுதன் கவலைப்பட மாட்டான். மாறாக, "எனக்கு இதெல்லாம் தெரியும் என்று பிறருக்கு எப்படிப் புரிய வைப்பது?" என்பான்.

**சா**க்லேட் நிற ஃபியட் காரில் டைரக்டர் வந்து இறங்கும்போது, குட்டிச்சுவர் ஜீவன்கள் பொத் பொத்தென்று குதித்து சலாம் வைக்கும். ஆனால் ஏதும் பேச வாய் வராது. அவராகக் கூப்பிட்டுக் கேட்டால் மட்டும் தயங்கித் தயங்கி, "சார் உங்க அஸிஸ்டெண்டா சேரணும்னு..." என்று இழுப்போம். ஆனால் அமுதனின் கதையே வேறு. அவன், இருக்கிற இடத்தை விட்டு இறங்க மாட்டான். அவர் உள்ளே போகிற வரை பார்வையை அவரை விட்டு விலக்கவும் மாட்டான். பேசவும் மாட்டான்!

அத்தனை பேரும் டைரக்டரைச் சூழ்ந்து கொண்டு வாய்ப்புக் கேட்க, அவன் மட்டும் சுவரை விட்டு இறங்காமல் புன்னகையுடன் பார்த்துக் கொண்டிருப்பது வித்தியாசமாக இருக்கும்.

ஒரு நாள் டைரக்டரே அவனிடம் "உனக்கு என்ன வேணும்?" என்று கேட்ட போதுதான் அவன் இறங்கி வந்து, "உங்க கிட்ட அஞ்சு நிமிஷம் அப்பாயின்மெண்ட் வேணும் சார்!" என்றான்.

"என்ன விஷயம்?"

"என்னைப் பற்றி எடுத்துச் சொல்லணும்!"

நாங்கள் சிரித்து விட்டோம்.

எத்தனை பெரிய டைரக்டர்! கிடைக்கிற இந்த அரை நிமிஷ வாய்ப்பைப் பயன்படுத்தி, வாய்ப்புக் கேட்காமல், அப்பாயின்ட்மெண்ட் வேணுமாமே, அப்பாயின்ட்மெண்ட்!

டைரக்டரும் அவனைப் பார்த்துச் சிரித்தார்.

"வேகன்ஸி எதுவும் இல்லை. ஆறு மாசம் கழிச்சி வாங்க!"

ஆறு மாதமல்ல; ஆறு வருடமானாலும் எங்கு போனாலும் இதே பதில்தான் எப்போதும் வரும். அது அனுபவப்பட்டவர்களுக்குத் தெரியும்.

**நா**ங்களெல்லோரும் சலிப்புற்றுத் திரும்பினோம்.

அமுதன் மட்டும் திரும்பவில்லை.

சரி, அவருக்குக் கோபம் வந்து நல்லா டோஸ் விடுவார்; வாங்கிக் கட்டிக் கொண்டு வந்து சேருவான் என்று நினைத்தபடி திரும்பினோம்.

அடுத்த சில மாதங்கள் வேறு பல இடங்களில் அலைந்தோம். ஒரே பதில்தான். "அப்புறம் வாங்க."

மறுபடி மைலாப்பூர் கேந்திரத்துக்கு வரும்

## இவருக்காக பழூல் காத்திருக்கிறது!

*'அரங்கத்தில் அமைச்சர்கள்*
*அனைவரும் உண்டு- ஆனால்*
*ஒரு இடம் மட்டும் காலி-'*

நிர்மலா சுரேஷ் எழுதிய ஹைகூ கவிதை ஆராய்ச்சி நூல் வெளியீட்டு விழாவில் கலைஞர் பாடிய கவிதை இது. அமைச்சர் தங்கபாண்டியனின் மறைவால் அவர் எவ்வளவு துயருற்றிருக்கிறார் என்பதைக் கவிதை வெளிப்படுத்துகிறது.

அறிஞர் அண்ணாவின் எழுத்தாற்றலும், பேச்சாற்றலும் நிறைய படித்த இளைஞர்களை திமுகவுக்கு இழுத்தன. குறிப்பாகச் சட்டம் பயின்றவர்கள், ஆசிரியர்கள் ஆகியோர் கழகத்தால் கவரப்பட்டார்கள். அப்படிப்பட்டவர்களில் ஒருவர்தான் தங்க பாண்டியன். ஆசிரியராக பணியைத் துவக்கியவர். ஒன்றுபட்ட ராமநாதபுரத்தில் கழகத்தை வளர்க்கப் படாதபாடு பட்டவர். ராமநாதபுரம் மாவட்டச் செயலாளராக பல்லாண்டுகள் பொறுப்பில் இருந்தவர். மதுரைக்கு அந்தப் பக்கம் கழக விவகாரம் ஏதாவது என்றால், தலைமைக் கழகத்தில் உடனடியாக கவனத்துக்கு வருபவர் தங்கபாண்டியன்தான். எப்படிப்பட்ட பிரச்னையானாலும் பேசித் தீர்த்து விடலாம் என்ற நம்பிக்கைக் கொண்டவர் அவர். எடுத்தேன்-கவிழ்த்தேன் என்று பேசத் தெரியாதவர்.

தங்கபாண்டியன் மகன் மற்றும் மகள், திருமணம் செய்து கொண்டு சென்னையில் வசித்து வந்தார்கள். அமைச்சர் பதவி ஏற்ற பிறகு தங்கபாண்டியன் தமது மகனிடம் "நீ தொடர்ந்து தனியாகவே இருந்து கொள். அமைச்சர் பொறுப்பு நிலையில்லாதது. அது தவிர நீயும் என்னுடன் வசித்தால் 'அமைச்சர் மகன் அதிகார துஷ்பிரயோகம்' என்று அனாவசிய பழிகள் வந்து சேரும்!" என்று சொல்லி விட்டாராம்.

கிரீன்வேஸ் சாலையிலுள்ள அவரது பங்களாவில், பழூல் மட்டும் வாசல் கேட் பக்கம் பார்வையைச் செலுத்திக் கொண்டே இருக்கிறது. தனது எஜமான் காரில் வந்து இறங்க மாட்டாரா என்ற ஆதங்கம் அதற்கு. பத்து நாட்களாக சரியாக சாப்பிடுவது கிடையாதாம். பழூல்-தங்க பாண்டியன் வளர்த்த பொமரேனியன் நாய்!

— ஸ்ரீநிவாசன்

வரை அமுதனை நாங்கள் சந்திக்கவில்லை; அவன் வரவில்லை.

பிற இடங்களில் ஒரு ரவுண்டு முடிந்து, மைலாப்பூர் டைரக்டர் ஆபீஸ் முன் நாங்கள் மீண்டும் கூடு கட்டத் தொடங்கியபோது அமுதனைச் சந்தித்தோம். வாய்ப்புக் கேட்கிறவனாக அல்ல! அவரது அஸிஸ்டெண்ட் டைரக்டராக!

"எப்படிடா முடிஞ்சது?"

"சிம்பிள்! நம்மை அவர் சேர்த்துக்கணும்ங்கறது அவருக்குக் கட்டாயமில்லை. ஆனா நமக்கு அது அவசியம்! முதல்ல நம்ம சின்ஸியாரிட்டியை நிரூபிக்கணும். இந்த மடம் இல்லாட்டா சந்தை மடம்னு ஓடற வழக்கம் கூடாது. அவர் துரத்தினாலும் நான் விடாம இங்கதான் வந்துட்டிருந்தேன். நிறைய திட்டு வாங்கினேன். 'ஏன்டா என் உயிரை எடுக்கறே'ன்னு ஒரு நாள் கேட்டார். 'ஸாரி சார்'னு சொல்லிட்டுப் போயிட்டேன். ஆனா மறுநாளும் வந்தேன்! என் முகம் அவருக்குப் பரிச்சயமாக வேண்டியது முக்கியம். அப்புறம் குரல். பிறகு என் இயல்பு அவருக்குப் பிடிச்சமானதா ஆகணும். அதனால அவரோ, அவரது அலுவலகத்தினரோ - என்ன திட்டினாலும் நான் முகம் சுளிக்கவே மாட்டேன். ஒரே ட்ரேட் மார்க் புன்னகைதான். ஒரு மனுஷன் எத்தனை நாளைக்குத்தான் இறங்கி வராமலே இருக்க முடியும்?

"ஒருநாள் என்னை உள்ளே கூப்பிட்டார். அதுவே பாதி வெற்றிதான். போனேன். கூச்சப்படாமல் என் விருப்பத்தை எடுத்துச் சொன்னேன். என் தகுதி, முயற்சிகள், ஆர்வம் பற்றி விரிவா, தெளிவா, அழுத்தமா சொன்னேன்!

"இந்த... வாசல்ல உட்கார்றது, உரத்த குரல்ல பேசறது, திரும்பத் திரும்ப தொந்தரவு பண்ணினது எல்லாம் உங்க கவனத்தைக் கவர மட்டும்தான் சார்! உண்மைல உங்ககிட்ட சேர்ந்து, படிக்க வேறு சில தகுதிகள் வேணும்னு தெரியும்'னு சொல்லி, நான் பார்த்த உலகப் புகழ் பெற்ற படங்கள், படித்த ஸ்கிரிப்டுகள், எடுத்துக் கொண்ட முயற்சிகள் பற்றி விரிவா சொன்னேன். அவர் ஒரு நல்ல கலைஞரில்லையா? என்னைப் புரிஞ்சிகிட்டு, சேர்த்துக்கிட்டார்!" என்றான் அமுதன்.

வாழ்த்துச் சொல்லி விடை பெற்றோம்.

ஒன்பது வருடங்கள்! நாங்கள் எல்லோரும் ஆளுக்கொரு திசையில் பிரிந்து, சினிமா முயற்சிகளிலிருந்து விலகி, வேறு வேறு தொழில்களில் ஐக்கியமாகிவிட்ட சூழலில் இன்று காலை தினத்தந்தியில் அமுதனின் முதல் பட அறிவிப்பு!

அவன் வாயுள்ள பிள்ளை மட்டுமல்ல; வாழ்வில் வெறியுள்ள பிள்ளையும்கூட! அதான், ஜெயித்து விட்டான்!

நாளை மறுதினம்...

சுதந்திரத் திருநாள்

அன்றுதான்

சாவி முதல் இதழ் வெளியாகும்

மகிழ்ச்சித் திருநாள்

**கிளி ஜோசியம் பார்க்கத் தவறாதீங்க!**






வார இதழ்

ஆசிரியர் : சாவி

ஆகஸ்ட் 15 அன்று எல்லா ஊர்களிலும் கிடைக்கும்.

ஸ்ரீரங்கா பப்ளிகேஷன்ஸ்,

ஏ-20, அண்ணாநகர், சென்னை - 600 102.

தொலைபேசி : 6263252, 6216463. ஃபேக்ஸ் : 044-6283242



# 11:29

மூலம் : டேனியல் ஸ்டீல்

தமிழில் : ரா.கி. ரங்கராஜன்

## இதுவரை...

இளம் மனைவியும் குடும்பத் தலைவியுமான பேஜ் ஒரே இரவில் இரண்டு கொடிய சோதனைகளுக்கு உள்ளாகியிருக்கிறாள். அவளுடைய பதினைந்து வயதுப் பெண் ஆலி என்ற ஆலிஸன், சிநேகிதி க்ளோவுடனும் இன்னும் இரண்டு பையன்களுடனும் காரில் சினிமாவுக்குச் செல்ல, இரவு பதினொன்றரை மணி சுமாருக்கு விபத்து ஏற்பட்டு, பிலிப் என்ற பையன் இறந்து விடுகிறான். எதிரில் காரை ஓட்டி வந்தவள், லாரா. இவள் ஒரு செனெட்டரின் மனைவி. போலீசார் அவளைக் கண்டுகொள்ளாத மாதிரி விட்டு விட்டு, பிலிப் குடிபோதையில் கார் ஓட்டியிருக்கலாம் என்று மறைமுகமாகப் பிரசாரம் செய்கிறார்கள். க்ளோவுக்குக் காலில் பலத்த காயம். இன்னொருவனான ஜேமி காயமின்றித் தப்புகிறான்.

பேஜின் மகள் ஆலிஸன், மூளையில் பயங்கரமாக அடிபட்டு நினைவில்லாமல் கிடக்கிறாள். அவள் பிழைப்பது கடினம் என்ற நிலைமை. தன் இரண்டாவது மகன் ஆண்டியைப் பக்கத்து வீட்டுத் தோழி ஜேனிடம் விட்டு விட்டு, வெளியூர் சென்றுள்ள கணவன் பிராடைக் கண்டுபிடித்துத் தகவல் சொல்ல முயலுகிறாள் பேஜ். இரண்டாவது அதிர்ச்சி! அவன் வெளியூருக்குப் போகவில்லை. தன்னுடன் வேலை செய்யும் ஸ்டிபானி என்ற பெண்ணுடன் சுற்றிக் கொண்டிருக்கிறான் என்று தெரிகிறது. எட்டு வருடமாக அவளுக்கும் தனக்கும் தொடர்பு இருந்து வருவதாகவும் அவளை விடவும் முடியாமல், பேஜிடம் சொல்லவும் முடியாமல் இருந்து வருவதாகப் பிராட் ஒப்புக் கொள்கிறான்.

காலில் அடிபட்ட க்ளோ என்ற பெண்ணின் தந்தையான தாரென்ஸன் பேஜிடம் பிரியம் காட்டுகிறான். ஹாலிவுட் எழுத்தாளனான அவன், ஆஸ்பத்திரியில் பேஜுடன் கூடவே இருந்து ஆறுதல் சொல்கிறான். அவன் மனைவி அவனையும் மூன்று குழந்தைகளையும் பிரிந்து லண்டனுக்குப் போய் விட்டவள். ஒண்டியாகக் குடும்பத்தைச் சமாளித்து வரும் அவன், பேஜ் மன உறுதியுடன் தைரியமாகப் பிரச்னைகளை எதிர்நோக்குவதற்கு வழிகாட்டியாக விளங்குகிறான்.

ஆலிஸன் பிழைப்பாளா, மாட்டாளா? பிராட் தன் திருட்டுக் காதலை விடுவானா மாட்டானா? இதுவே பேஜின் பிரச்னை.

ஆலிஸன் இன்னும் மயக்கம் தெளிந்து எழுந்திருக்கவில்லை. அவளுக்கு எப்போது என்ன நேருமோ என்ற பீதியிலேயே பேஜ் இருந்தாள். எனவே பத்திரிகைகளைப் பற்றியும் நிருபர்களைப் பற்றியும் தாரென்ஸன் சொல்வது எதுவும் அவள் காதில் விழவில்லை.

இருந்தாலும் தாரென்ஸன் சொன்னான் : "இந்தப் பத்திரிகைக்காரர்களைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும், பேஜ். ஒரு பிரச்னையைப் பற்



# 19

றித் தாங்களாகவே ஒரு அபிப்பிராயத்துக்கு வந்து விடுவார்கள். பிறகு அதற்கு ஏற்ற மாதிரி செய்தியைத் திரிப்பார்கள். இந்த செனெட்டரின் மனைவி லாரா விஷயத்திலும் அப்படித்தான் செய்கிறார்கள். செனெட்டரின் உதவியாளர்களும் அதற்குத் தகுந்தாற் போல் விவரம் தருகிறார்கள். லாரா சொக்கத் தங்கமாக்கும், அருமையான தாயாராக்கும், ரொம்ப ஜாக்கிரதையாகக் கார் ஓட்டுவாளாக்கும் என்றெல்லாம் நிருபர்களிடம் வர்ணிக்கிறார்கள்."

அவன் பேச்சில் கொஞ்சம் கொஞ்சம் பேஜுக்குப் புரிந்தது. "விபத்துக்குக் காரணம் அந்த அம்மாவாக இருக்கலாம் என்று நினைக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம். நான் நெடுஞ்சாலைப் போலீசாரை மறுபடி விசாரித்தேன். எதுவும் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை என்கிறார்கள். இரண்டு பேர் மேலும் சம

**'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம்**
**© டேனியல் ஸ்டீல்**

● மனைவி தன்னை மதிக்க வேண்டும் என்று விரும்பும் கணவர்கள் அனைவருமே உடன்பாளிகளாகவே இருக்கிறார்கள். — டேவிட் மார்டின்; தகவல் : ஆர். லோகநாதன்.

மாகப் பழிபோடுகிறார்கள். ஆனால், இறந்து போன பிலிப்பைப் பற்றி அவன் தோழர்கள் எல்லாரும் உயர்வாகவே சொல்லியிருக்கிறார்கள். காயமில்லாமல் தப்பினானே, ஜேமி, அவனும், பிலிப் குடிக்கவேயில்லை என்று சத்தியம் பண்ணு கிறான். அரை கிளாஸ் ஒயின் மட்டுமே குடித்துவிட்டு, பிறகு இரண்டு கப் பாலில் லாத காப்பி சாப்பிட்டான் என்கிறான். அதில் போதை ஏற்படுவதற்கு வழியே கிடையாது. ஆனால் செனெட்டரின் மனைவி, சாயந்தரத்துக்குப் பிறகு, தான் எந்தப் பானமும் குடிக்கவில்லை என் கிறாள். அவள் மரியாதைப்பட்டவள், நிதானமானவள், எல்லாருக்கும் தெரிந்த வள், வயதானவள் என்றெல்லாம் அவள் தரப்பில் ஆதரவு நிறைய இருக்கிறது. ஆகை யால் பிலிப்பின் மீதுதான் தப்பு என்கிற மாதிரி செய்தி வெளியிடுகிறார்கள். எனக் கென்னமோ இது நியாயமாகப்படவில்லை."

"எப்போதுமே குழந்தைகள் மீதுதான் பழி விழுகிறது," என்று வருத்தத்துடன் சொன் னாள் பேஜ். "அந்தப் பையன் ஜேமி, அவன் எப்படி?"

"முதலில் அவன் மீது எனக்குக் கடுங் கோபம் ஏற்பட்டிருந்தது. க்ளோ என்னிடம் பொய் சொல்லிவிட்டுக் காரில் போக அவன்தானே காரணம்? அவனைக் கொலை பண்ணினால் கூடப் பரவா யில்லை என்று ஆத்திரமாக இருந்தேன். ஆனால் அவன் நல்ல பிள்ளையாக இருக் கிறான். அவன் அப்பாவுடன் இரண்டு தரம் போனில் பேசினேன். அவன் ரொம்ப வருத்தமாக இருக்கிறானாம். க்ளோவைப் பார்க்க வேண்டும் என்கிறானாம். இன்னும் இரண்டு மூன்று நாள் போகட்டும் என்று சொன்னேன். பிலிப்பும் அவனும் ரொம்ப வருடமாக நெருங்கிய சினேகிதர்களாம்," என்ற தாரென்ஸன், "பிலிப்புக்கு நாளை சவ அடக்கம் நடக்கிறது. நீ வருவாயா?" என்றான்.

சற்று யோசனை செய்துவிட்டு, "வரு கிறேன்," என்றாள் பேஜ். போகலாமா வேண்டாமா என்றுதான் முதலில் யோச னையில் இருந்தாள் அவள். ஆனால் போகத்தான் வேண்டும் என்று இப்போது தோன்றியது. 'அவர்களுக்குப் பிள்ளை போய் விட்டான். நமக்குப் பெண் அனேக மாகப் போய் விட்டாள்' என்று எண்ணிக் கொண்டாள். எவ்வளவு பெரிய துயரத்தில் அவர்கள் ஆழ்ந்திருப்பார்கள் என்பதை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது.

"பிராட் வருவார் இல்லையா? இல்லா விட்டால் நான் வந்து அழைத்துப் போகி றேன். சடங்குகள் பகலுக்கு மேல்தான் இருக்கும். குழந்தைகள் கூட வருவார்கள். எப்படியும் சவ அடக்கத்துக்குத் தனியாய்ப் போவது உனக்கு என்னவோ போலிருக்கும்."

'சவ அடக்கம்' என்ற வார்த்தையைக் கேட் கும்போதே பேஜுக்கு உடம்பில் ஒரு நடுக்கம் ஏற்பட்டது. தெய்வமே! அலிசுக்கு இப்படிப் பட்ட கதி ஏற்படாமல் இருக்க வேண்டும்...

"பிராட் வருவார் என்று தோன்றவில்லை. சந்தேகம்தான்," என்றாள். அவனுக்குப் பிலிப் பிடம் அனுதாபம் இல்லையென்று அவளுக் குத் தெரியும். இன்னும் சொல்லப் போனால் விபத்துக்கு அவன்தான் காரணம் என்று கண்ட படி அவனைத் திட்டிக் கொண்டிருக்கிறான்...

அவள் மனத்தில் ஓடும் எண்ணம் தாரென் ஸனுக்குப் புரிந்தது போலும். "பிராட் என்ன சொல்கிறார்? க்ளீவ்லண்டில் இந்தச் செய்தியைக் கேட்டபோது ரொம்ப ஷாக்காகியிருப்பாரே?" என்றான்.

பிராட் க்ளீவ்லண்டுக்குப் போகவேயில்லை என்று சொல்லிவிட ஒரு வினாடி நினைத்தாள் பேஜ். அது சரியல்ல என்று தோன்றியது. "அவ ருக்கு அதிர்ச்சிதான். ஆனால் என் மீதுதான் ரொம்பக் கோபம். அலிஸனை நான் சரியான படி கவனிக்கவில்லை, அவள் எங்கே போகி றாள், என்ன செய்கிறாள் என்று விசாரிக்க வில்லை, அவள் நடவடிக்கைகளைப் பற்றிச் சந்தேகப்படாமல் இருந்து விட்டேன் என் கிறார். அதுவும் ஓரளவுக்கு உண்மைதான். நான் மட்டும் இன்னும் கொஞ்சம் எச்சரிக்கையாக இருந்திருந்தால்..." என்று சொல்கையில் தாரென் ஸன் குறுக்கிட்டான்.

"நீ அப்படியெல்லாம் நினைக்காதே," என் றான் அவன். "குழந்தைகளை நம்பத்தான் வேண்டும். எப்போது பார்த்தாலும் போலீஸ் காரன் மாதிரி அவர்களை வேவு பார்த்துக் கொண்டேயிருக்க முடியுமா? பொய் சொல்லி விட்டு வெளியே போவது எல்லாக் குழந்தை களுக்கும் வழக்கம்தான். நம் விஷயத்தில் அது விபரீதமாகி விட்டது. பிராட் சொன்னதற்காக நீ வருத்தப்படாதே."

பேஜ் வெகு நேரம் எதுவும் பேசாமல் இருந் தாள். குழந்தைகளுக்கு விபத்து, வீட்டில் யாரோ ஒருவர் மரணம் இப்படி ஏதாவது நேர்ந்து பல தாம்பத்தியங்கள் முறிந்து போயிருக்கின்றன என்பது அவளுக்கு ஞாபகம் வந்தது.

அதுவரை சொல்ல வேண்டாமென்றிருந்த வார்த்தை அவளையும் மீறி வாயில் வந்து விட் டது. "பொதுவாகவே எனக்கும் பிராடுக்கும் கொஞ்ச நாளாகப் போதவில்லை," என்றாள்.

ஏன் அதைச் சொன்னோம் என்று அவ ளுக்கே தெரியவில்லை. வாழ்க்கையில் இப்படி யொரு துன்பத்தையும் தனிமையுணர்வையும் இதுவரை அவள் அனுபவித்ததில்லை. யாரிட மாவது சொல்ல வேண்டும் போலிருந்தது.

"பிராடும் நானும்..." என்று மறுபடி சொல்ல

ஆரம்பித்தாள். சொல்ல முடியவில்லை.

''புரிகிறது,'' என்றான் அவன். ''இப்படியொரு விபத்து ஏற்பட்டிருக்கும் போது எந்தக் குடும்பத்திலும் கொஞ்சம் குழப்பம் ஏற்படத்தான் செய்யும்.''

''எங்கள் பிரச்னை இந்த விபத்தினால் ஏற்படவில்லை. வேறே ஒன்று. அது இப்போது தான் தெரிந்தது. குடும்பம் இருக்கிற நிலைமையில் இந்தக் கஷ்டம் வேறே!'' பேஜ் பெருமூச்சு விட்டாள்.

அவளுக்கும் அவள் கணவனுக்குமிடையே ஏதோ தகராறு என்று தாரென்ஸனுக்குப் புரிந்தது. என்னவென்று புரியவில்லை. ஒருவேளை பிராட் வேறு யாராவது பெண்ணுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருப்பானோ? இருக்காது. பிராட் அப்படிப்பட்டவனல்ல. மனைவிக்குத் துரோகம் செய்யக்கூடியவன் என்று தோன்றவில்லை...

''நெருக்கடிகள் நிரம்பியிருக்கிற சமயத்தில் நீயாக எதையும் கற்பனை செய்து கொள்ளாதே,'' என்றான்.

''ஒருவேளை நிஜமாக இருந்து விட்டால்? இத்தனை வருடமாக நான் நினைத்திருந்ததெல்லாம் தப்பு என்றாகி விட்டால்? நான் நம்பியதெல்லாம் பொய்யென்று ஆகிவிட்டால்?''

''கொஞ்ச நாள் பொறுத்திரு. தன்னாலே தெரியும்.''

தன் துன்பங்களையும் மறந்தவளாக அவளுக்குச் சிரிப்பு வந்தது. ''நீங்கள் குடும்ப உறவு ஆலோசகராக வேலை பார்க்க வேண்டியவர்,'' என்றாள் புன்னகையுடன்.

''அனுபவத்தினால் சொல்கிறேன். டானாவுடன் குடும்பம் நடத்தி நான் கஷ்டப்பட்ட மாதிரி உலகத்தில் யாரும் பட்டிருக்க மாட்டார்கள்,'' என்றான் தாரென்ஸன். ''அதிலிருந்தெல்லாம் மீண்டாயிற்று. நானும் என் குழந்தைகளும் சந்தோஷமாக இருக்கிறோம். என் குழந்தைகள்தான் எனக்கு முக்கியம். அதுவே போதும். சரியில்லாத மனைவியுடன் குடும்பம் நடத்துவதைக் காட்டிலும் தனியாக வாழ்வதே மேல்'' என்று அவன் சொல்லிக் கொண்டிருந்த போது அவர்களை நோக்கி ஒரு டாக்டர் வந்தார். அவர் முகத்தில் கவலை தோய்ந்திருந்தது.

அப்போது நள்ளிரவைத் தாண்டிவிட்ட நேரம். வீட்டுக்குப் புறப்படுவதாக இருந்த தாரென்ஸன், டாக்டர் வருவதைக் கண்டதும் நின்று விட்டான்.

''என்ன?'' என்றார்கள் இருவரும் ஒரே குரலில்.

''ஆலிஸனின் நிலைமை கொஞ்சம் கவலையாக இருக்கிறது,'' என்றார் டாக்டர்.

''மூளையில் வீக்கம் ஏற்படாமல் இருக்க வேண்டுமே என்றுதான் கவலைப்பட்டோம். ஏற்பட்டிருக்கிறது. மண்டையோட்டிலும் காயத்திலும் அழுத்தம் அதிகரித்திருக்கிறது...''

''ஐயோ, அப்படியானால்...'' என்று பதறினாள் பேஜ்.

''மூன்றாவது காயம் என்று நாங்கள் சொன்னோமே, அது இதுதான். ரத்தம் கட்டி தட்டாமல் இருக்க வேண்டும். அதுதான் இப்போது எங்கள் கவலை,'' என்று சொல்லி விட்டுச் சென்றார் அந்த டாக்டர்.

தாரென்ஸன் வீட்டுக்குப் போகவில்லை. பேஜுக்குத் துணையிருப்பதாகக் கூறிப் பின்தங்கி விட்டான்.

சற்றைக்கெல்லாம் தலைமை சர்ஜன் வந்தார். ''மூளையில் வீக்கம் ஏற்பட்டிருப்பதால், ரத்த அழுத்தம் ஏறிவிட்டது. நாடித் துடிப்பு குறைந்திருக்கிறது. பார்க்கலாம்,'' என்று சொல்லிவிட்டுப் போனார்.

இரவு ஒரு மணியாயிற்று.

ஆலிஸன் பிழைக்க மாட்டாள் என்றே தோன்றியது. பேஜினால் அதை நம்ப முடியவில்லை. 'ஒரு மணி நேரம் முன்பு நாம் போய்ப் பார்த்தபோது கூட விபரீதமாய் ஒன்றும் இல்லையே? நல்லபடி இருந்தாளே?' என்று தாரென்ஸனிடம் புலம்பினாள்.

ஆனால் இரண்டு நாள் முன்பு ஆலிஸன் மிக நன்றாக இருந்தவள்தானே? இப்போது இந்த நிலைமை... ஒரு நிமிட எச்சரிக்கை கூடக் கொடுக்காமல் வாழ்க்கை தலைகீழாக மாறி விடுகிறது!

பொழுது விடிந்து கொண்டிருந்தது. பிராடுக்குச் சொல்ல வேண்டுமென்று பல முறை போன் பண்ணிப் பார்த்துவிட்டாள் பேஜ். மணி அடித்துக் கொண்டிருந்தது. பிராட் எழுந்து எடுக்கக் காணோம்.

கடைசியில் பொறுக்க மாட்டாமல், தாரென்ஸனிடம், ''தயவுசெய்து என் சிநேகிதி ஜேனின் வீட்டுக்குப் ஃபோன் செய்து நிலைமையைச் சொல்லுங்கள். அவள் என் வீட்டுக்குப் போய் பிராடை எழுப்புவாள். அவரை இங்கே அனுப்பிவிட்டு, ஆண்டிக்குத் துணையாக அவளை இருக்கச் சொல்லுங்கள்,'' என்றாள்.

தாரென்ஸன் ஃபோன் செய்து விட்டுத் திரும்பி வந்தவன் உதட்டைப் பிதுக்கினான்.

''பிராட் ராத்திரி வரவுமில்லையாம். ஆண்டியை அழைத்துப் போகவும் இல்லையாம். ஆண்டி ஜேன் வீட்டில்தான் தூங்கிக் கொண்டிருக்கிறான்.''

''ராத்திரி வரவில்லையா?.. ஃபோனாவது செய்தாராமா?''

''இல்லையாம்.''

வெறிபிடித்த மாதிரி ஆத்திரம் மூண்டது பேஜின் மனத்தில்.

பெற்ற மகள் இந்த நிமிடமோ அடுத்த நிமிடமோ என்கிற மாதிரி சாகக் கிடக்கிறாள்! தகப்பன் கள்ளக் காதலியின் மடியில் தஞ்சம் கிடக்கிறான்! சே!

(தொடரும்)

● பணத்தை நீங்கள் வைத்துக் கொள்ளலாம்; ஆனால் பணம் உங்களை வைத்திருக்கக் கூடாது. - பார்ஜ் டனிதேன்; தகவல் : ஆர். லோகநாதன்.



இசை மட்டும்தான் இளையராஜாவின் மொழி என்பதில்லை. அவர் கேமரா மூலமும் பேசுகிறார். ஆம்; அவர் மிகச் சிறந்த புகைப்படக் கலைஞரும் கூட. அவர் பத்திரிகையாளர்களிடம் அதிகம் பேசுவதில்லை என்கிற எண்ணம் பொய்யாகும்படி நம்மிடம் சுமார் இரண்டரை மணி நேரம் பேசினார். தாம்

**எடுத்த புகைப்படங்களைக் காட்டினார். தமக்குப் பிடித்த பாடல்களையும் நம்மிடம் பாடிக் காட்டினார்....**

# "சிறகை விரிக்கும் அம்மி வடிக்கத் தெரியாதா?"

**கல்கி** : 'தேவதை' படம் பார்த்தோம். ரீ-ரெகார்டிங்கி லேயே அப்படத்தின் கதையைச் சொல்லியிருக்கிறீர்கள். Fantasy விஷயங்கள் என்றாலே நீங்கள் நாலு கால் பாய்ச்சலில் பாய் கிறீர்கள்.... குறிப்பாக fantasy யின் மேல் உங்களுக்கு ஒருவித லயிப்பு வருவதற்கு என்ன காரணம்?

**இளையராஜா** : Fantasy தவிர மற்ற விஷயங்களில் நான் நாலு காலில் பாயவில்லை என்கிறீர்களா?

**கல்கி** : அப்படிச் சொல்லவில்லை. Fantasy மேல் உங்களுக்கு ஒரு தனி லயிப்பு இருப்பதாக உணர்கிறோம்.

**இளையராஜா** : நீங்கள் வியக்கிற அளவுக்கு அதில் ஒரு வியப்பு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இந்தப் பதில் உங்களுக்கு ஒரு மனநிறைவை அளிக்காது என்பது எனக்குத் தெரியும். (சிரிப்பு). உண்மையைச் சொல்லப் போனால் ஒரே படத்துக்கு ஆயிரம் விதமாக இசை யமைக்கலாம்! நான் இப்போது செய்திருக்கிற படத் தில்தான் நாலுகால் பாய்ச்சலில் செய்திருக்கிறேன். மற்ற படங்களில் மூன்று கால் பாய்ச் சலில்தான் செய்திருக்கிறேன் என்று நீங்கள் சொல்வது உங்கள் மனக் கற் பனையே தவிர, வேறில்லை. என்ன முடியும் என்ன முடியாது என்ப தற்கு Sky is the limit to create something.... இசை என்பது வானம் மாதிரி ஒரு விரிந்த விஷயம். எந்த ஸ்வரத்தை – எந்த வாத்தியத்தை வேண்டு மானாலும் எந்த இடத்திலும் கையாள லாம்...

**கல்கி** : அப்படியானால் நாங்கள் உப யோகப்படுத்திய 'நாலு கால் பாய்ச்சல்' என்பதை எந்தப் படத்தில் நீங்கள் கை யாண்டிருப்பதாக நீங்கள் சொல்வீர்கள்?

**இளையராஜா** : இதுவரைக்கும் நான் அப்படியெல்லாம் பாயவில்லை! இதுவரைக் கும் நான் செய்திருப்பதெல்லாம் வெறும் அப்பளமும் ஊறு காயும்தான்!

**கல்கி** : நீங்கள் அறுசுவை உணவையே பரிமாறுகிறீர்கள் என்றுதான் நாங்கள் உணர்கிறோம்.

**இளையராஜா** : வெறும் அப்பளம் ஊறுகாய்க்கே இப்படிச் சொல்கிறீர்கள் என்றால், நான் அறுசுவை உணவை நிஜமாகவே பரிமாறினால் நீங்கள் என்ன ஆவீர்கள்? (சிரிப்பு). அப்படி யெல்லாம் பரிமாறுகிற சந்தர்ப் பம் எனக்கு இன்னும் வர வில்லை.

**கல்கி** : என்ன இப்படிச் சொல்கிறீர்கள்?

**இளையராஜா** : சினிமா என்பது ஒருவித ஃபார்முலா வாகப் பழகிப் போன விஷயம். இதற்குத்தான் மக்கள் தலை யாட்டுவார்கள். என்னிடம் கொண்டு வரப்படுகிற பாத் திரம் காலியாக இருந்தால் தானே நான் அதில் ஏதாவது போட முடியும்! நீங்கள் கொண்டு வருகிறபோதே அந்தப் பாத்திரத்தில் எதையா வது போட்டு நிரப்பித்தான் கொண்டு வருகிறீர்கள். அதற்கு மேலும் அதில் நான் எதைப்



போட முடியும்? எல்லா சினிமாவிலும் லவ் சாங் வருகிறது; கிண்டல் பண்ணுகிற பாடலும் வருகிறது. இதில் யார் என்ன புதுமை செய்து விட முடியுமென்று கருதுகிறீர்கள்?

**கல்கி :** அப்படியொரு ஆதர்சமாக, ஒரு படம் பண்ண வேண்டும் என்கிற கனவு உங்களுக்கு இருக்கிறதா?

**இளையராஜா :** சினிமா என்பது ஒரு வரையறைக்குட்பட்டதுதான். இரண்டு மணி நேரத்தில் முடிந்து விடுகிற ஒரு விஷயம். அதில் வருகிற ஒரு மூன்று நிமிஷப் பாடலில் ரசிகர்களைக் கவர்ந்து இழுத்துக் கட்டிப் போட வேண்டுமானால், அதற்கான கதையோட்டமும் காட்சியமைப்பும் அந்தப் படத்தில் இருக்க வேண்டும் அல்லவா!

**கல்கி :** இதுமாதிரியான வரையறைகள் சினிமாவில் எப்போதும் இருக்கும்தானே!

**இளையராஜா :** இப்படிப்பட்ட சூழ்நிலைகளிலும் உங்கள் மனத்தை இழுத்திருக்கிறேனல்லவா! எத்தனையோ ஆன்மீகவாதிகள் சொல்லியும் கட்டுப்படாத உங்கள் மனது அந்த மூன்று நிமிஷ நேரம் கட்டுப்பட்டிருக்கிறதல்லவா?

**கல்கி :** அதை இன்னும் பூரணமாகச் செய்ய வேண்டும் அல்லவா!

**இளையராஜா :** அதற்கான சாத்தியக் கூறுகள் சரியாக அமைய வேண்டும். அப்போதுதான் செய்ய முடியும். நான் எது போட வேண்டுமானாலும் ஒரு பாத்திரத்தில் தான் போட வேண்டியிருக்கிறது. நான் போடுகிற எதுவும் அந்தந்தப் பாத்திரங்களின் வடிவத்தைத்தான் எடுத்துக் கொள்கின்றன - தண்ணீரை எந்தப் பாத்திரத்தில் ஊற்றுகிறோமோ அந்தப் பாத்திரத்தின் வடிவத்தையே தண்ணீர் எடுத்துக் கொள்கிற மாதிரி.... ஊற்றுவது தண்ணீரோ, பாலோ, அமுதமோ அதை வாங்கியவனுக்கு அது உடலில் சேர வேண்டும்.

**கல்கி :** இத்தனை கட்டுப்பாடுகளையும் மீறி, எது செய்தாலும் அழகாகச் செய்ய வேண்டும் என்று தேடித் தேடிக் கொடுக்கிற முயற்சிகளையே உங்கள் பாடல்களில் பார்க்க முடிகிறது... அனுபவிக்க முடிகிறது. ஆனால் சினிமா என்பது எல்லா நேரங்களிலும் அழகாக இருப்பதில்லை. சில நேரங்களில் கொடுமையாகவும் ஆபாசமாகவும் இருக்கிறது. அழகையே தேடிக் கொண்டிருக்கிற உங்களால் எப்படி இது மாதிரியான சந்தர்ப்பங்களில் மனச்சாந்தியோடு செயல்பட முடிகிறது?

**இளையராஜா :** படத்தில் முரடர்கள் வந்தாலும் வன்முறைக் காட்சிகள் வந்தாலும் நான் சப்தஸ்வரங்களோடு மட்டும்தானே பேசிக் கொண்டிருக்கிறேன்; அவர்களோடு நான் பேசுவதில்லையே! அதனால் மனத்தில் எந்தவிதமான வேறுபாடுகளோ, அழுத்தமோ இல்லை. எப்போதும் இயல்பாக ஓடிக் கொண்டிருக்கிற நதியின் ஓட்டம்தான் என்னிடம் இருக்கிறது.

**கல்கி :** அதாவது ஓரளவு விலகியிருந்துதான் செய்வதாகச் சொல்கிறீர்கள்...

**இளையராஜா :** அப்படியில்லை. படத்துக்கு என்ன தேவையோ அதைச் செய்து விட்டுப் போவதுதானே புத்திசாலித்தனம்!

**கல்கி :** ஒருவகையில் நீங்கள் தத்துவார்த்தமாக விலகியிருக்கிறீர்கள் இல்லையா?

**இளையராஜா :** அப்படியில்லை. படத்தின் இறுதியில் படத்தில் என்ன மிஸ் ஆகிறது, எதைச் சரிபண்ண வேண்டும் என்பது உங்களை விட எனக்கு நன்றாகத் தெரியும். விலகியிருந்தால் ஈடுபாடு எப்படி வரும்? ஈடுபாடில்லாமல் செய்யும் எந்தக் கலையும் பார்க்கிறவர்களையோ, கேட்கிறவர்களையோ ஈர்க்காது. உயிரற்ற உடல் போலாகிவிடும். அப்படி ஒரு படைப்பு நமக்குத் தேவையா? விலகியிருந்தால் வேலை நடக்காது. ஒரு குடும்பத்தில் கணவன் மனைவிக்குள் கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. ஆனால் அது பெரிய விஷயமில்லை. வாழ்க்கை ரொம்ப முக்கியம். படைப்பு ரொம்ப முக்கியம். மனதுக்குப் பிடிக்கிறது, பிடிக்கவில்லை; நன்றாயிருக்கிறது, நன்றாயில்லை... அது அதுக்கப்புறம்.

**கல்கி :** எந்தப் படத்திலாவது உங்களுக்கு மிகவும் ஏமாற்றமாயிருந்தது என்று சொல்ல முடியுமா?

**இளையராஜா :** ஆரம்ப காலங்களில் எத்தனை எத்தனையோ...

**கல்கி :** இப்போது?

---

**''மருந்துக் கடைக்காரர் வீட்டுக் கோழியைச் சுத்தி என்ன இவ்வளவு கூட்டம்?''**

**''அது போடுற முட்டையிலேயெல்லாம் 'மேனுஃபேக்சரிங்' தேதியும், 'எக்ஸ்பயரி' தேதியும் அச்சடிச்சு வருதாம்!''**

**— மேல்மங்கலம் பத்ரா**



**இளையராஜா :** இப்போது பழகிப் போய் விட்டது! (சிரிப்பு).

**கல்கி :** ஏமாற்றம் பழகிப் போய் விட்டதா அல்லது ஏமாற்றம் இல்லாமல் செய்வது பழகிப் போய்விட்டதா?

**இளையராஜா :** ஏமாற்றம் பழகிப் போய் விட்டது! (சிரிப்பு).

**கல்கி :** சினிமா என்கிற எல்லைகளுக்கு அப்பாற்பட்டு – உங்கள் சொந்த ஆத்ம திருப்திக்கு ஏற்ப 'சிம்பொனி' பண்ணுகிற வாய்ப்புக் கிடைத்ததே!

**இளையராஜா :** ஆத்மாவுக்குத் திருப்தி என்பது தேவையில்லை. திருப்தி அதிருப்திக்கெல்லாம் அப்பாற்பட்டது ஆத்மா...

**கல்கி :** ரொம்பவும் தத்துவார்த்தமாகப் போக வேண்டாம். உங்களுக்கு நிறைவானது என்று வைத்துக் கொள்ளலாம்....

**இளையராஜா :** அதுதான் உயர்ந்த இசை என்பதில்லை. மட்டமானது, உயர்ந்தது என்று மனிதர்களுக்குண்டான குணாதிசயங்கள் இசைக்குக் கிடையாது. இசை என்பதே ஒரு மென்மையான உணர்வு. அந்த உணர்வை இங்கு கொடுக்க முடியவில்லையே என்பதில் எனக்கு வருத்தம் இல்லை. இங்கு அதன் அளவு நிர்ணயிக்கப்பட்டது. என்ன செய்தாலும் அதற்குள்தான். இங்கு வருகிற லவ் டூயட்டில் நாற்பது பேர் கூட வருகிறார்கள். டூயட் முடிந்ததும் அவர்கள் போய் விடுகிறார்கள். அவர்கள் எங்கிருந்து வந்தார்கள்; எங்கே போனார்கள் என்பதே தெரிவதில்லை. (கதை நாயகன் கிளைமாக்ஸில் மாட்டிக் கொண்டிருக்கிற நேரத்தில் அந்த நாற்பது பேரும் வந்து காப்பாற்றுவதில்லை.) பாடலுக்கு மாத்திரமே அவர்கள் வந்து விட்டுப் போகிறபோது, அதில் என்ன வெரைட்டி கொடுக்க முடியும்? என்ன புதுமை செய்துவிட முடியும்? இங்கே ஒரு சிந்தனையாளன் தேவையில்லை. மெகானிகல் ரீ-புரொடக்ஷன் செய்கிற ஓர் ஆள் போதும். இதெல்லாம் தவறு என்றும் நான் சொல்லவில்லை. தங்களது சொந்தக் கவலைகளை மறப்பதற்காகத் தியேட்டர்களுக்கு வரும் ரசிகர்களிடம் மேலும் அவர்கள் கவலைப்படுகிற மாதிரியான விஷயங்களைச் சொல்வதை விட இப்படி கையைக் காலை ஆட்டி டூயட் பாடுவது நல்லதுதானே! (சிரிப்பு).

**கல்கி :** சினிமாவிலிருந்து இப்படி விலகி நின்று பேசும் உங்களால் எப்படி இதிலேயே தொடர்ந்து இருக்க முடிகிறது?

**இளையராஜா :** வேலை செய்கிறபோது என் கவனமெல்லாம் வேலையில்தானே இருக்கும். இதிலெல்லாம் கவனம் இருக்க முடியுமா என்ன? அதெப்படி நான் விலகியிருப்பதாக மீண்டும் மீண்டும் சொல்கிறீர்கள்?

**கல்கி :** உங்கள் இசை சம்பந்தமாகச் சொல்லவில்லை. சினிமா பற்றி இப்படியொரு நுணுக்கமான பார்வையை வைத்துக் கொண்டு...

**இளையராஜா :** ஆரம்பத்திலிருந்தே எனது பார்வை இப்படித்தான். என்னுடைய வேலையில்தான் நான் கண்ணும் கருத்துமாக இருந்து கொண்டிருக்கிறேன். ஏனெனில் தயாரிப்பாளர்களுக்குப் போட்ட பணம் கிடைக்க வேண்டும் என்கிற நிலை. அப்படிப்பட்ட நிலையில் அவர்கள் ஒரு நம்பிக்கையோடு செய்கிறபோது, நான் அந்த நம்பிக்கையைக் குலைக்கக் கூடாது. அவர்களின் நம்பிக்கை போலவே படம் சிறப்பாக வரலாமே! யார் கண்டது! ஆனால் அதற்கும் எனது பார்வைக்கும் சம்பந்தமில்லை. வெளிநாடுகளிலெல்லாம் ஒரு சிறு உணர்வை மையமாக வைத்துக் கூட எவ்வளவு அழகாகச் செய்கிறார்கள். மலையாளப் படங்களில் கூடச் சிறப்பாகச் செய்கிறார்கள். நான் இசையமைக்காத சில மலையாளப் படங்களைக் கூட அண்மையில் பார்க்கிற வாய்ப்புக் கிடைத்தது. நன்றாகச் செய்கிறார்கள். அங்கேயும் நமது படங்கள் போன்ற பாடல் காட்சிகளும் வரத்தான்

செய்கின்றன. ஆனாலும் இதையெல்லாம் மீறி, கதையும் கதையோட்டமும் கதையமைப்பும் பாத்திரத் தன்மையும் கெடாமல் நன்றாகச் செய்கிறார்கள்...

**கல்கி :** கலையம்சம் இருக்கிறது....

**இளையராஜா :** அந்தக் கலையம்சம் இயல்பாக இருக்க வேண்டும் என்பது ரொம்பவும் முக்கியம். படத்தில் வருகிற ஒவ்வொரு கேரக்டரும் அந்தந்தக் கேரக்டருக்கான செயல்களைத்தான் செய்ய வேண்டுமே தவிர, நம்முடைய புத்திசாலித்தனம் அந்தக் கேரக்டர்களில் வெளிப்பட்டு விடக் கூடாது. அப்படி வெளிப்பட்டால், அது அந்தக் கேரக்டர் செய்கிற மாதிரி இருக்காது. நான் அவனுடைய உடம்பில் ஆவியாகப் புகுந்து கொண்டு செய்வது போல்தான் இருக்கும். கலையம்சம் என்பது வேண்டுமென்றே செய்வதுதான் என்றாலும் கூட அதுவும் இயல்பாக இருக்க வேண்டும். ஆறு அழகாகத் தெரிவதற்குக் காரணம் அது இயல்பாகச் செல்வதால்தான்.



நிருபர் : நீங்க இது வரைக்கும் எத்தனை சிறுகதைகள் எழுதியிருக்கீங்க?
எழுத்தாளர் : சரியா ஞாபகமில்லை!
நிருபர் : சுமாரா சொல்லுங்க போதும்.
எழுத்தாளர் : கிட்டத்தட்ட ரெண்டு இருக்கும்!

— ஏ.ஜி. வல்லபதாஸ்

**கல்கி :** இசை என்பது மென்மையான உணர்வு என்று சொன்னீர்கள். ஆனால் மென்மையான உணர்வுகள் இல்லாத படங்களிலும் எப்படி உங்களால் இசை மென்மையானது என்று வேலை செய்ய முடிகிறது? உதாரணத்துக்கு ஒன்று... 'அம்மா என்று அழைக்காத உயிரில்லையே...' என்ற பாடலுக்கும் 'நேத்து ராத்திரி யம்மா...' பாடலுக்கும் உணர்வுபூர்வமாக நிறைய வித்தியாசம் இருக்கிறதே!

**இளையராஜா :** இசை மென்மையான உணர்வுதான்; படங்கள் அதை வெளிப்படுத்தினாலும் இல்லாது போனாலும் இசை மென்மையான உணர்வுதான். ஆனால் அதன் அழுத்தம் எதற்கும் இருக்காது. 'அம்மா என்று அழைக்காத...' பாட வேண்டிய சூழ்நிலையில், 'நேத்து ராத்திரி யம்மா...'வைப் பாடவில்லையே! (சிரிப்பு).

**கல்கி :** இரண்டு பாடல்களும் இருவேறு உணர்வுகளைத் தூண்டுகிறவை. அப்போது உங்கள் மனோநிலை எப்படி இருக்கும்?

**இளையராஜா :** எல்லா மனிதர்களுக்குமே ஆசாபாசங்கள் உண்டு. என்னை மாத்திரம் ஒரு துறவியாகக் கற்பனை பண்ணிக் கொண்டு இப்படிக் கேட்கிறீர்கள் என்று கருதுகிறேன்... நகைச்சுவை உணர்வு, பாலுணர்வு என்று எல்லாமே எனக்குள்ளும் உண்டு. எனக்குப் பாலுணர்வின் மேல் நாட்டம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் அப்படியொரு சூழ்நிலைக்கு இசையமைக்கிறபோது அதையொரு வடிகால் மாதிரி வெளிப்படுத்தித் தானே ஆக வேண்டும். இது எல்லோருக்குமே இருப்பதுதானே!

**கல்கி :** இருப்பதுதான். ஆனாலும் பல நேரங்களில் it is not good taste என்று ஆகிவிடுகிறதல்லவா!

**இளையராஜா :** வெறும் இலக்கியம் மட்டும் பார்த்தால் எப்படிப் பத்திரிகை நடத்த முடியாதோ அப்படித்தான் இதுவும். எதுவும் இலைமறை காய்மறைவாகவும் கொச்சையாக இல்லாமலும் இருக்க வேண்டும். கொச்சையாக ஒரு பாடல் வேண்டும் என்று ஒரு சூழ்நிலை உருவாக்கப்படும்போது, அதையும் நான் நூறு சதவிகித ஈடுபாட்டோடுதான் செய்ய வேண்டியிருக்கிறது. அப்படி நான் செய்யவில்லையென்றால் என்னுடைய creation- ல் தப்பு இருக்கிறதாக ஆகிவிடுமே!

**கல்கி :** அப்படியொரு சூழ்நிலைக்கு இசையமைக்க வேண்டியிருக்கிறதே என்று நீங்கள் வருத்தப்பட மாட்டீர்களா?

**இளையராஜா :** அழகான சிற்பத்தை வடிக்கும் சிற்பி, அம்மி வடிக்கத் தெரியாதவனாயிருப்பானா? அல்லது அம்மி வடிக்க வருத்தப்படுவானா? அந்தப் பொருள் எல்லோர் வீட்டிலும் உபயோகப்படுகிறதே என நினைக்க மாட்டானா? இருந்தாலும் ஒரு நூறு அம்மி செய்து முடித்ததும் ஒரே ஒரு சிற்பமாவது செய்ய சந்தர்ப்பம் வராதா என்ற வருத்தம் ஒரு உண்மையான சிற்பிக்கு இருக்கும். அதைத்தான் மக்கள் விரும்பிக் கேட்கிறபோது என்ன செய்வது?

**கல்கி :** எவ்வளவோ நல்ல விஷயங்களை விட்டு விட்டு இந்த மக்கள் இதைத்தானே விரும்புகிறார்கள் என்கிற வருத்தமும் வருமே!

**இளையராஜா :** உண்டு. உண்டு. உண்டு. இதைத்தான் பழகிப் போய் விட்டது என்று நான் முன்பே கூடச் சொன்னேன்.

**கல்கி :** நீங்கள் மிகவும் விரும்பி ரசித்துச் செய்த பாடல் ஏதாவது மக்கள் மத்தியில் எடுபடாமல் போய் விட்ட சம்பவம் ஏதும் இருக்

கிறதா?

**இளையராஜா** : படங்கள் வேண்டுமானால் ஓடாமல் போயிருக்கலாமே தவிர, நல்ல பாடல்கள் எதுவுமே மக்களால் விரும்பப்படாமல் போனதில்லை. நல்ல பாடல்கள் இருந்தும் படம் ஓடாவிட்டால் வருத்தம் வரத்தான் செய்யும்.

**கல்கி** : ஒரு காலகட்டத்தில எல்லாப் பிரபல டைரக்டர்களுமே உங்களிடம்தான் வந்தார்கள். நீங்கள் இல்லாத படங்களே இல்லை என்று கூடச் சொல்லலாம். பிறகு அந்த நிலை மாறி, பிரபல டைரக்டர்களுக்கு இளையராஜா இசையமைப்பதில்லை என்கிற நிலையும் வந்தது. அதுகுறித்துப் பல்வேறு விதமான வதந்திகளும் வந்தன. ஆனால் உங்கள் தரப்பிலிருந்து எந்தவிதமான பதிலுமே சொல்லப்படவில்லை. அந்த நிலைக்கு என்னதான் காரணம்?

**இளையராஜா** : இந்தக் கேள்வியை நீங்கள் அவர்களிடம்தான் போய்க் கேட்க வேண்டும். அவர்கள்தான் பதிலும் சொல்ல வேண்டும். என்னிடம் ஒரு காரணமும் இல்லை. (சிரிப்பு.)

**கல்கி** : How to name it, Nothing but wind என்று இரண்டு ஆல்பம் கொடுத்தீர்கள். அப்புறம் ஏன் கொடுக்கவில்லை?

**இளையராஜா** : அதற்கான நேரம் ஒதுக்க முடியாததுதான் காரணம்.

**கல்கி** : How to name it-ல் 'I met Bach in my house' பாடலில் ஒருவர் வீட்டுக்குள் வருகிற மாதிரியும் அவரைக் கட்டித் தழுவி வரவேற்கிற மாதிரியும் காட்சி ரூபமான ஒரு விஷயத்தை இசையின் மூலமாகவே கண்முன் கொண்டு வந்திருக்கிறீர்கள். அதை எப்படிச் செய்தீர்கள்?

**இளையராஜா** : அது Original composition of Bach. அதில் வருகிற இந்தியன் மெலடி மட்டும்தான் என்னுடைய composition. அதில் ஒளிந்திருக்கக்கூடிய ராகங்களை மட்டும்தான் நான் வெளியே கொண்டு வந்தேன். அந்த ராகங்களுக்கு அந்த வடிவங்கள் இருக்கிறதென்பது மேற்கத்தியர்களுக்குத் தெரியாது. மேற்கத்திய இசையில் உள்ள ராகங்களை எனக்குத் தெரிந்தவரை வெளியே கொண்டு வந்திருக்கிறேன். 16-ம் நூற்றாண்டில் பாக் அதைக் உருவாக்கியபோதே இருந்ததுதான் அது. இன்னின்ன இடத்தில் இன்னின்ன ராகங்கள் இருக்கின்றன என்பதை அடிக்கோடிட்டுக் காட்டிய பணிதான் என்னுடையது.

**கல்கி** : உங்களுடைய பாடல்களைச் சிலர் வெளிப்படையாகக் காப்பியடிக்கும் போது உங்களுடைய உணர்வு எப்படி இருக்கும்?

**இளையராஜா** : இல்லாதவர்கள் எடுத்துக் கொள்கிறார்கள்; அது பற்றி என்ன இருக்கிறது!



**"இசை. இசை. இசை... என்று பைத்தியமாகவே ஆக வேண்டும்."**

(சிரிப்பு.)

**கல்கி** : உங்களுக்கு என்று விருப்பமான ராகங்கள் ஏதும் உண்டா? எதன் மீதாவது உங்களுக்கு அதீத லயிப்பு உண்டா?

**இளையராஜா** : அப்படியெல்லாம் எதுவும் இல்லை. எல்லாமே மியூசிக். மியூசிக். மியூசிக். அதில் எப்படிப் பிரித்துப் பார்க்க முடியும்?

**கல்கி** : இசை என்பது ஓர் இனிமையான விஷயம்தான். ஆனால் ஒரு சமயத்தில் உங்களுடைய இசை, பாடல் வரிகளை, வார்த்தைகளை கேட்க முடியாமல் டாமினேட் செய்ததாக ஒரு சர்ச்சை எழுந்தது. அது உண்மையும் கூட...

**இளையராஜா** : எந்தப் பாடல் என்று சொல்லுங்களேன்...

**கல்கி** : நிறையப் பாடல்கள். இசைதான் கேட்குமே தவிர, வார்த்தை புரியாது.

**இளையராஜா** : புரியாததை ஏன் நீங்கள் கேட்கிறீர்கள்? அந்த வார்த்தைகள் புரியக் கூடாது - அவ்வளவு மட்டமாக எழுதியிருக்கிறார்கள் என்பதற்காகக் கூட அப்படிச் செய்திருக்கலாமில்லையா! (சிரிப்பு!)

**கல்கி** : அதுபோன்ற கவிஞர்களை நீங்கள்

ஏன் ஊக்குவிக்க வேண்டும்?

**இளையராஜா** : ஏதோ காலம்!

**கல்கி** : நீங்கள் நினைத்தால் இதற்கு நான் இசையமைக்க முடியாது என்று சொல்லலாமே!

**இளையராஜா** : அப்படியல்ல... ஒரு பாடல் வரிகளோ வார்த்தைகளோ கேட்காமல் போவதற்கு எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. ஒரிஜினலிலிருந்து copy செய்யப்பட்ட ரெக்கார்டிங் சரியில்லாமல் இருக்கலாம்; நீங்கள் கேட்கும் டேப்போ, டேப் ரெக்கார்டரோ கூட சரியில்லாமல் இருக்கலாம். எல்லாவற்றுக்கும் இசையமைப்பாளரே காரணம் என்று சொல்லிவிட முடியாது. யார் என்ன செய்தாலும் அதை ஏற்றுக் கொள்வதும் நிராகரிப்பதும் மக்கள் கைகளில்தான் இருக்கிறது. அப்படி நிராகரித்து விட்டால் அதுபோன்ற பாடல்கள் வராதே!

**கல்கி** : சரி, மீண்டும் உங்கள் ஆல்பத்துக்கு வருவோம். யானி, மைக்கேல் ஜாக்ஸன் ஆகியோருடைய ஆல்பங்களைக் கேட்கும் போதும் உங்களுடையதைக் கேட்கும்போதும் பாமர ரசிகர்களான எங்களுக்கு எந்தவிதமான வித்தியாசமும் தெரியவில்லை. அதாவது இசையின் தரத்தைச் சொல்கிறோம். ஆனாலும் அவர்களுடைய ஆல்பம் பாப்புலரான அள வுக்கு இசையில் எந்தவிதத்திலும் தரம்குறை யாத உங்களுடைய ஆல்பங்கள் பாப்புலரா காததற்கு என்ன காரணம்? உலகத்தரம் என்று ஏதாவது இருக்கிறதா என்ன?

**இளையராஜா** : அது வெளிப்படுகிற இடத்தைப் பொறுத்து இருக்கிறது. இந்தியாவில் வெளிப்படுகிறபோது அப்படியிருக்கிறது.

**கல்கி** : எதனால் அப்படி?

**இளையராஜா** : உலகத் தரம் என்று பார்க்கிறபோது, முதலில் ரெக்கார்டிங் தரத்தைத்தான் பார்க்கிறார்கள். அப்படிப் பார்த்தால் இந்த இரண்டு ஆல்பமுமே அந்தத் தரத்துக்குக் கீழேதான். நிறையத் தவறு இருக்கிறது.

**கல்கி** : நீங்கள் குறிப்பிடுகிற இந்த டெக்னிக்கலான தவறுகள் எங்களுக்குத் தெரியவில்லையே!

**இளையராஜா** : இந்த டெக்னிக்கலான தவறுகள் இல்லாமல் நான் கொடுக்கிறபோது, அந்த இசை இன்னும் எப்படி இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்! இவ்வளவு குறைகள் உள்ள ஒன்றையே இத்தனை நிறைவாக இருக்கிறதென்று நீங்கள் பேசுகிறீர்கள் என்றால் இன்னும் fine sound-ல் கொடுத்தால் எப்படி உணர்வீர்கள்! இதிலெல்லாம் அவர்கள் ரொம்பவும் தேர்ச்சி பெற்றவர்கள். இருபத்து நாலு மணி நேரத்தில் அவர்கள் பன்னிரெண்டு மணி நேரம் சாதகம் செய்கிறார்கள். அப்படிச் சாதகம் செய்பவர்கள் ஒரு சட்ஜமம் வாசித்தாலே போதும்; கேட்டுக் கொண்டே இருக்கலாம்! இங்கு அப்படியில்லை. learningஐ விட earning அதிகமாகி விட்டது. கர்நாடக சங்கீதத்தில் கூட பத்துக் கீர்த்தனைகளைக் கற்றுக் கொண்டதுமே கச்சேரி செய்யத்தான் ஆசைப்படுகிறார்கள். மேலும் மேலும் கற்றுக் கொள்வது குறைந்து போகிறது. இப்படிப்பட்ட சூழ்நிலையில் எப்படி நாம் டெக்னிகலாக அவர்கள் தரத்துக்குப் போக முடியும்?

**கல்கி** : நீங்கள் இசையை எழுதுகிறீர்கள் என்று சொல்கிறார்கள். அது எப்படி?

**இளையராஜா** : மனதில் கேட்பதை அப்படியே எழுதுகிறேன்.

**கல்கி** : அதற்கு ஏதேனும் தனிப்பயிற்சி எடுத்துக் கொண்டீர்களா?

**இளையராஜா** : இசை, இசை, இசை... என்று பைத்தியமாகவே ஆக வேண்டும் (சிரிப்பு!).

**கல்கி** : ஒரு சீனியர் என்கிற முறையில் ரஹ்மானின் இசையமைப்பு எப்படி என்று சொல்லுங்களேன்!

**இளையராஜா** : நன்றாகச் செய்கிறார். நானும் உங்களைப் போல் இசைக்கு ரசிகன் தானே!

**கல்கி** : உங்கள் மகன் கார்த்திக்ராஜா?

**இளையராஜா** : அவனும் நன்றாகவே செய்கிறான்.

**கல்கி** : 'இசை என்பது வெறும் ஏமாற்று வேலை' என்று நீங்கள் முன்பு சொல்லியிருக்கிறீர்கள். ஆனால் இசையின் மூலம் இறைவனை அடைவது சுலபம் என்று கூறுகிறார்கள். இசை இறைவனுக்குப் பக்கத்தில் இருக்கிற ஒரு விஷயம் என்கிறார்கள்...

**இளையராஜா** : பக்கத்தில் மட்டுமல்ல; இறைவனுக்கு அடுத்த நிலையில் இருப்பது

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

**''பாதி, பாதி விலைக்கு பருப்பு, எண்ணெய், முட்டையெல்லாம் வாங்குறியா... யாருகிட்டே?''**

**''என் வீட்டுல குடியிருக்கிற 'சத்துணவு டீச்சர் கிட்ட'...!''**

— சிற்பி சோமு

இசைதான். ஒரு விஷயத்தில் நீங்கள் கொண்டிருக்கும் கருத்துக்கு மாறான கருத்தை இன்னொருவர் சொல்லக் கூடாதா? அது ஒரு வேலையாகச் செய்யப்படுகிறபொழுது வெறும் வித்தைக்காரன் வேலைதான். அதிலேயே மூழ்கி விட்டாலோ...

**கல்கி :** இசை ஏமாற்று வேலையாக இருந்தால், இறைவனுக்கு அடுத்த நிலையில் அது இருக்க முடியுமா?

**இளையராஜா :** நான் ஏமாற்று வேலை என்று சொன்னது, இசையை நாம் ஏமாற்றுகிறோமா அல்லது இசை நம்மை ஏமாற்றுகிறதா என்று புரிந்து கொள்ள முடியாத ஒரு நிலையைத்தான். ஏனெனில் நான் முன்பே சொன்ன மாதிரி அது வானம் போல் விரிந்தது.

**கல்கி :** உங்களுக்குப் பிடித்த இசையமைப்பாளர் யார்?

**இளையராஜா :** வடஇந்தியாவில் எனக்குப் பிடித்தவர்கள்... ஸ்ரீராமச்சந்திரா, நௌஷத், எஸ்.டி. பர்மன், மதன்மோகன். இவர்களெல்லாம் சினிமாவுக்காகத் தங்களைச் சேதப்படுத்திக் கொள்ளாதவர்கள். 'அனார்கலி' படத்துக்கு இசையமைக்க வேண்டும் என்று நௌஷத்தை அணுகினார்கள். தமக்கு ஒரு லட்ச ரூபாய் தர வேண்டும் என்றார். அப்போது அது பெரிய தொகை. சரி என்றார்கள். அந்தப் படத்துக்கு இசையமைக்கத் தமக்கு இரண்டு ஆண்டுகள் ஆகும் என்றார். அத்தனை காலம் தங்களால் காத்திருக்க முடியாது என்பதால், அவர் தரத்துக்கு இசையமைக்கக் கூடிய இன்னொருவரை அவரே சிபாரிசு செய்ய வேண்டும் என்றார்கள். அவர், ஸ்ரீராமச்சந்திராவை சிபாரிசு செய்தார். அவரை அணுகியபோது, 'நான் ஒரே மாதத்தில் இசையமைத்துத் தருகிறேன். ஆனால் நீங்கள் நௌஷத்துக்கு ஒரு லட்ச ரூபாய் தருவதாக ஒப்புக் கொண்டதால் எனக்கு ஒரு லட்சத்து ஐந்தாயிரம் ரூபாய் தரவேண்டும்' என்றாராம். அதன்படியே தந்தார்கள். படம் வந்தது. அத்தனை பாடல்களும் சூப்பர் ஹிட்ஸ்! ('ஜிந்தகி...' என்று தொடங்கும் அனார்கலி படப்பாடலைப் பாடிக் காட்டுகிறார்...)

ரோஷன் ஒரு படத்துக்கு இசையமைக்கும் போது, பாடலில் ஒரு கேள்வியை வைப்பார். மதன்மோகன் தமது படத்துக்கு இசையமைக்கும் போது, தமது பாடலில் முன்னவர் வைத்த கேள்விக்குப் பதில் சொல்லுவார்! முன்னவர் இறந்தபோது, பின்னவர் வந்து, 'இனி யாருக்கு நான் பதில் சொல்வேன்?' என்று அழுதார்! இசையமைப்பாளர்கள் என்றால் அப்படியல்லவா இருக்க வேண்டும்...

**கல்கி :** உங்களுக்கு இசை தவிர, போட்டோகிராஃபியிலும் ஆர்வம் உண்டு என்று கேள்விப்படுகிறோம்...

**இளையராஜா :** ஆமாம். கோயில்களுக்குச் செல்லும்போது கேமராவையும் எடுத்துக் கொண்டு போவேன்... (தாம் எடுத்த படங்களைக் கொண்டு வந்து காட்டுகிறார். அத்தனையும் கோயில்கள், இயற்கைக் காட்சிகள் என்று சிறப்பான படங்கள்.)

**கல்கி :** எல்லாப் படங்களுமே சிறப்பாக இருக்கின்றன.

**இளையராஜா :** இன்றைக்கு மிக அருமையான கேமராக்கள் வந்து விட்டன. என் பங்கு மிகவும் குறைவுதான்.

**கல்கி :** கேமரா படம்தான் எடுக்கும். ஆனால், நீங்களோ ஒவ்வொரு படத்தையும் இசை போலவே சிறப்பாகக் கம்போஸ் செய்து எடுத்திருக்கிறீர்கள். பிரசுரத்திற்குச் சில படங்களைத் தர முடியுமா?

**இளையராஜா :** இந்தப் படங்களைக் கொண்டு ஒரு புகைப்படக் கண்காட்சி நடத்துவதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. அது முடிந்ததும் தருகிறேன்.

அட்டை வண்ணப்படமும் படங்களும் : **பிரவீண்குமார்**

# எழுத்தாளர்களின் எதிரி!



"எழுத்தாளர்களின் மிகப் பெரிய எதிரி எது?"

"விருதுகள் பெறுவதுதான்" என்கிறார் பிரபல எழுத்தாளர் மகஸ்வேதா தேவி.

71 வயதாகும் இந்த எழுத்தாளருக்கு சமீபத்தில் மக்சாய்சாய் விருது கிடைத்துள்ளது. இதனால் இவரைச் சுற்றி, "பேட்டி வேண்டும்... உங்களை வைத்து ஒரு படம் தயாரிக்க வேண்டும்" என்றெல்லாம் பலர் மொய்க்கின்றனர்.

இதனால் இவருடைய கவனம் சிதறி எழுதவே முடிவதில்லையாம். ஆகவேதான் வெறுப்புற்று "விருதுகள்... எழுத்தாளர்களின் பரம விரோதி" எனக் கூறியுள்ளார்!

ஆதாரம் : **வீக்**

தகவல் : **இரா. திலீப்**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1997 முடிவுகள்

கடந்த 13.7.97 அன்று வைதீஸ்வரன், பாவை சந்திரன், பாரதி பாஸ்கர், பாபுகாம ராஜ்(தமிழன் எக்ஸ்பிரஸ்), மற்றும் கல்கி ஆசிரியர் ஆகியோர் அடங்கிய நடுவர் குழு கூடி ஏற்கெனவே முதல் சுற்றில் படித்துத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளிலிருந்து பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுத்தது.

**முதல் பரிசு (ரூ.2500/-)**

*சில மனிதர்கள் சில நிகழ்வுகள்*

எழுதியவர்:
பா. உஷா ராணி
3/40 B, எம்.எஸ்.
அக்ரஹாரம்
பரமக்குடி - 623707.

**இரண்டாம் பரிசு (ரூ. 2000/-)**

*மனிதா நீ மகத்தானவன்*

எழுதியவர்:
ச. ரெங்கநாதன்,
B-2, ஆர்சர்ட்மினார்,
திவான் ராமா ரோடு,
சென்னை.

**மூன்றாவது பரிசு (தலா ரூ. 1500/- இரு கதைகளுக்கு):**

*வேசம்*

எழுதியவர்: அ. அமராவதி
80, கதிரேசன் கோவில் தெரு,
கோவில்பட்டி - 628 502.

*இதுதான் ரியல் எஸ்டேட்*

எழுதியவர்: அ.சி.மணியன்,
பாம்பாக்கை,
அம்மையப்பன் - 613 707

**இரண்டு ஆறுதல் பரிசுகள் (தலா ரூ. 1000/-):**

*மழைபொழியும் தருணங்களில்...*

எழுதியவர்:
ஜெயாசேகர்,
S-12, நித்யா அபார்ட்மெண்ட்ஸ்,
1, தாமஸ் சாலை,
சென்னை - 600 017.

*இனி என்னிக்கு அவனோட மொறை...?*

எழுதியவர்: வெ. நிலாக்கதிர் (அதிமுக எழுத்தாளர்)
ஜெ. கிருஷ்ணாபுரம் (அஞ்சல்)
கேத்தனூர் (வழி)
பல்லடம், கோவை மாவட்டம்.

தவிர, பிரசுரத்திற்காகப் பதின்மூன்று கதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அவை பற்றிய விவரம் அடுத்த இதழில் வெளிவரும்.

போட்டிக்காகக் கதைகள் அனுப்பிய ஆயிரக்கணக்கான வாசகர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் எங்களது மனமார்ந்த நன்றி.

- ஆசிரியர்.



• வைதீஸ்வரன்



• பாரதி பாஸ்கர்



• பாபுகாமராஜ் (தமிழன் எக்ஸ்பிரஸ்)



• பாவை சந்திரன்






1997 ஆகஸ்ட் 17
ஈசுவர ஆவணி 1
மலர் : 56
இதழ் : 3

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## தடைகளின்றி நடந்த தலித் ஊர்வலம்!

ஆகஸ்ட் ஆறாம் தேதியன்று சென்னையில் என்னவெல்லாம் ரகளை நடக்குமோ என்று தமிழகமே கவலையில் மூழ்கியிருந்தது. ஆனால், எதிர்பார்த்த வன்முறைகள் ஏதுமின்றி தலித் ஊர்வலம் அமைதியாக நடந்து முடிந்தது. தங்கள் நலன்கள் புறக்கணிக்கப்படுகின்றன என்கிற கோரிக்கையை தமிழக ஆளுனரிடம் சேர்ப்பித்து விட்டார் டாக்டர் கிருஷ்ணசாமி.

நிலைமையை முன்னெச்சரிக்கையுடன் திறமையாகவும் உறுதியுடனும் சமாளித்த தமிழக அரசைப் பாராட்டத்தான் வேண்டும். பொருட்சேதமோ உயிர்ச்சேதமோ இன்றி ஒரு பெரிய ஊர்வலம் நடந்து முடிந்திருக்கிறது. ஊர்வலத்தின் நோக்கமும் நிறைவேறியிருக்கிறது; அமைதியும் காக்கப்பட்டிருக்கிறது.

ஆனால், தேவேந்திர குல வேளாளர் கூட்டமைப்புத் தலைவர் டாக்டர் கிருஷ்ணசாமியும் சரி, வை.கோ., ஜெயலலிதா போன்ற எதிர்க்கட்சித் தலைவர்களும் சரி, இதை ஒப்புக் கொள்ளும் மனநிலையில் இல்லை.

'மனித உரிமைகள் ஒடுக்கப்பட்டு விட்டன; தேசிய மனித உரிமைப் பாதுகாப்பு கமிஷனிடம் மனுசெய்வோம். ஆயிரக்கணக்கானோரை சிறைவைத்த பிறகும், காவல் துறையின் அடக்குமுறையைப் பொருட்படுத்தாமல் நாங்கள் அமைதியாய் ஊர்வலத்தை நடத்தியிருக்கிறோமாக்கும்....' என்று புலம்புகிறார்கள்.

பாதுகாப்பு நடவடிக்கையாக ஆயிரக்கணக்கானோரைக் கைது செய்து சிறைவைத்தது தமிழக







அரசு என்பது உண்மைதான். ஆனால், அதற்கான அவசியத்தை உருவாக்கியது யார்...? 'தடிகளைத் தூக்கிக் கொண்டு ஊர்வலத்துக்கு வாருங்கள்' என்று வன்முறைக்கு மலர்ப் படுக்கை விரித்த டாக்டர் கிருஷ்ணசாமிதான்!

தமது தொண்டர்களின் நலனை விரும்பும் எந்தத் தலைவராவது அவர்களை வன்முறைக்குத் தூண்டிவிட்டு லைசென்ஸும் கொடுப்பாரா?

டாக்டர் கிருஷ்ணசாமியின் பேச்சிலும் வை.கோ. போன்றவர்களின் பேச்சிலும் தலித் அனுதாபத்தைக் காட்டிலும் அரசியல் ஆதாயத் தேடலே தூக்கலாக இருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரியும்.

அவர்கள் அனைவரும் சேர்ந்து முத்திரை குத்துவதுபோல் கருணாநிதி ஒரு தலித் விரோதி அல்ல என்பதும் ஊரறிந்த விஷயம்.

அனுபவ அறிவுடைய முதல்வர், தம் மீது இப்படி ஓர் அபாண்டம் சுமத்தப்படும் என்பதையும் எதிர்பாராமல் இருந்திருக்க மாட்டார். காவல் துறையை முடுக்கிவிட்டு, பலரைக் கைது செய்யாமலிருந்தாலோ வன்முறை வெடிக்கும்; அந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை மேற்கொண்டாலோ 'தலித் விரோதி' என்ற அவப்பெயர் உண்டாகும். இந்த இக்கட்டில், தமது அரசியல் ஆதாயம் பறிபோவதைக் குறித்து கவலைப்படாமல் கருணாநிதி செயலாற்றியிருக்கிறார்.

அவ்வாறு அவர் துணிவுடன் இயங்க பெரிதும் துணைபுரிந்தது சென்னை உயர்நீதி மன்ற ஆணைதான். ஆகஸ்ட் 6 தலித் பேரணி உள்பட, ஊர்வலங்களுக்கும் பேரணிகளுக்கும் தடை விதிக்கக் கோரி இரு பொதுநல நோக்கிலான மனுக்கள் உயர்நீதிமன்றத்தில் தாக்கல் செய்யப் பட்டன. ஆயிரக்கணக்கான தலித்கள் கைது செய்யப்படுவதை எதிர்த்து அதே நீதிமன்றத்தில் மனு செய்தார் டாக்டர் கிருஷ்ணசாமி.

உயர்நீதி மன்றம் கேட்டுக் கொண்டபடி, 'ஊர்வலம் அமைதியாக நடக்கும்' என்ற எழுத்து வடிவ வாக்குறுதியை டாக்டர் கிருஷ்ணசாமி தரப்பு வக்கீலால் தர இயலவில்லை.

எனவே, ஊர்வலம் நடத்துவதற்கான விதிமுறைகளையே விரிவாக வரிசைப்படுத்திவிட்டது




நீதிமன்றம் :

சாலை முழுவதையும் அடைத்துச் செல்லக் கூடாது; நீளமான பானர்களைத் தூக்கிச் செல்லக் கூடாது; பாதசாரிகள் சாலையைக் கடக்க அவ்வப்போது நின்று வழிவிட வேண்டும்; கம்பு, கழி, ஆயுதம், பல்பு, புட்டி, குண்டு போன்றவற்றை வைத்திருக்கக் கூடாது. ஒவ்வொரு ஐந்நூறு பேருக்கிடையேயும் இடைவெளி விட்டுப் பேரணி தொடர வேண்டும்; வாகனங்களில் போகக் கூடாது; நடந்துதான் செல்லலாம். வழியில் எதிர்ப்படும் கட்டடம், ஹோட்டல், கடைகளுள் பேரணியினர் நுழையக்கூடாது. ஊர்வலப் பாதையில் பொதுச் சொத்தோ, தனியார் சொத்தோ அழிக்கப்பட்டால், பேரணியினர் நஷ்டஈடு தரவேண்டும்.

இத்தனையையும் காவல் துறை கண்காணிக்க வேண்டும். சம்பந்தமில்லாத மூன்றாம் நபர்கள் கூட்டத்தில் வந்து சேர்ந்து கொள்வதை அவர்கள் தடுக்க வேண்டும்.

இதையெல்லாம் தக்க தருணத்தில் செய்யும்படி அரசாங்கம் காவல் துறைக்குச் சுற்றறிக்கை அனுப்ப வேண்டும்.

இந்த நிபந்தனைகளை மீறி நடக்கும் பேரணியினரைக் கைது செய்து, சட்டபூர்வமாக நடவடிக்கை எடுக்கும் உரிமை அரசுக்கு இருக்கிறது.

- இவ்வாறு மிக விரிவாகவும் நுணுக்கமாகவும் உத்தரவுகளைப் பிறப்பித்ததன் மூலம் ஜஸ்டிஸ் பத்மநாபன் ஒரு நல்ல முன்னுதாரணத்தை ஏற்படுத்தியிருக்கிறார்.

இனி நடக்கும் எல்லா வகையான அரசியல், சமுதாய, மத ரீதியான ஊர்வலங்களுக்கும் இதே விதிகளைப் பொருத்தி நடவடிக்கை எடுக்கலாம்; வன்முறை, அசம்பாவிதங்களைத் தவிர்க்கலாம்.

இதை உணர்ந்து இத் தீர்ப்பை வரவேற்கவோ பாராட்டவோ எந்தக் கட்சியும் முன்வரவில்லையே என்று நாம் வருத்தப்பட்டுப் பயனில்லை... ஆளுங்கட்சிக்குச் சங்கடமுண்டாக்க முடியாமல் கைகள் கட்டப்பட்டுவிட்டனவே என்ற கவலைதான் அவர்களுக்கு மேலோங்கியிருக்கும்!

**அண்மையில் ஹரியானா, பஞ்சாப் பகுதிகளுக்கு ஒரு விசிட் அடித்தபோது.... ஆலு (உருளைக் கிழங்கு) பரோட்டாவையும், மூளி (முள்ளங்கி) பரோட்டோவையும் தயிரோடு சேர்த்து மென்று கொண்டே சில்லறை சில்லறையாக தகவல்களையும் சேகரிக்க முடிந்தது....**

● இந்தியாவில் முகலாய சாம்ராஜ்யத்துக்கு அடிகோலிய பானிபட் யுத்தங்கள் நடந்த இடம் நினைவுச் சின்னமாக்கப்பட்டிருக்கிறது. பள்ளிக் கூடத்தில் படித்த இப்ராஹிம் லோடி, பாபர் எல்லாம் ஞாபகத்துக்கு வந்து போனார்கள். மூன்றாவது பானிபட் யுத்தம் நடந்த இடத்தில் ஒரு மாமரம் இருந்ததாம். அதை சோகத்தின் காரணமாக கறுப்பு மாமரம் என்று அழைத்து அங்கே ஒரு அடையாளக் கல்வெட்டும் பதித்திருக்கிறார்கள். 'கலா ஆம்' என்று அழைக்கிறார்கள். பச்சைப் பசேல்




• ஜாலியன் வாலாபாக்: இங்கிருந்துதான் மக்களைச் சுட்டார்கள்

என்று புல்வெளிகளும், சின்ன ஓடையுமாய் சுற்றுப்புறம் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் யாரும் இந்த இடத்தைப் பார்க்கத்தான் மெனக்கெடுவதில்லை என்று தெரிகிறது. சுற்றுலாப் பயணிகளை எங்குமே காணோம். நாங்கள் போனபோது நாங்கள் மட்டும்தான் அங்கே இருந்தோம். ஓடைக்காக விடப்பட்ட வாத்துகள் கூட தண்ணீரில் கால் வைக்காமல் மரநிழலில் ஏதோ வம்பளந்து கொண்டிருந்தன.

● ஆட்டோவாகவும் இல்லாமல், டாக்ஸியாகவும் இல்லாமல் ஒரு வாகனம். அதுதான் ஹரியானாவின் போக்குவரத்து. கூரை மீது ஏறி அமர்ந்து சர்வசாதாரணமாய் பயணம் போகிறார்கள். பக்கமெல்லாம் நின்று கொண்டு சிலரும், எஸ்.டி.எஸ். ஸ்டைலில் பலரும்.

● பானிபட்டில் வீடுகளில் நிறைய பூச்செடிகள் பூத்துக் குலுங்கி வழிகின்றன. ஆனால் பூக்களை யாரும் பறிப்பதில்லை. பெண்கள் தலையில் பூவைப்பதுமில்லை. மலர்கள் வாடித் தரையில் விழுகின்றன. 'பலான தொழில் செய்யும் மாதர்கள்தான் பூ வைப்பார்கள் என்று ஒரு சம்பிரதாயம் இங்கே' என்று காதோடு கிசுகிசுத்தார் நண்பர் ஒருவர்.

● பெட்ஷீட், கம்பளம், டர்க்கி டவல், திரைச் சீலைகள் இவற்றுக்கு இந்தியாவின் தலைமையகம் பானிபட். ஹரியானாக்காரர்களை விட, பஞ்சாபியர்தான் இத்தொழிலில் கொடி கட்டிப் பறக்கிறார்கள்.

● 'கோல்டன் ஃபேப்பரிக்ஸ்' என்ற ஷோரூமுக்குப் போயிருந்தோம். விரல் போய் மூக்கில் ஒட்டிக் கொண்டது. பிரம்மாண்டம். அரைமணி நேரம் ஷோரூமை சுற்றிப் பார்த்துக் கொண்டே வந்த போது 'ஷோரூமில் இன்னும் முக்கால் பாகம் பார்க்க வேண்டியிருக்கிறது, சீக்கிரம்' என்றார்கள். போதுமா! ஆசியாவிலேயே மிகப் பெரிய ஷோரூம் என்று அதை வர்ணித்தார்கள்.

● கோடீஸ்வர படா படா ஆசாமிகள் எல்லாம் சிமெண்ட் கூட பூசப்படாத சின்ன அறையில், சத்தம் போடும் மின் விசிறிக்கு கீழே, வெள்ளை ஒயர் பின்னப்பட்ட சாதாரண நாற்காலியில் அமர்ந்து கொண்டு சர்வதேச மார்க்கெட்டுகளைப் பிடித்துப்

சிவப்பு



• பொற்கோயில்

• பானிபட் போர்கள் நடந்த இடம்....



போடுகிறார்கள். "ஒரு ஏ.ஸி யாவது..." என்று ஒரு முதலாளியைக் கேட்டபோது - "என்ன அவசியம்? எதற்கு அந்த ஷோ எல்லாம்? நான் காலை ஏழு மணிக்கு தொழிற்சாலைக்குள் போய் விடுகிறேன். எப்போதாவது என் அறைக்கு வருகிறேன். சில நிமிடங்களில் மீண்டும் தறிகளோடு போய் நின்று கொள்வேன். அடுத்த வருடம் என் உற்பத்தியை இரண்டு பங்காக உயர்த்த முடிவு செய்திருக்கிறேன். ஏ.ஸியில் உட்கார்ந்திருந்தால் என் லட்சியம் நிறைவேறாது சாமி."

• இந்த இன்கம்டாக்ஸ் மாதிரியான விஷயங்களுக்காக அங்கே யாரும் தலையைப் பிய்த்துக் கொண்டு கவலைப் படுவதில்லை. 'அப்போ பார்த்துக் கொள்ளலாம்' என்பதுதான் பொதுவான தாரக மந்திரம். அந்த 'பார்த்து' என்ற வார்த்தைக்கு ஆயிரம் அர்த்தங்கள்!

• இதுவரையில் தொழிலாளர் சங்கம், பிரச்னை என்று எதையும் காணாத பூமி ஹரியானா. இப்போதுதான் சிவப்புக் கொடி இலேசாகத் தலை தூக்கி வருகிறது என்கிறார்கள். ஆனால் அது பறப்பதை இன்னும் எங்கேயும் பார்க்க முடியவில்லை.



• ஜாலியன்வாலாபாக்: மக்கள் விழுந்த கிணறு (இன்று நினைவுச் சின்னமாக...)

• பானிபட்டில் ஒரே ஒரு மாதா கோவில் இருக்கிறது. கிறிஸ்துவர்களை ஒரு வேனில் வந்து வீட்டிலிருந்து அழைத்துப் போய் வழிபாடு முடிந்ததும் ஒவ்வொருவரையும் வீட்டில் கொண்டு போய் விடுகிறார்கள்.

• நம்மூர் போல் வீட்டுக்கு வந்ததும் சட்டை, பனியனைக் கழற்றிப் போட்டுவிட்டு, 'ஹாய்'யாக வீட்டில் உலாவலாம் பானி பட்டிலும். ஆனால் அதற்கு முன்பு வீட்டில் வேலைக்காரி இருக்கிறாளா அல்லது கிளம்பியாயிற்றா என்று பார்த்துக் கொள்வது நல்லது. ஆண் மகன் வெறும் உடம்போடு எதிரில் உலவும் வீட்டில் வேலை பார்க்க பானிபட்டில் பெண்கள் முன் வருவதில்லை. அப்படி திடீரென உங்களைப் பார்க்க நேர்ந்து விட்டால், செய்து கொண்டிருக்கும் வேலையை அப்படியே போட்டுவிட்டு, நீங்கள் சட்டை போடும் வரை உங்கள் கண்ணெதிரிலிருந்து மாயமாய் வேலைக்காரி மறைந்து போவாள்.

# தலைதூக்கும் ஹரியானா!

• பானிபட்டில் அலிகள் அதிகம். தனி கும்பலாகவே வாழ்ந்து வருகிறார்கள். ஆனால் அவர்களை மற்றவர்கள் அவமதிப்பதில்லை, கேலி பேசுவதில்லை. மாறாக மரியாதை தருகிறார்கள். ஒரு குடும்பத்தில் ஒரு குழந்தையைத் தொட்டிலில் போடுகிறார்கள் என்றால் இவர்களுக்கு எப்படியோ மூக்கில் வியர்த்து விடும். வந்து விடுவார்கள். டோலக் அடித்து பாட்டுப்



# இரண்டு இரத்தினங்கள்

இந்திய அரசு வழங்கும் தலை சிறந்த விருதான பாரத ரத்னா விருதை, நீதிமன்றத் தடை நீங்கிய பிறகு, பெறும் இருவருள் ஒருவர் உயிரோடு இல்லை. ஒருவர் விருது பெறுவதையும் அறியாமல் உயிருக்குப் போராடிக் கொண்டு மயக்க நிலையில் இருப்பவர். ஒருவர் ஆண். மற்றவர் பெண். ஒதுக்கீடு இல்லாமல் 50% - 50%

இரண்டு முறை தாற்காலிகப் பிரதமராக மட்டுமே இருக்கும் வாய்ப்பு பெற்ற குல்சாரிலால் நந்தா உள்துறை, திட்டம், ரயில்வே போன்ற மிக முக்கியமான அமைச்சர் பொறுப்புகளை வகித்தவர். விடுதலைப் போராட்ட வீரர். சிறை சென்ற காந்தீயவாதி. தொழிற் சங்கத் தலைவர். மூன்று முறை மக்களவைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்.

தற்போது பாகிஸ்தான் பகுதியில் உள்ள சியால்கோட்டில் பிறந்த இவர் அண்மையில் ஜூலை 4-ல் நூறாண்டு கண்டவர். பொருளாதாரம் பயின்றவர். பேராசிரியராக மும்பையில் பணியாற்றியவர்.

தற்போது இருக்கும் இடம் குஜராத் மாநிலம் ஆமதபாத் அருகே! இவர் ஏற்கெனவே பெற்ற விருது பத்மவிபூஷண். விடுதலைப் பொன்விழா ஆண்டில் பெறுவது பாரத ரத்னா.

உப்பு சத்தியாகிரக காலத்தில் அரசியலுக்கு அறிமுகமான அருணா ஆசப் அலி ஆகஸ்ட் புரட்சியின்போது ஒரு வீராங்கனையாகவே மாறி விட்டார்.

ஜெய்ப்பிரகாஷ் நாராயணன் ஹசாரி பாக் மத்திய சிறையிலிருந்து தப்பி லோகியாவுடன் சேர்ந்து கொண்டார். அச்சுத பட்வர்த்தன், அருணா ஆசப் அலி மற்றும் மூவர் தலைமறைவாகிப் போராட்டத்தைத் தொடர்ந்தனர்.

டில்லி மாநகராட்சியின் முதல் பெண் மேயர் பதவி வகித்த அருணா ஆசப் அலி அரசியல் புரட்சி வீராங்கனை மட்டு மல்ல. தனி மனித வாழ்க்கையிலும் புரட்சி செய்தவர். வங்காள பிராமணப் பெண்ணான இவர் சாதி மதம் கடந்து ஆசப் அலியை மணந்து கொண்டது பெரும் புரட்சியாகும். அரசியல் களத்தில் இவர் சந்தித்தவை சிறை வாழ்வும் தலைமறைவு வாழ்வும். அவை தந்த பரிசு உடல் நலக்குறைவு!

கடந்த ஆண்டு அமரரான இவர் பிறந்தது 1909ல். உயிரோடு இருக்கும்போது இவர் 1991ல் பெற்றது நேரு விருது! இறந்த பிறகு வழங்கப் படுவது பாரத ரத்னா!

- ஆர். பி. சாரதி

பாடி ஒரே கும்மாளம்தான். அப்புறம்தான் கிளைமாக்ஸ். ஆயிரக்கணக்கில் இதற்கு அவர்கள் 'பீஸ்' கேட்பார்கள். ஒரு வழியாக பேரம் பேசி ஒரு தொகை முடிவாகும். இருபதாயிரத்தில் ஆரம்பித்து மூவாயிரம் வரை கூட பேச்சுவார்த்தை நடக்கும். கடைசியில் பணம் வாங்கிக் கொண்டு குழந்தையின் தலையில் கை வைத்து அலிகள் ஆசீர்வாதம் பண்ணுவார்கள். அப்படியான ஆசீர்வாதம் குழந்தைகளுக்கு நல்லது என்று மக்கள் நம்புகிறார்கள்.

- பஞ்சாப் பெண்கள் - வயது வித்தியாசமில்லாமல் கைகால் நகங்களை சிரத்தையுடன் பராமரிக்கிறார்கள். அழகாக வெட்டி, பாலீஷ் போட்டு... நகம் கடிக்காத மாநிலம் பஞ்சாப் எனலாம்.

- அமிர்தசரஸில் கால் வைத்ததுமே ஜாலியன்வாலாபாக் நினைவுக்கு வராமல் போகாது. சின்ன நுழைவுவாயில். ஜெனரல் டயர் தன் ஆட்களை அழைத்துச் சென்ற அதே குறுகலான சந்தில் நாமும் போகிறோம். எந்த இடத்திலிருந்து அப்பாவி மக்கள் சுடப்பட்டார்களோ அந்த இடத்தை அடையாளம் காட்டும் சிறிய கல்லை வேதனையோடு பார்க்கிறோம். திக்கு திசை தெரியாமல் ஓடிவந்த மக்கள் எந்தக் கிணற்றுக்குள் விழுந்தார்களோ அந்த கிணறுகண்டு (இப்போது நினைவுச் சின்னம்) அழுகிறோம். நினைவுத் தூண் அருகே நின்று கொண்டு போட்டோ எடுத்துக் கொண்டாலும் 'ஸ்மைல்' செய்ய முடியாத ஒரு அழுத்தம் மனத்தில்.

- ஜாலியன்வாலாபாக்கிலிருந்து பார்த்தால் பொற்கோவில் கோபுரம் தெரிகிறது. சில அடி தூரம்தான். தீவிரமான, தூய்மையான பக்திக்கு உதாரணம் பொற்கோவில். தன்னார்வத் தொண்டர்கள் இங்கே இருப்பது மாதிரி வேறு எங்கேனும் உண்டா என்று சந்தேகம். கோடிகளில் புரள்பவர்கள், பக்தர்களிடமிருந்து ஜோடி ஜோடியாகக் காலணிகளை வாங்கி உள்ளே வைத்து டோக்கன் கொடுத்துப் பாதுகாத்து, பின்னர் டோக்கன்களைத் திரும்ப வாங்கி காலணிகளை (இலவசமாகத்தான்!) தருகிறார்கள். ஆலய வளாகத்தின் விஸ்தார வராந்தாக்களில் பாய் விரிக்கிறார்கள். துப்புரவுப் பணி செய்கிறார்கள். கோவில் தங்கத் தகடுகள் புதிதாக பதிக்கப்பட்டு வருகின்றன. உள்ளே மிகச் சுவையான ஸ்டார் அந்தஸ்து பிரசாதங்கள் இலவசம். பொற்கோவிலைச் சுற்றியுள்ள குளத்தில் வாழும் மீன்கள் கொடுத்து வைத்தவை. பக்தர்கள் தரும் சத்துணவு சாப்பிட்டே கொழுத்து இருக்கின்றன.

— ராணிமைந்தன்

படங்கள் : ஆர். நிர்மல்

புதுப்பொலிவுடன்

ஆகஸ்ட் '97

# பெண்மணி

மாதர் இதழ்

## என் கணவர் மிசாவில் சிறையிலிருந்த பொழுது...!

- திருமதி துர்கா ஸ்டாலின்

## "எங்களுக்கு உதவிடுங்களேன்"

- காமராஜரின் டிரைவர் மனைவி பகிரங்க கடிதம்

## "பான்யன் எங்கள் அமைப்பு! நடிகை ரேவதி நடத்தவில்லை"

- பான்யன் நிறுவனர் வந்தனா



## ஆதர்ச தம்பதிகளின் கட்டுரை

## அ.தி.மு.க-வின் கடைசிக் காலங்களில் போட்டி கொ.ப.செ. லதாவா?

- மிஸ்டர் க்ளீன்

இயக்குநர் அகத்தியனின்

## 'சீதை' செய்தது சரியா?

- ராமுடுவின் அலசல்!

ஆசிரியர் : ரமணிசந்திரன்

ரூ.10

16 நாட்கள் கொண்ட

**பஞ்ச துவாரகை**

சென்னை, பம்பாய், அகமதாபாத், கோமதி துவாரகை, பேட்டி துவாரகை, ஸ்ரீநாத், காங்ரோலி துவாரகை, சோமநாதம், டாக்கூர், போர்பந்தர், உதயபூர், வீராவல் விர்பூர், ஆஜ்மீர், ஜெய்பூர், புஷ்கரம் மவுண்ட் அபு அம்பாஜி, காந்திநகர், அக்ஷர்தாம் மற்றும் பல க்ஷேத்திரங்கள். 20.11.97ம்தி ஆரம்பம் கட்டணம் ரூ. 4675 -



**NAMAGIRI TRAVEL SERVICE TIRUCHIRAPALLI**

**ESTD : 1955**

தங்க அன்னபூர்ணா தரிசனமும் தீபாவளி கங்கா ஸ்நானமும் 23 நாட்கள், 17 நாட்கள், 12 நாட்கள்

**காசியாத்திரை**

22.10.97ம்தி சென்னையிலிருந்து ஆரம்பம் நபருக்கு ரூ. 7575/- ரூ. 4975/- ரூ. 3975/- <u>16 டிக்கட்டிற்கு ஒரு டிக்கட் *FREE!*</u> முழு விபரங்கள் வேண்டின் நேரில் வருவது நலம். நேபாள், காட்மாண்ட் போய் வரும் பஸ் சார்ஜ் ரூ. 1775/- தனி.

26 நாட்கள் கொண்ட பத்ரி, கேதார் - நேபாள் காசியாத்திரை 18.9.97ம் தி புரட்டாசி 2ம்தி தனி 3 டயர் கோச் மூலம் புறப்படுகிறது நபருக்கு கட்டணம் ரூ. *7575/-* பத்ரி கேதார் நேபாள். கட்டணம் ரூ. *3275/-* தனி. இந்த யாத்திரையில் சென்னை, திருச்சி, மதுரை, பொள்ளாச்சி, கோவை, கபிஸ்த்தலம், கீவளூர், வலங்கைமான், பம்பாய், தூத்துக்குடி, குடியாத்தம், மணச்சநல்லூர், காஜாமலை, தஞ்சை முதலிய ஊர்களில் இருந்து பல அன்பர்கள் பதிவுசெய்துள்ளார்கள்.

இன்னும் 9 பர்த்துகளே உள்ளதால் உடன் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

விவரத்திற்கு ரூ.2 ஸ்டாம்ப் அனுப்பி முழு விவரங்கள் பெறலாம்.

**ஸ்ரீ நாமகிரி டிராவெல் சர்வீஸ்**



**34/A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2.**

**K.E. NAMPILLAI. PHONES: 706823 & 704312 N.K. SEKAR**



# வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.

**"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். உயிருக்கு மேலாக நேசித்து பொருளை சம்பாதிக்கும் நாம், அதன் ஒரு பகுதியையாவது வேதாத்யயனம் செய்யும் குழந்தைகளை ரக்ஷிக்க அர்ப்பணிக்க வேண்டும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 455 ஆண்டுகளாக நடந்து வரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 130 மாணவர்களுக்கு 15 வேத சாஸ்திர அத்யாபகர்கள் வேத சாஸ்திர வித்தைகளை புராதனமான குருகுல முறைப்படி போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்கு கொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம்.**

| வ எண். | திட்ட விவரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை துகை (Adhoc donation) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|---|
| 1. | ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி துகை) | Rs. 500 | Rs. 5,000 |
| 2. | ஸுமங்கலி ப்ரார்தனை : ஸுமங்கலி ப்ரார்தனைக்கு ரூ. 1000/- வித்யார்த்தி ஸமாராதனைக்கு ரூ. 500/- | Rs. 1,500 | Rs. 15,000 |
| 3. | அமாவாஸ்யை (அ) பௌர்ணமி (அ) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs. 15,000 |
| 4. | பௌர்ணமி ஆயுஷ்ய, நவக்ரஹ நக்ஷத்ர ஹோமம் | Rs. 1,000 | Rs. 10,000 |
| 5. | ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு மாத செலவு ரூ. 1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakhs |

Cross செய்யப்பட்ட D.D ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்புக் கோருகிறோம்.

**MAY VEDA MATHA BLESS US ALL**

## பொன்விழாவா? Gun விழாவா?

"இந்த ஆண்டு சுதந்தரப் பொன் விழா ஆண்டா?" என மும்பைக்காரர்கள் ஆச்சர்யப்படாத குறைதான்! காரணம் சொல்லும்படியாக பெரிய கொண்டாட்டங்கள் எதையும் இங்கே காணோம்! ஸ்விட்ஜர்லாந்திலிருந்து இதற்கென்றே பிரத்யேகமாக வந்திருக்கும் பத்திரிகையாளருக்கு வாழ்க்கையே வெறுத்துவிட்டது! ரயில்வே ஸ்டேஷன்களில் (தகராறு பிடித்த ஒலிபெருக்கிகளில்) ஒலித்துக் கொண்டிருக்கும் தேச பக்திப் பாடல்களைத் தவிர, குறிப்பிடும்படியாக எதுவுமில்லை! சுகஸ்த் கிராந்தி மைதானத்தில், 9ம் தேதியன்று 'வெள்ளையனே வெளியேறு' இயக்கம் மீண்டும் நினைவு கூரப்படுவதும், அதில் பிரதமர் கலந்து கொள்வதும்தான் "ஹைலைட்டே தான்!" "காந்தீயத்தை மதிக்காத, சுதந்தர இயக்கத்தைப் பற்றி ஒன்றுமறியாத அரசால் எவ்வளத்தைக் கொண்டாட முடியும்?" என்ற விமர்சனங்கள் வேறு! ஊழலும் வன்முறையும் பெருகி, டான்கள் சுதந்தரமாக உலவிக் கொண்டிருக்கும் சூழலில், 'அண்டர்வால்ட்' விழா எடுத்தால் பொருத்தமாக இருக்கும் என்று நினைக்கிறார்களோ என்னவோ!



## இந்தியனே வெளியேறு!

முன்பு வெள்ளையனை இந்தியாவிலிருந்து விரட்டினோம். பொன்விழா ஆண்டில் இந்தியர்களை வெள்ளையர்களிடம் விரட்டிக் கொண்டிருக்கிறோம்! மும்பை IIT (பவாய்) மாணவர்கள் மூச்சூடும் அமெரிக்காவுக்கு மூட்டை கட்டுவதுதான் வழக்கமாகிவிட்டது. இந்த பாலிவுட்காரர்களுக்கு அமெரிக்கா, ஐரோப்பா என ஓட்டமெடுப்பது ஏன்? எல்லாம் இங்குள்ள 'டான்'களிடம் பயந்து கொண்டு! அண்மையில், மர்டர் மிஸ்டரி 'குப்த்' புகழ் ரவிராயின் சொந்த வாழ்க்கை ஒரு மர்டர் மிஸ்டரியாக மாற இருந்த வாய்ப்பு நூலிழையில் தப்பியது. இவரிடம் 'protection money' என்ற பெயரில் எக்கச்சக்கமாக பணத்தைக் கேட்டு தாவூத்தின் ஆட்கள் மிரட்ட, இவர் மறுக்க, 'தீர்த்துக் கட்டும்' படலத்தின்போது, மெய்க்காப்பாளராக நியமிக்கப்பட்டிருந்த ஒரு கான்ஸ்டபிளின் சமயோசித நடவடிக்கையால் ராய் தப்பினார். இதே கதிதான் பல தயாரிப்பாளர்களுக்கும். அடுத்த கட்டமாக ஹாலிவுட் நட்சத்திரங்களை இந்திப் படங்களில் எதிர்பார்க்கலாம்!

## மோதாதே பிரமோத்!

ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கொன்றா என்ன? அருந்ததி ராமசாமி என்ற பெண் பத்திரிகையாளர் தாக்கப்பட்டபோது, காவ்லியும் அவர் சகாக்களும் உடனடியாகக் கைது செய்யப்பட்டனர். ஆனால் பிரமோத் பாக்வத் என்ற ஆண் பத்திரிகையாளர் (மஹாராஷ்ட்ரா டைம்ஸ்) தாக்கப்பட்டு ஒரு மாதமாகியும் எந்த வித சலசலப்புமில்லை. பிரமோத், தாணாவைக் கலக்கும் பில்டர்கள் சட்ட விரோதமாக கட்டிய கட்டடங்களைப் பற்றி விலாவரியாக எழுதி, அவர்கள் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டிருந்தார். இவரது ரிப்போர்ட்டின் அடிப்படையில் சில கடைகள் இடிக்கப்பட்டன. உடனடியாக பிரமோதின் தலையிலும் இடி இறங்கியது. தாக்கியவர்கள், தாணா வட்டாரத்தில் செல்வாக்குள்ள சிவசேனைத் தலைவர் ஆனந்த்திகேவின் ஆட்கள் என்பது பரவலாக எல்லோருக்கும் தெரிந்திருந்தும், போலீஸ் தன் கையைத் தானே கட்டிப் போட்டுக் கொண்டிருக்கிறது. பத்திரிகையாளர்கள் மீது பெருகி வரும் வெறித்தனமான தாக்குதல்களை எதிர்த்து ஊர்வலம், மோர்ச்சா எல்லாம் திட்டமிடப்பட்டிருக்கிறது. தாக்கரேவும் இனி பத்திரிகையாளர்களிடம் சாதுத்தனமாக

# அருண்ஷோரி கிளப்பிய புயல்!

# நெஞ்சில் ஓடிய தேர்!

◆ ஒளிவு மறைவின்றி, நேருக்கு நேர் பேசுவது போன்ற எளிமையான ஸ்டைலில், சுவையான அனுபவங்களைப் பகிர்ந்து கொண்ட இந்தத் தொடர் மறக்க முடியாத ஒன்று. வி.கே. ராமசாமிக்கும் கல்கிக்கும் பாராட்டுக்கள்!
பொள்ளாச்சி, எஸ். யமுனா பார்வதி.

◆ பழைய நினைவுகளை நகைச்சுவை மிளிர சுவாரஸ்யமாகத் தந்த வி.கே. ஆரின் 'தேரோட்டம்' என்றும் நெஞ்சில் நின்று இனிக்கும்!
திருவண்ணாமலை, எல்எம். அபிநாட்சயா

◆ முன்னேறத் துடிப்பவர்களுக்கு வி.கே.ஆரின் 'தேரோட்டம்' தொடர் நல்லதொரு உற்சாக டானிக்..! அவரது நடிப்பைப் போலவே கலகலக்கச் செய்து விட்டார்! வி.கே.ஆரின் நியாயமான கோரிக்கைக்கு செவி சாய்ப்பாரா நம் முதல்வர்?
விசலூர் - 1, ஜி.ஜி.கிருஷ்ணன்.



◆ வி.கே.ஆரின் முப்பது வாரத் தொடர் சொன்ன அனுபவங்கள், இப்போதைய நடிகர்களுக்கும் சாதிக்கத் துடிக்கும் சாமான்யர்களுக்கும் நல்ல பாடம்!
திருப்பூர், ப. சங்கர்.

◆ தொடர் கட்டுரையின் இறுதிப் பகுதியில் வி.கே. ராமசாமி தமிழக முதல்வருக்கு போலீஸ் ஸ்டேஷன், ரயில்வே ஸ்டேஷன், ரேடியோ ஸ்டேஷன் ஆகியவற்றை நடத்துவதைப் போல ட்ராமா ஸ்டேஷன் நடத்த வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்திருப்பது பொருத்தமானதாகத் தெரியவில்லை. ஏனெனில் தமிழக அரசாங்கத்தின் சார்பில் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் என்ற அமைப்பு செயல்பட்டு வருவது அவருக்குத் தெரியாதா?
சிறுமுகை, ஜி. கதிரேசன்

◆ தங்கு தடையின்றி சீராக ஓடி நிலைக்கு வந்தது போல் இருந்தது, வி.கே.ஆரின் தேரோட்டம். ஓர் உண்மைக் கலைஞனின் எண்ணப் பிரதிபலிப்பை வாசகர்களுக்குக் கிடைக்கச் செய்த கல்கிக்கு நன்றி.
தூத்துக்குடி - 1, ப. சுகுமார்

நடந்து கொள்ள வேண்டும் என சிஷ்ய கோடிகளுக்கு ஆணையிட்டுவிட்டார். ஏற்கெனவே மயிரிழையில், அரசு 'டிஸ்மிஸி'லிருந்து தப்பித்திருக்கிறது. இதில் பத்திரிகையாளர்களை வேறு விரோதித்துக் கொண்டால் தாக்குப்பிடிக்க முடியுமா?

## ஃபால்ஸ் சர்ச்சைகள்

அருண்ஷோரி நேரம் பார்த்துத்தான் தனது "வர்ஷிப்பிங் ஃபால்ஸ் காட்ஸ்" புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார். அம்பேத்கர் செருப்புமாலை விவகாரம் தணிந்தபாடில்லை, அதற்குள் இவர் கிளப்பியுள்ள 'அம்பேத்கருக்கு தேச பக்தி குறைச்சல்' 'விவகாரம் பூதாகாரமாகியுள்ளது. ராம்தாஸ் அதவ்லே (RPI) யிலிருந்து அம்பேத்கரின் பேரன் வரை எல்லோரும் 'புத்தகத்தைத் தடை செய்', 'தீயிட்டுக் கொளுத்து' என்பது போன்ற கூக்குரல்களை எழுப்பியுள்ளார்கள். சில தலித் இலக்கியவாதிகள், "எழுத்து சுதந்தரத்தை மதிக்க வேண்டும்; ஷோரியின் எழுத்துக்களால் அம்பேத்கர் பெருமை குறைந்தா போய்விடும்?" என்று வாதிப்பது, இதமளிக்கும் மாறுதல். சாதாரணமாக ஈ ஓட்டிக் கொண்டிருக்கும் புத்தகம் கூட, சர்ச்சை என்றால் விற்பனையில் தூள்கிளப்புமே! 450 ரூபாய் விலையுள்ள இப்புத்தகம் நாளொன்றுக்கு 10-15 பிரதிகள் விற்பதாக பிரபல புத்தகக் கடைக்காரர் புன்னகைக்கிறார்!

## குட்பை குட்கா!

மும்பையின் ட்ரேட் மார்க்கான கணபதி விழாவில், பிரசித்திபெற்ற லால்பாக்-பரேல் பிள்ளையார்களெல்லாம் 'குட்கா' (ஒருவித மசாலா பான்) விளம்பரங்களின் ஆதரவில்தான் விசுவரூபமெடுப்பார்கள். திடீரென்று 'குட்கா மன்னன்' ராசிக்லால் மாணிக்சந்த் தாரிவாலின், எட்டு மாநிலங்களிலுள்ள பதினாறு நகரங்களில் எழும்பி நிற்கும் 160 வீடுகளிலும் வருமான வரிக்காரர்கள் ரெய்டு செய்து, பல கோடிகளையும், நகைகளையும், தஸ்தாவேஜுகளையும் கைப்பற்றி (இன்னும் லாக்கர் உடைப்பு பாக்கி) அவரை ஒரு வழி செய்திருக்கிறார்கள். குட்காவினால் கான்ஸர், டி.பி. போன்ற நோய்கள் பெருகுவதால், அதைத் தடை செய்ய அரசு தீவிரமாக முயன்று கொண்டிருக்கையில், இந்தச் செய்தி வேறு கொசுறாக! பெரிய பிள்ளையார்களைப் பற்றிய சிறிய கவலை தலைதூக்கியிருக்கிறது மும்பையில் இப்போது!

மும்பையிலிருந்து: **ஜெயஸ்ரீ ராஜ்**

# சிரிக்க காசு வேண்டாம்!

கருத்து : ஜூலி, படம் : ஸ்யாம்

"இந்தியன் எகானமி ஈஸ் ரூரல் எகானமி..."
"தப்பு சார்! இந்தியன் எகானமி ஈஸ் ஊழல் எகானமி!"

"நாட்ல எல்லாம் தாராளமயமாயிட்டதா சொல்லறாங்க; நீங்க என்னோட 'பாக்கெட் மணி'யைக் கொஞ்சம் தாராளமாக்கக் கூடாதா?"

"வறுமைக்கோட்டை அழிப்பதற்காக சிங்கப்பூரிலிருந்து சிறப்பு ரப்பர் இறக்குமதி செய்யப் போகிறோம்..."

"என்னடா! இந்த கிட்டி–புள் நூற்றம்பது ரூபாயா?"
"ஆமாம் தாத்தா! மல்டி நேஷனல் ஸ்போர்ட்ஸ் கம்பெனி தயாரிப்பாச்சே!"

"அமெரிக்காவைப் பார்! ஜப்பானைப் பார்!"
"நாங்க என்ன அமைச்சரா எல்லாத்தையும் ஓசியில பார்க்கறதுக்கு..."

"போன ஆட்சியில இத்தனை ஊழல் நடக்காம இருந்திருந்தா..."
"நாட்டுப் பொருளாதாரம் நல்லா முன்னேறியிருக்கும்னு சொல்றீங்களா?"
"இல்லை! எங்க கட்சி திரும்பவும் ஆட்சியைப் பிடிச்சிருக்க முடியாதே!"

எஸ். யாதவநாராயணன்

# அத்தை பெண்

வேப்பமரத்தடியில் நிற்கும் சந்தானத்திற்கு ஒரே பரபரப்பு. அடிக்கடி மணியைப் பார்த்துக் கொண்டான். எட்டு மணிக்கு டியூஷன் விடும் என்றார்கள்.

அவனது அத்தை பெண் சுமதி இங்கே படிக்கிறாள். அவளைப் பார்ப்பதற்காகத்தான் சென்னையில் இருந்து வந்திருக்கிறான்.

ரயிலை விட்டு இறங்கியதும், லாட்ஜில் ரூம் எடுத்துக் குளித்துவிட்டு, அவசர அவசரமாக இந்த மரத்தடிக்கு வந்துவிட்டான்.

அவன் இங்கு வந்திருப்பது யாருக்கும் தெரியாது. தெரியவும் கூடாது. பாக்கெட்டில் இருக்கும் கடிதத்தை அவளிடம் தந்துவிட்டு, உடனே புறப்பட்டு விட வேண்டும்.

அந்த கடிதம் அவ்வளவு முக்கியமானது. தபாலில் அனுப்பி, அடுத்தவர் கையில் மாட்டிவிட்டால், நல்லதல்ல...

என்னதான் பழகிய பெண்ணாக இருந்தாலும், நேரில் சந்தித்தாலும்... காதல் சம்பந்தப்பட்ட செய்திகளைப் பரிமாறுவதற்குக் கடிதமே வசதியானது.

அந்தக் தெருவிலேயே, வாத்தியார் வீட்டுக்கு இரண்டு வீடு தள்ளி இருப்பவன் ராஜு. தினமும் டியூஷன் விட்டுப் போகிற அழகிகளைக் கணக்கெடுப்பதுதான் அவனுடைய முக்கிய பணி. பெர்முடாஸ் போட்டுக் கொண்டு, வெற்று உடம்பாய்க் காட்சி தருவான்.

அவனுக்கு மரத்தடியில் நிற்கும் சந்தானத்தைப் பாத்ததும் மூக்குப் புடைத்தது.

ஜீன்ஸ் பேண்ட், டீ ஷர்ட், ஸ்போர்ட்ஸ் ஷூஸ், கூலிங்கிளாஸ், இடுப்பில் கேமரா என இருக்கும் சந்தானத்தைப் பார்த்து ராஜு எரிச்சல் அடைந்தான்.



'நம்ம ஏரியாவில் வந்து துணிச்சலா, அதுவும் கேமராவோட... ஷோ காமிக்கிறானா, அவனை விடக் கூடாது.' சட்டையைப் போட்டுக் கொண்டு டியூஷன் வாத்தியார் பாலு வீட்டுக்குப் போய், அவரைப் பவ்யமாக வெளியே அழைத்தான்.

செய்தியை அவன் ஒன்றுக்கு நான்காய் ஏத்திச் சொல்ல, அவர் சூடானார்.

போனமாதம் அப்படித்தான் ஒரு பெண் டியூஷனுக்குப் போவதாக வீட்டில் சொல்லிவிட்டு, யாரோடயோ ஓடிப்போய்விட்டது. இந்தச் சம்பவத்தால் வாத்தியாருக்கு கொஞ்சம் மார்க்கெட் டவுன்.

இருவரும் சந்தானத்தை நோக்கி வேகமாய் நடந்தார்கள்.

"உங்களுக்கு யாரு வேணும்? எதுக்காக இங்க நிக்கிறீங்க?" வாத்தியார் கேள்விகளை வீசினார்.

"எனக்கு வேண்டியவங்க இங்க டியூஷன் படிக்கிறாங்க. அவங்களைப் பாக்கணும்."

"வேண்டியவங்க யாருன்னு சொல்லு?" அதட்டலாய்க் கேட்டதும், சந்தானம் திகைத்தான். சூழ்நிலையைப் பார்த்ததும், ரோட்டில் செல்கிற இரண்டொரு நபர்கள் நின்று வேடிக்கை பார்த்தார்கள்.

"என் அத்தை பெண் இங்க படிக்கிறா, அவளைப் பார்க்கணும்." மெதுவாய்ப் பேசினான்.

"யாருடா உன் அத்தை பொண்ணு? இங்க படிக்கிற எல்லாரையும்தான் அத்தை பொண்ணுன்னு சொல்லுவீங்க. ஸார் இவன் பொய் சொல்றான். ரெண்டு போட்டாத்தான் உண்மை என்னான்னு தெரியும்." ராஜு ஆவேசமானான்.

"இது என்ன கேமரா? பொண்ணுங்கள போட்டோ எடுத்துட்டு பின்னாடி பிளாக் மெயில் பண்றதுக்கா?" கேமராவைப் பிடுங்கினார்.

"ஸார், ப்ளீஸ் ஸார். என்னை தப்பா புரிஞ்சிக்கிட்டிங்க ஸார். நான் அந்த மாதிரி ஆள் இல்ல ஸார். என் அத்தை பொண்ணு இங்க படிக்கிறா. அவளைப் பார்க்கத்தான் ஸார் வந்தேன்."

"திரும்பவும் பொய் சொல்றான் பாருங்க. இதுமாதிரி எல்லாம் கேட்டா சரியா வரமாட்டான்." என்ற ராஜு இரண்டு குத்து மூஞ்சியில் விட, சந்தானம் தடுமாறி மரத்தில் மோதி கீழே விழுந்தான். தலை கலைந்து, சட்டை எல்லாம் அழுக்கானது.

"சரி, சரி அடிக்காதீங்க தம்பி. யாரு என்னான்னு மெதுவாக விசாரிங்க. பதில் சொல்



# ஒழுங்கு மற்றும் காதல்

லவேண்ணா போலீசுக்கு போன் பண்ணுங்க." கூட்டத்தில் பரிதாபப்பட்டு யோசனை சொன்னார்கள்.

வாத்தியார் பேச ஆரம்பித்தார். "அத்தை பொண்ணை வீட்டுல போய்ப் பார்க்க வேண்டியதுதானே. இங்க ஏன்டா வர்ற? யாரு உன் அத்தை பொண்ணு?"

"நான் நெனைச்சது ஒண்ணு. நடந்தது ஒன்னாப் போச்சு... நான் உங்கள்ட்ட கொஞ்சம் தனியா பேசலாமா ஸார். ப்ளீஸ்." கெஞ்சினான்.

"தனியா என்னடா பேசறது. எதா இருந்தாலும் இங்கேயே சொல்லு." கூட்டத்தில் யாரோ கத்தினான்.

"கொஞ்சம் இருங்கப்பா. அவன் என்ன சொல்றான்னு கேட்போம். தனியா வா, என்னான்னு சொல்லு." வாத்தியார் பத்தடி தள்ளி அழைத்துச் சென்றார்.

"உங்ககிட்ட டியூஷன் படிக்கிற சுமதிதான் ஸார், என்னோட அத்தை பொண்ணு. அவகிட்ட இந்த லெட்டர யாருக்கும் தெரியாம கொடுக்கத்தான் ஸார் இங்கே வந்தேன். கடைசியில எல்லாமே தலைகீழா ஆயிடுச்சி." கண் கலங்கினான்.

"எங்க, அந்த லெட்டர கொடு." வாத்தியார் சட்டென்று அந்த கடிதத்தை பிரித்துப் படித்தார்.

'சுமதிக்கு...

உனது கடிதம் கிடைத்தது. நீ மனசுக்குள் என்னை நிறைய நேசிப்பதாகவும், திருமணம் செய்ய விரும்புவதாகவும் எழுதியிருந்தாய்.

நான், ஏற்கெனவே வேறொரு பெண்ணை விரும்புவதால்... என்னை மன்னிக்க வேண்டும்.

அன்புடன்,
சந்தானம்.

கடிதத்தைப் படித்த வாத்தியாரின் கோபமான முகம் மாறியது. தள்ளி நின்ற கூட்டத்திற்குத்தான் ஒன்றும் புரியவில்லை.

"ஐம்பது வருஷங்களாக சுதந்தரத்தைப் பாதுகாத்து வந்திருக்கிறோமே, அதுவே பெரிய சாதனைதான்" என்றார் ப. சிதம்பரம்.

உண்மைதான். ஜனநாயகத்தைக் காப்பாற்ற முடியாமல் ராணுவத்திடம் சுதந்தரத்தைப் பறி கொடுத்த நாடுகள் பல; நமக்குத் தெரியும்.

"எனவே, சீனா போல சுதந்தரத்தைப் பறி கொடுத்துவிட்டு பத்து சதவீதம் தொழில் வளர்ச்சி அடைவதை விடவும், சுதந்தரத்தைப் பாதுகாத்துக் கொண்டு ஏழு சதவீதம் வளர்ச்சி கண்டால் போதும் என்பேன்" என்றும் கூறினார் நிதி அமைச்சர்.

இடிக்கிறது. ஏனெனில் சுதந்தரத்தையும் பாது காத்துக் கொண்டு, கிடு கிடு முன்னேற்றம் கண்ட நாடுகளின் பட்டியல் நீண்டது. நமது முன்னேற்ற வேகம் தடைப்பட்டதற்குக் காரணம், 'லைசென்ஸ், பர்மிட், கோட்டா' ராஜ்யம்.

இப்போது காலதாமதமாக விழிப்புணர்வு ஏற்பட்டிருந்தாலும் மத்திய அரசு நிலையாமை யில் தவிக்கிறது. எனவே பொருளாதாரம் பாயும் குதிரையாக அல்லாமல் ஆடும் குதிரையாகிறது.



இலக்கிய சிந்தனை ஆதரவுடன் வானதி திருநாவுக்கரசின் முத்து விழா நடந்த போது, சிதம்பரத்தின் பேச்சு சிந்தனையைத் தூண்டுவதாக இருந்தது விசேஷம். ஆனால் அவர் சிந்தனையுடன் நமது சிந்தனை ஒத்துப் போக வில்லை; ஸாரி.

சுதந்தரப் பொன் விழாவை எண்ணி பெருமைப்படும் வேளையில், கிராமப்புறங் களில் வறுமை தலை விரித் தாடுவதையும் சுட்டிக் காட் டினார் ப.சி. அந்த வறுமையை விரிவாக மனம் உருகும்படி வர்ணிக்கவும் செய்தார். ஆனால் காரணத்தை யோசிக்க வேண்டாமா?

கால்பிரெய்த் சொன்னார் : "நல்ல கல்வி பெற்ற எந்த ஒரு சமுதாயமும் ஏழையாக இருந் ததில்லை; நல்ல கல்வி அறிவு பெறாத சமுதாயம் ஏழை மையை அனுபவிக்காமல் இருந்ததும் இல்லை. (ஒரிஜினல் ஆங்கிலம் கேட்பவருக்கு அனுப்பப்படும்.)

ஐம்பது ஆண்டுகளில் கல் விக்கு முக்கியத்துவம் தரத் தவறி விட்டன நமது மத்திய, மாநில அரசுகள். இன்றைக்கும் அப்படித்தான். நாளுக்கு நாள் படிப்பறிவு அற்றவர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டு போகிறதே தவிர, குறையவில்லை. அதிலும் வடக்கே நம்மை விடவும் படுமோசமான சூழ்நிலை.

வளர்ச்சி பெற்ற நாடுகள் பலவும் தர மான கல்விக்குத்தானே அதிகமான சதவீதம் பட்ஜெட்டில் நிதி ஒதுக்குகின்றன. அன்றைய கூட்டத்தில் கூட, வானதி திருநாவுக்கரசு பள்ளியில் படிக்கும் போது MI (தார்மிக சிந்தனை வகுப்பு) வகுப்புகளில் தன்னம்பிக்கையும் நேர்மை உணர்வையும் பெற்றதைத் தமது வாழ்க்கை வரலாறு புத்தகத்தில் எழுதியிருக்கிறார் என்பதைத்

# அறிவுக்கு வரி

தானே சிதம்பரமும் பாராட்டினார்! சிறந்த கல்வியினால், தேசபக்தி, தொழில் பக்தி, தெய்வ பக்தி, விடா முயற்சி, மனிதாபிமானம், உடல்மன ஆரோக்கியம் முதலியன உயரும்.

இதன் விளைவாக, மாசுக்கட்டுப்பாடு, ஒருமைப்பாடு, குடும்பக்கட்டுப்பாடு, போன்ற பலவற்றுக்கு நாம் செலவிடும் ஏராள கோடிகள் மிச்சப்படும். ஜாதி, மதப் பூசல்கள் மறையும். தொழில் நேர்த்தி அதிகரிக்க, ஏற்றுமதி, பெருகும், நாட்டின் பொருளாதார வளர்ச்சி துரிதப்படும்.

“ஹிந்து பத்திரிகை ஐந்து லட்சம் விற்கிறது; குமுதம் நாலு லட்சம் விற்கிறது; தமிழ்ப் புத்தகங்கள் ஓராயிரம் பிரதிகள் விற்க மூன்று ஆண்டுகள் ஆகின்றன” என்று வருத்தப்பட்டார் சிதம்பரம். “வானதி பதிப்பகமே நாலாயிரம் புத்தகங்களுக்கு மேல் பதிப்பித்திருந்தாலும் அவற்றில் நானூறு நூல்களே மறுபதிப்பு கண்டிருக்கின்றன” என்று விசனித்தார் அமைச்சர்.

நிலைமை மாற யோசனையும் கூறினார். எல்லா பதிப்பகங்களும் சேர்ந்து அறக்கட்டளை நிறுவுவதாம். தமிழக அரசு அதற்கு ஒரு கோடி வழங்குவதாம். பெரிய பதிப்பகம் தொடங்கி நவீன “மார்க்கெட்டிங்” நடத்தி நிறைய புத்தகங்கள் விற்பனை செய்வதாம்.

போகாத ஊருக்கு வழி. அறக்கட்டளை என்று அமைந்த பிறகு யாருக்கும் அதில் அக்கறை இராது. தனி மனித உழைப்பும் ஆர்வமும் இருக்காது. ஒரு கோடி தரும் அரசு, கூடவே ஓர் அதிகாரியை அனுப்பி நிர்வாகத்தைக் கட்டுப்பாட்டில் வைக்கும். செழிப்பது, லஞ்ச ஊழலாகத்தான் இருக்கும்.

நடக்க வேண்டியது என்ன? கிராமம்தோறும் நூலகம் ஏற்பட வேண்டும் என்று திட்டமிட்டுச் செயல்பட்டார் காமராஜர். பஞ்சாயத்துக்கள் நானூறு ரூபாய்க்குப் புத்தகங்கள் வாங்கிக் கொள்ளலாம் என்று அனுமதித்தார். அதெல்லாம் பழங்கனவாகிப் போனது. நூலக வரி, சம்பளப் பட்டுவாடாவுக்கே போதவில்லை; புத்தகங்கள் கணிசமாக வாங்கப்படும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

சரி, தனிமனிதருக்கு விற்கலாமே என்றால், அன்று அமைச்சரே வெளியிட்ட வானதி திருநாவுக்கரசு எழுதிய “வெற்றிப்படிகள்” என்ற புத்தகத்தின் விலையே ரூ. 75! எத்தனை பேருக்கு வாங்கும் சக்தி இருக்கிறது? அப்படி இருக்கிறவர்கள், ஆங்கிலப் புத்தகங்களை நாடிப் போய் விடுகிறார்கள். குமுதம் விற்கிறதே என்றால் விலை ரூ. 3/50 என்பது தவிர, வெகுஜன கவர்ச்சிக்காகவே நடத்தப்படுகிறது. ஹிந்து அகில இந்திய ரீதியில் விற்பனையாகிறது. அவற்றின் பொருளாதாரமே வேறு. புத்தகப் பதிப்பகத்தின் பொருளாதாரத்துடன் ஒப்பிட முடியாது.

சிதம்பரம் நிஜமாகவே புத்தகத் துறையின் வளர்ச்சியில் ஈடுபாடு கொள்வாரேயானால் பதிப்பகங்களுக்கு மலிவு விலையில் காகிதம் கிடைக்கச் செய்வார். புத்தகங்களின் விலை குறையச் செய்வார். நூலக இயக்கத்தைப் பலப்படுத்துவார். இவையெல்லாம் கல்வித் திட்டத்துடன் இணைந்து அமுலாக வேண்டியவை. ஆனால் கல்விக்குப் பணம் ஒதுக்குவதில் தான் அரசு கணக்கம் காட்டுகிறதே!

போதாக்குறைக்கு பொது அறிவை வளர்த்து வரும் பத்திரிகைகளுக்கும், அயல் நாடுகளிலிருந்து தருவிக்கப்படும் நியூஸ் பிரிண்ட் தாளுக்கு anti dumping duty விதிக்கப்போவதாக மத்திய அரசு அச்சுறுத்திக் கொண்டிருக்கிறது. ஆக, பதிப்பகப் பொருளாதாரம் மட்டுமின்றி பத்திரிகைப் பொருளாதாரமும் படுத்துப் போக வேண்டும் என்பதே அரசின் நோக்கமாக உள்ளது.

புத்தகத் துறையில் இருந்து வந்த சில வரிச் சலுகைகளும் வாபஸ் பெறப்பட்டுள்ளதாக அன்றைய கூட்டத்திலேயே மணிவாசகர் பதிப்பகம் மெய்யப்பன் குறிப்பிட்டார்.

ஒரு பக்கம் அறிவுக்கு வரி போடுகிறது அரசு; மறுபுறம் சீரான கல்வி அனைவருக்கும் அளிப்பதில் கணக்கம் காட்டுகிறது. போதாக்குறைக்கு சினிமாவை முந்திக் கொண்டு, டீவியும் கேபிள் டீவியும் பரவலாகி வருகின்றன. அதில் நல்லது எது கெட்டது எது என்று பகுத்துப் பார்க்கும் அறிவை மக்களுக்கு நல்ல கல்விதானே அளிக்க முடியும்? அந்த ஆற்றல் மக்களுக்கு இல்லாத போது, டீவி. நிகழ்ச்சிகள், அயல் நாட்டு நிகழ்ச்சிகள் உள்பட எத்தகைய மோசமான பாதிப்புகளை ஏற்படுத்தும்! யோசிக்க வேண்டாமா?

இதில் சிதம்பர ரகசியம் ஏதுமில்லையே!

— கி. ராஜேந்திரன்

# குறையொன்றுமில்லை



தரிசனத்துக்குத் தினம் தினம் போகிறவரை அந்த பார்த்தசாரதி பெருமாள் பார்க்கிறாரா...? இந்தக் கேள்வியோடு போன வாரம் நிறுத்தினேன்.

தரிசனத்துக்குப் போன வரை நிறுத்தி வேதமே அந்தக் கேள்வியைக் கேட்டது.

அதற்குப் பதில் தெரியாமல் அவர் நின்ற போது வேதமே பதிலையும் சொன்னது:

ஒரு நூறு கனபாடிகள் உட்கார்ந்து ஓரிடத்தில் பாராயணம் செய்கிறார்கள். தினம் தினம் பார்த்தசாரதியை சேவிக்கக்கூடிய ஒருவன் அவ்விடம் போகிறான். அவனையும் அந்த வேத கோஷம் ஈர்த்து உட்கார வைத்து விடுகிறது. மூன்று மணி நேரம், பாராயணம் முடியும் வரை உட்கார்ந்து கேட்கிறான் அவன். அவனுக்கு எதுவும் புரிய வில்லை; ஆனாலும் கேட்கிறான்...' - இவ்வாறு உட்கார்ந்து கேட்கும் எண்ணம் யாரொருவனுக்கு வருகிறதோ, அவனை பகவான் நிச்சயம் பார்ப்பான்.

'எத்தனை நேரம் இதைக் கேட்பது?! வேண்டாம், போதும்! என்று ஒருவன் எழுந்து போய்விடுவானானால் அவனை பகவான் பார்ப்பதில்லையாம்!

'ப்ரஜாபதிஸ்த்வம் வேதா' என்ற பதத்துக்கு அர்த்தம் சொல்லப் போகத்தான் இந்தக் கதை வந்தது. ப்ரஜாபதி என்றால் நாம் பொதுவாக பிரும்மாவைச் சொல்லும் சொல் அது. அதுவே மஹாவிஷ்ணுவையும் சொல்கிறது. அதெப்படி என்று நாம் புரியாமல் கேட்போம். நமது புரியாமையினாலேயே அது தவறாகி விடுமா என்ன....?

ப்ரஜாபதிஸ்த்வம் வேதா என்கிறபோது சாக்ஷாத் விஷ்ணு என்றுதான் அர்த்தம். ப்ரஜாபதி சப்தத்தினால் விஷ்ணு சொல்லப் படுகிறான் என்றார் வித்யாரண்யர்.

இன்னொரு மந்திரம் - அதிலே வருண சப்தம் வருகிறது.

வருணன் என்றால் தீர்த்த தேவதை என்று அர்த்தம். மற்றொரு இடத்தில் வருண சப்தத்துக்கு விஷ்ணு என்று பொருள் வருகிறது. எல்லா காமங்களையும், நமது மனத்தில் எழும்படியான கேள்விகளையெல்லாம் வருண ரூபியான விஷ்ணு பூர்த்தி செய்து வைக்கிறான். - இப்படித்தான் வருண சூக்தத்தில் வேதம் சொல்கிறது. வருண சப்தத்தால் சொல்லப்படக் கூடியவர் மஹா விஷ்ணுதான் என்று வித்யாரண்யர் வியாக்யானமும் தருகிறார்.

இவ்வாறு, எந்த தேவதையினுடைய பெயரை நாம் சொல்லிக் கொண்டே வந்தாலும் அந்தந்த இடத்தில் பார்க்கக்கூடியது சாக்ஷாத் விஷ்ணு என்று சொல்லப்படுகிறவன்தான். சர்வதேவாந்தர்யாமியாக இருக்கக்கூடிய சர்வேச்வரன் அவன்.

செல்வம் நிறைய உடையவனாம் விஷ்ணு - வித்யாரண்யர் பாஷ்யம் எழுதுகிறார்!

ப்ரபூத தனயுக்த: - ஐச்வர்யம் மிக்கவன் பரமாத்மா. வாரி வாரி செல்வத்தை நமக்குக் கொடுக்கக்கூடியவன். ஐஹிகமான செல்வத்தைக் கொடுக்கிறான்; வைகுண்ட

19 முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

கல்கி

17.8.97 இதழுடன்
இணைப்பு

# பற்களைப் பாதுகாப்போம்!



**நமக்குப் பல் ஒழுங்காக முளைக்கிறதோ இல்லையோ, பல்லைப் பற்றிய சந்தேகங்கள் நிறையவே முளைக்கின்றன. ஒரு பல் டாக்டரிடமே எல்லாவற்றையும் கேட்டு விடுவோமே என்று டாக்டர் பரமேசுவரனை அணுகினோம்.**

**டாக்டர் பரமேசுவரன், சென்னை பல் மருத்துவக் கல்லூரி மற்றும் மருத்துவமனையின் முன்னாள் முதல்வர். ஆங்கிலத்திலும் தமிழிலும் ஏராளமான கட்டுரைகள் எழுதி வருபவர். நியூயார்க்கிலுள்ள அமெரிக்க பல் மருத்துவர் கழகத்தில் உறுப்பினராக அங்கீகரிக்கப்பட்டவர்.**

**நாம் எழுப்பிய கேள்விகளும், டாக்டரின் பதில்களும், இதோ, உங்களுக்காக!**



*ல் எப்போது முளைக்கிறது, டாக்டர்?*

தாயின் கர்ப்பத்தில் இருக்கும் ஆறாவது வாரத்திலேயே பற்கள் உருவாகத் தொடங்குகின்றன. இதை வித்து என்போம். நெல் வித்து மாதிரி, இது பல் வித்து. பிறந்த ஆறாவது அல்லது ஏழாவது மாதத்தில், கீழ் வரிசையில் முதலில் பல் முளைத்து விடும். ஆண் குழந்தைக்கும் சரி, பெண் குழந்தைக்கும் சரி; ஒரே மாதிரிதான். ஆனால் அது உறுதியாக இல்லாமல், சில குழந்தைகளுக்கு ஆட்டம் இருக்கும். ஆடி ஆடி, சில சமயம் குழந்தையின் வயிற்றுக்குள்ளேயே போக வாய்ப்பு உண்டு. அது மாத்திரமல்ல; தாயிடம் பால் குடிக்கும்போது மார்பில் கடிபட்டு விடுவதால் புண் ஆகிவிடும். அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் அந்தப் பல்லை எடுக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுவிடும். அப்போதும் நாங்கள் யோசித்துத்தான் செய்வோம். பால் பற்கள் போய் நிலையான பல் ஏழாவது வருஷம் தான் வரும் என்பதால் அங்கே மறுபடி பல் வருமா வராதா என்று பரிசோதித்த பிறகுதான், அந்த ஆட்டம் காணும் பல்லை எடுப்போம்.

- *பல் என்பது எலும்பு வகையா அல்லது தனிரகமா?*

பல்லின் வெளிப்புறப் பூச்சுக்கு எனாமல் என்று பெயர். பல் சிகரத்தை முழுதுமாக இது மூடியிருக்கும். மிகவும் வலுவான பகுதி இது. பல்லின் பாகத்தில் முக்கால் பங்கு தந்துகி (DENTIN) என்கிற பகுதி. இது பல்லின் சிகரத்திலேயும், வேர்ப் பகுதியிலேயும் நிறைந்திருக்கிறது. சிகரப் பகுதியில், எனாமல் ஒரு தொப்பி போல மூடி இருக்கும். வேர்ப் பகுதியில் 'சிமின்ட்டம்' என்கிற எலும்பு போன்ற பொருளால் மூடப்பட்டிருக்கிறது. பல்லின் நடுப்பகுதி மட்டும் கூடாக இருக்கும். இந்த இடம்தான் பல்லுக்குள்ளே இருக்கிற உயிரோட்டமான பகுதி. இதைப் பற்கூழ் என்கிறோம். பல்லின் வேர் நுனிகளின் வழியாக வருகிற நரம்பு, இரத்தக் குழாய்கள் எல்லாம் இந்தப் பகுதியில் இருக்கிறது. இது மிக முக்கியமான பகுதி. இது கெட்டுப் போய்விட்டால் பல்லுக்கு ஆபத்து. எலும்புக்குள்ளே புதைந்திருக்கிற பல்லின் வேரை, எலும்போடு இணைக்கிற பகுதி; இது நூல் நூலாக, பல திசைகளிலேயும் எலும்பையும், பல்லின் சிமின்ட்டத்தையும் இணைத்து, பல் வலுவாக நிற்க ஒரு பிடிமானமாக இருக்கிறது.

- *பால் பற்கள் விழுந்து முளைக்கிறபோது, சில பற்கள் முளைக்க நாளாகும். அப்போது, கிராமப்புறங்களில், பல் முளைக்க வேண்டிய இடத்தில் நெல்லால் கீறி விடுகிறார்கள். உடனே முளைத்து விடும். இதற்கு என்ன காரணம்?*

குழந்தைகளுக்கு ஆறாவது, ஏழாவது மாதத்தில் பல் முளைக்கவில்லை என்றால், கொஞ்சம் பொறுத்துப் பார்க்கலாம். ஏனென்றால் எட்டாவது, ஒன்பதாவது மாதத்தில் கூட சிலருக்குப் பல் முளைப்பது உண்டு. ஈறு தடித்து இருந்தால் மட்டுமே, கிராமப்புறங்களில் கீறி விடுவார்கள், சுலபமாக உறையைக் கிழித்துக் கொண்டு வரட்டும் என்று. இப்போது வசதி இருக்கிறதால்,

ஏன் வரவில்லை என்று பார்த்து, சின்ன சர்ஜரி செய்து பல்லை எடுத்து விடுகிறோம். 'எடுத்து'விடுவது என்றால் வெளியே கொண்டு வருவது என்கிற அர்த்தத்தில் சொல்லுகிறேன்.




● ***சில குழந்தைகளின் பற்கள் மாத்திரம் ஒரே சீராகவும், சில குழந்தைகளுக்குத் தாறு மாறாகவும் முளைக்க என்ன காரணம்?***

சிலருக்குத் தாடைக்குள் இடம் போதாமல் இருக்கும். இருபது பல்லுக்குத்தான் இடம் இருக்கிறது என்கிற நிலையில், மேலும் பற்கள் முளைக்கும் போது, தாறுமாறாக முளைக்க ஆரம்பித்து விடுகின்றன. பற்களின் வளர்ச்சிக்கு ஏற்ப, தாடையும் வளர்ச்சி பெற வேண்டும். வம்சாவளியாகத் தாடை கோணலாக இருந்தாலும், இப்படித் தாறுமாறாகப் பல் முளைக்கும்.

மூன்றாவது வயதிலேயே இம்மாதிரி குழந்தைகளை டாக்டரிடம் கூட்டிக் கொண்டு வந்து விடுகிறார்கள். இது தேவையில்லை. இயற்கையே, வளர்ச்சியில் இதைச் சரிப்படுத்த வசதி செய்து கொடுக்கிறது. நாக்கு உள்ளிருந்து தள்ளி விடுகிறது. உதடுகள் பிரஷர் கொடுக்கின்றன. கன்னப் பகுதியில் சதையின் அழுத்தம் இருக்கிறது. அதனால், போகப் போக இது சரியாகி விடவும் கூடும்.

இது தவிர, வாய் வழியே சுவாசிப்பது, பரம்பரையாக (ஜெனடிகலாக) வருகிற குறை, தவிர எலும்பு வளரத் தேவையான கால்ஷியம் இல்லாமல் போனால் எலும்பு வளர்ச்சி இராது. அதனால் கால்ஷியம் குறைபாடு இருந்தால் அதைச் சரி செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் தாறுமாறாகப் பற்கள் முளைப்பது தவிர்க்கப்படலாம்.



● ***பல்லுக்குப் பல் இடைவெளி விட்டு முளைக்க என்ன காரணம்?***

பெற்றோருக்கு அப்படி இருந்தால், குழந்தைக்கும் அப்படியே இருக்கும்! 'ஒரு ஒட்டகம் போகிற அளவுக்கு இடைவெளி இருக்கே'ன்னு கேலியாகக் கூடச் சொல்லுவார்கள். ஆனால் பலரும் அந்த இடைவெளியை ஓர் அதிர்ஷ்டத்தின் அறிகுறியாகவே கருதுகிறார்கள். அதனால் நான்கூட, 'எதற்கு மூட வேண்டும்? உங்கள் அதிர்ஷ்டத்தை நீங்களே குறைத்துக் கொள்ளாதீர்கள்!' என்று என் பேஷண்ட்டுகளிடம் சொல்லுவதுண்டு.

ஆப்ரிக்க இனத்தவரிடையே இந்த நடுப்பல் இடைவெளி சர்வசாதாரணம். இனங்கள் பற்றிய ஆராய்ச்சியாளர்கள் இதற்கான காரணங்களைச் சொல்லக் கூடும்.

சிலருக்கு அந்த இடத்தில் பல் முளைக்காமலே இருக்கலாம். அதனாலும் இடைவெளி இருக்கும்.

அபாரிஜின்ஸ் என்று சொல்லப்படுகிற ஆதிவாசிகள் தங்கள் உணவைப் பக்குவம் பண்ணாமலே சாப்பிட்டார்கள் அல்லவா? அப்புறம் முன்னேற்றம் உண்டாக உண்டாக, அந்த மாதிரி நிலைமை மாறி வந்தபோது, பற்கள் கூடுதலாக வளருவதும் நின்று போய் விட்டது. மூன்று செட் பற்கள் மட்டுமே மேலேயும் கீழேயும் முளைத்து, நாலாவது செட் பற்கள் முளைக்கவே தேவையில்லாது போய்விட்டது. விஸ்டம் டீத் எனப்படும் ஞானப் பற்கள் சிலருக்கு முளைக்காமலே கூடப் போய்விடுகின்றன!




ஆம் நூற்றாண்டில், சொத்தைப் பல் இருந்தால், அதற்குள் பூதம் வசிப்பதாக நினைத்துப் பீதி அடைந்து கொண்டிருந் தார்களாம்!

● ***அதிகப் பற்கள் அல்லது தெற்றுப் பற்கள் முளைக்க என்ன காரணம்?***

தாடைக்குள் போதுமான இடம் அல்லது இடைவெளி இல்லை என்றால் அப்படித்தான் தாறுமாறாக வரும்.

இன்னொன்று, பழக்கம்:

கை சூப்புவது, வாய் வழியே சுவாசிப்பது, நாக்கைக் கொண்டு எப்போது பார்த்தாலும் துருத்திக் கொண்டே இருப்பது - சரியாக நாக்கு நுழைகிற அளவுக்கு பல் இடைவெளி இருக்கும். பழக்கங் களை எல்லாம் தடுத்து நிறுத்திவிடலாம். ஆலோசனை சொல்லி நிறுத்தலாம்.

● ***முதலில் முளைப்பது எத்தனை பற்கள்? பிறகு அவை விழுந்து அப்படியே முளைக்கின்றனவா?***

முதலில் இருபது பற்கள்தான் முளைக்கும். பிறகு இந்த இருபதும் விழுந்து மறுபடி முளைக்கும். 14 முதல் 18 வயதுக்குள் முளைத்து விடும். பிறகு ஞானப் பல் முளைக்கும்.

● ***20 - 25 வயதுக்கு மேல் முளைக்கும் பற்கள், மறுபடியும் விழுந்து முளைப்பதில்லையே, ஏன்?***

20 - 25 அல்ல. 16 - 18 வயதுக்கு மேல் விழுந்து முளைக்காது. முதலில் சொன்ன மாதிரி, நமக்கு இரண்டு வகைப் பற்கள்தான் முளைக்கின்றன. ஒன்று பால் பற்கள். இன்னொன்று பர்மனென்ட் பற்கள். பால் பற்கள் ஒருமுறை விழுந்து, மறுபடி முளைக்கிற போது, அவை நிரந்தர பற்களாகி விடுகின்றன. இது விழுந்து விட்டால் பிறகு அங்கே வளரவே வளராது! ஞானப்பல்தான் மறுபடியும் விழுந்து முளைப்பதில்லை.

● ***பால் பற்கள் உள்ள குழந்தைகளுக்குப் பல் துலக்க வேண்டியது அவசியமா?***

பல் துலக்கியே ஆகணும். ஏன், பல் முளைக்குமுன்பே கூட வாய் கழுவியே ஆகணும். ஏனென்றால், பாலில் உள்ள சர்க்கரையும் பாலோடு சேர்ந்து ஒரு படிமானம் மாதிரி படிந்து, வாய் துர்நாற்றம் வரும். சுத்தமான துணியை விரலில் சுற்றிக் கொண்டு, வாய்க்குள் நுழைத்துச் சுத்தம் பண்ண வேண்டும். குழந்தைகளுக்கு என்று இருக் கும் மிருதுவான பிரஷ்ஷைப் பெற்றோர் தேர்ந்தெடுத்துப் பயன் படுத்தலாம்.

● ***விழுந்த பல்லை எடுத்துக் கொண்டு வந்தால் ஒட்ட வைத்து விட முடியுமா?***

ஓ, தாராளமாக! ஆனால் விழுந்த பல்லைப் பத்திரமாக எடுத்து, முதலில் நீரில் கழுவிவிட்டு, ஒரு சிறிய குப்பியில் பால் விட்டு, அதில் அந்தப் பல்லைப் போட்டு எடுத்துக் கொண்டு வந்தால், உடனே பொருத்தி விடலாம். நம் உடம்பில் ரத்தத்துக்கு என்ன குணமோ, அதே குணம்தான் பாலுக்கும். எனவே பல் பத்திரமாக இருக்கும். அரை மணிக்குள் கொண்டு வந்துவிட வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஆனால் மூன்று நான்கு மணி நேரம் கழித்துக் கொண்டு வந்த பிறகும் கூட நான் பொருத்தியிருக்கிறேன்.

● ***பற்களை எப்படித் துலக்க வேண்டும்? பிரஷ்ஷின் அசைவுகள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று வரை முறை இருக்கிறதா?***

முதலில் வாயை லேசாகத் திறந்தபடி வைத்துக் கொள்ள வேண்டும். பல்லைக் கடித்தபடி பல் தேய்க்கக் கூடாது. ஒரு விரல் அகலத்துக்கு வாயைத் திறந்தபடி வைத்துக் கொள்ள வேண்டும்.



இதற்கு Water Pic என்று பெயர். பிரஷர் மூலம் தண்ணீரை வேகமாகப் பீய்ச்சும். வாய்க்குள் சிக்கிக் கொண்டிருக்கும் துணுக்கு களை வெகு எளிதாக எடுக்க இது உதவும். பல் இடுக்குகளில் ஒட்டிக் கொண்டிருக்கும் உணவுத் துண்டுகள், சாக்லேட் துண்டுகள் எல்லாவற்றையும் எடுக்க இதைப் பயன்படுத்துவார்கள்.

வாய் சதைகளைத் தளர்வாக வைத்துக் கொண்டு தேய்க்க வேண்டும். பிரஷ்ஷிலே கொஞ்சமாகப் பசையை வைத்து, எல்லாப் பற்களிலும் தடவி விடவேண்டும். அதன் பிறகு கீழ்த் தாடையின் இடது பக்க, கடைவாய்ப் பற்களின் வெளிப்பக்கத்தில், பிரஷ்ஷின் குச்சங்கள் கீழ் நோக்கி, பற்களுக்கு இணையாக இருக்கும்படி வைத்துக் கொள்ள வேண்டும். பிரஷ்ஷின் குச்சங்கள் ஈறுகளைத் தொட்டபடி இருக்க வேண்டும். இப்படிச் செய்யும்போது, பிரஷ்ஷின் குச்சங்கள் இரண்டு பற்களுக்கு நடுவிலும், ஈறுகளுக்கும் பற்களுக்கும் நடுவிலும் உள்ள உணவுத் துகள்களை எடுத்து விடும். பிரஷ்ஷை, கீழ்ப் பல்லைத் தேய்க்கும்போது கீழிருந்து மேல் நோக்கித் தேய்த்து விட்டு, எதிர்த்திசையில் மேலிருந்து கீழாகக் கொண்டு வராமல், ஒரு பக்கமாக மட்டுமே தேய்க்க வேண்டும். எதிர்த்திசையில் தேய்த்தால், பிரஷ்ஷில் ஒட்டிக் கொண்டிருக்கும் அழுக்கு, மீண்டும் பல் இடுக்குகளில் திணிக்கப்படலாம். பிரஷ் பண்ணும்

போது ஈறு மேலிருந்து கீழே மஸாஜ் பண்ணுகிற மாதிரி செய்ய வேண்டும். பல் தேய்த்து முடித்ததும், ஈறுகளுக்கு விரல்களால் மஸாஜ் செய்து விட வேண்டும்.

● ***பல் துலக்கி முடிந்ததும், டங் க்ளீனரால் நாக்கை வழிக்கிறோமே, ஏன்?***

நாக்கில் படிந்திருக்கும் படிமானத்தை (கோட்டிங்) அகற்றத்தான். பொதுவாக நாக்கைச் சுத்தப்படுத்தும் பேஸிக் ஹைஜீன் தான். உடல் நலம் குன்றி இருக்கும்போது, காய்ச்சல் இருக்கும் போது, நாக்கில் வெள்ளையாகப் படிமானம் இருக்கும். சாதாரணமாக இருக்கும் போது இது அத்தனை தெரியாது. ஆனாலும், தண்ணீர் விட்டு வாயைக் கொப்பளித்த பிறகு, நாக்கு வழிப்பானால் ஒரு தடவை சுத்தம் செய்துவிடுவது நல்லது. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் வழிப் பானைவிட, பிளாஸ்டிக் வழிப்பான் மிருதுவானது. நாக்கைச் சுத்தம் செய்ய ஏற்றது.

● ***வெளி நாடுகளில் எல்லாம், சின்ன வாட்டர் பம்ப்பை உபயோகித்து, பற்களைச் சுத்தம் செய்கிறார்களே?***

அதற்கு Water Pic என்று பெயர். பிரஷர் மூலம் தண்ணீரை வேகமாகப் பீய்ச்சும். வாய்க்குள் சிக்கிக் கொண்டிருக்கும் துணுக்கு களை வெகு எளிதாக எடுக்க இது உதவும். பல் இடுக்குகளில் ஒட்டிக் கொண்டிருக்கும் உணவுத் துண்டுகள், சாக்லேட் துண்டுகள் எல்லாவற்றையும் எடுக்க இதைப் பயன்படுத்துவார்கள்.

● ***"ரப்பர் பாண்ட் மாதிரி விரல்களில் கோத்துக் கொண்டு, பல்லை அதில் பிணைத்துச் சுத்தம் செய்கிறார்களே, அது என்ன முறை?"***

அது ரப்பர் அல்ல. ஒரு வகை சில்க் இழை. இதை Dental Floss என்போம். இந்த நூல் இழையை அதிகமாக முறுக்காமல், அதன் மீது தேன்மெழுகு (wax) பூசிவிடுவார்கள். இரண்டு பற்களுக்கும் இடையே சுத்தம் செய்ய இதைப் பயன்படுத்துவார்கள். உணவுத் துணுக்குள் தோல் துணுக்குகள் எல்லாவற்றையும் இந்த சில்க் நூலிழைப் பிடியால் எடுத்து விடுவார்கள்.

இது இந்தியாவிலும் கிடைக்கிறது. ஜான்சன் அன்ட் ஜான்சன் கம்பெனியார் தயாரித்து விற்பனை செய்கிறார்கள்.

● ***Soft, Medium, Hard என்று பிரஷ்களில் மூன்று வகைகள் உள்ளதே? யார் எந்த பிரஷ்ஷை எப்படித் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவது?***

Softதான் சிறந்தது. மீடியத்துக்கு மேல் உபயோகிக்கவே கூடாது. பற்களுக்கு இடையே விரல் போகாது. அதனால்தான் பிரஷ் தேவைப்படுகிறது. ஹார்டு பிரஷ் கூடவே கூடாது. வேணுமானால் பொய்ப் பல் செட்டைத் தேய்த்துச் சுத்தம் பண்ண ஹார்டு பிரஷ் உபயோகிக்கலாம்.

● ***சிலருக்குப் பற்களில் கூச்சம் ஏற்படுகிறதே, அது எதனால்?***

பல காரணங்கள் இருக்கலாம். ஒன்று பல்லை அதிகமாகப் பயன் படுத்துகிறவர்களுக்குக் கூச்சம் இருக்கும். அதாவது வெற்றிலை போட்டுக் குதப்புகிறவர்கள். அதிகம் யூஸ் பண்ணப் பண்ண எனாமலைத் தாண்டி இருக்கும் தந்துகி பாதிக்கப்பட்டு, கூச்சம் ஏற்படும். தவறான முறையில் பிரஷ் பண்ணுவது, ஆஸிட்ஃபுட், கூல்டிரிங்க்ஸ் இவைகூட நாளாவட்டத்தில் கூச்சம் ஏற்படுத் தும்.

***எலிசபெத் அரசியாருக்கு பல் சொத்தை காரணமாக இன்ஃபெக்ஷன் உண்டாகி, நோய்வாய்ப் பட்டு, மரணம் ஏற்பட்டதாம்!***

● ***பல் சொத்தை எப்படி வருகிறது? தடுப்பது எப்படி? அதைக் கவனிக்காமல் விட்டால் என்ன ஆகும்?***

பற்களில் உள்ள குழிகளில், ஒட்டக் கூடிய வகை இனிப்புப் பண்டங்கள் தங்கிவிடும்போது பற்சொத்தை ஆரம்பமாகிறது. சாக்லேட் ஓர் உதாரணம். பற்கள் இடையே இவை ஒட்டிக் கொண்டு, தங்கி விடாமல் இருக்க பிரஷ் செய்ய வேண்டும். தங்கி விட்டால், அது உமிழ் நீரோடு கலந்து போய்விடும். உமிழ் நீரோடு ஒரு இரவு முழுதும் கலந்து அதனுடன் மைக்ரோ ஆர்கானிசம் சேர்ந்து கொண்டுவிடும் போது, பல் சொத்தை ஆகிவிடுகிறது. ஆசிட் திரவம் பட்டால் எப்படி ஆகுமோ அது மாதிரி குழி பெரிதாகி, எனாமல் உடைந்து போய், பிறகு நந்துகியைப் பாதிக்கும். இப்போது ஸீலிங் எனப்படும் நவீன முறையில், ஸீல் பண்ணிவிடுவோம்.

● ***சொத்தைப் பல்லைப் பிடுங்குகிற போது சில சமயங் களில் முழுப் பல்லும் பிடுங்கப்படாமல், சிறிதளவு தங்கிவிடு வதாகவும், அதனால் சிலருக்குப் பிரச்னைகள் வருவதா கவும் சொல்லுகிறார்களே?***

இது உண்மைதான். ஆனால் பல்லின் மூன்றில் ஒரு பங்குக்கு மேல் இருந்தால், திறந்து எடுத்து விடுவோம். அதை விடச் சிறியதாக இருந்தால் பிரச்னை ஒன்றும் வராது என்ப தால் அப்படியே விட்டுவிடுவோம். ஆனால் பேஷண்ட்டிடம் சொல்லிவிடுவோம். இதனால் உங்களுக்குப் பிரச்னை எதுவும் வராது. வந்தால் பிறகு பார்த்துக் கொள்ளலாம்; பயப்பட வேண்டாம் என்போம். சிலர் 'வேண்டாம், டாக்டர், எதுக்குப் பிரச்னை? எடுத்துவிடுங்க!' என்பார்கள். அப்போது ஆபரேட் செய்து எடுத்துவிடுவோம். எடுக்க வேண்டுமா, வேண்டாமா என்று அந்தந்த நிலைமையைப் பொறுத்து, டாக்டர்தான் தீர் மானம் பண்ண வேண்டும்.

● ***ஈறுகளைப் பாதுகாப்பது எப்படி?***

நம் ஊரில் 70 சதவிகிதம் ஈறு வியாதிதான். 30 சத விகிதம்தான் பல் வியாதி. மேல் நாட்டில் இந்த விகிதம் தலைகீழாக இருக்கும். ஈறு வீங்கி, சிவப்பாக ஆன உடனே ஈறு வியாதி என்று தெரிந்துவிடும். ஈறு என்பது பல்லைச் சுற்றி இருக்கிற சதை. பல்லுக்கு எலும்புதான் சப்போர்ட். ஈறு அந்த எலும்புக்கும் ஒரு கவசம் மாதிரி மூடி இருக்கிறது. ஈறி லிருந்துதான் இரத்தம் சர்க்குலேட் ஆகிறது. ஈறு வீங்கிப் போய், பல்லிலிருந்து விலகி, விடும். காரை படிந்துவிடும். உறுத்தல் ஆரம்பித்து விடும். ஈறு விலக விலக, காரை படிவது அதிக மாகிக் கொண்டே போகும். வேர் வரை போய், பல்லை ஆட்டி விடும்.

ஈறிலிருந்து இரத்தக் கசிவு ஏற்பட்டால், அதுதான் ஈறு பாதிக்கப்பட்டதன் முதல் அறிகுறி. இதைக் கவனிக்காமல் விட்டுவிட்டால், கொஞ்ச நாள் கழித்து, அங்கே சீழ் பிடித்து, நாற்றம் ஆரம்பித்துவிடும். இதைத்தான் பயோரியா என்பார் கள். இதற்கு முறையான வைத்தியம் செய்து கொள்ள வேண் டும்.

● ***சிலருக்கு வெண்மையாகவும், சிலருக்குப் பழுப் பாகவும் பற்கள் இருக்கக் காரணம் என்ன?***

வெண்மை என்றால் முழு வெண்மை அல்ல. முத்து இருக்





இது ரப்பர் அல்ல. ஒரு வகை சில்க் இழை. இதை Dental Floss என்போம். இந்த நூல் இழையை அதிகமாக முறுக்காமல், அதன் மீது தேன்மெழுகு (wax) பூசிவிடுவார்கள். இரண்டு பற்களுக்கும் இடையே சுத்தம் செய்ய இதைப் பயன்படுத்துவார்கள். உணவுத் துணுக்குள் தோல் துணுக்குகள் எல்லாவற்றையும் இந்த சில்க் நூலிழைப் பிடியால் எடுத்து விடுவார்கள்.

றது அல்லவா, அதைப் போன்ற வெண்மைதான் பல்லுக்கு இருக்க வேண்டும். முத்துப் போன்ற பல் என்கிறோமே அது ஒழுங்குக்கு மட்டுமல்ல, நிறத்துக்கும்தான். சிலருக்கு வெற்றிலை பாக்குப் போட்டு, பழுப்பும் சிவப்புமாக இருக்கும். ஃப்ளூ ரோஸிஸ் காரணமாகச் சிலருக்கு பிரௌன் நிறத்தில் பட்டை பட்டையாக இருக்கும். இதை எல்லாம் இப்போது ப்ளீச்சிங் முறையில் எடுத்துவிடலாம். பழுப்படைந்த பற்களை பாலிஷ் பண்ணி விடலாம்.

- *புகை, மது, வெற்றிலை பாக்கு, புகையிலைப் பழக்கங்கள் பற்களைப் பாதிக்குமா? எந்த அளவுக்கு?*

புகை, வெற்றிலை புகையிலைப் பழக்கம் உள்ளவர்களுக்கும் கறை படியும். கூடவே மென்று மென்று பற்களை உபயோகிப்பதால், சீக்கிரம் தேய்ந்து போய்விடும். முப்பது வருஷம் இருக்க வேண்டிய பல் 15 வருடங்களிலேயே தேய்ந்து போய்விடும். பிறகு கூச ஆரம்பிக்கும்.



**● பற்கள் அசைவு கொடுப்பது ஏன்? அதை எவ்வாறு தடுப்பது?**

பற்கள் அசைவு கொடுக்க ஈறு வியாதிதான் காரணம். இதற்குச் சிகிச்சை அளித்துச் சரி பண்ணிவிட லாம். சில வேளைகளில் விபத்து காரண மாக அடிபட்டு, பல் விழுந்து விடாமல் ஆடிக் கொண்டே இருக்கும். இதற்கு, தாற்காலிகமாக ஆடாமல் இருக்க ஒயர் போட்டு இணைத்து விடுவோம்.

**● சிலருக்கு 50 வயதிலேயே பற்கள் விழுந்து பொக்கை வாய் ஆவ தற்கு என்ன காரணம்?**

ஐம்பது என்ன, 40 வயதிலேயே சிலருக்கு விழுந்து விடும்! ஒரு காரணம். பரம்பரை சம்பந்தப்பட்டது. அதாவது ஜெனடிகலா இருப்பது. பெற்றோருக்கு 40/50 வயதிலேயே பற்கள் விழுந்து விட்டால், குழந்தைகளுக்கும் அதே மாதிரி விழும். இன்னொரு காரணம், டயபடீஸ். உடலில் அளவுக்கு மீறின சர்க்கரை இருந்தால் வரும் நோய். இது கார்போ ஹைட்ரேட்டாக மாறாமல், சர்க்கரையாகவே உடம்பில் இருந்து விடுகிறது. ஈறு வியாதியோடு வரு கிறவர்களை இரத்தப் பரிசோதனை செய்யும்போதுதான் டயாபடீஸ் இருக் கிறதா இல்லையா என்று சில பேருக்குத் தெரிகிறது! 35 - 40 வயதில் வருகிற போது, தடுக்க முடியாமல், எந்த வைத்தியத்துக்கும் கட்டுப் படாமல் போய் விடும். அதீத அசிரத்தை காரணமாக, ஒரு சிலருக்கு, இளமையில் பற்கள் விழவும் வாய்ப்பு உண்டு.

**● உடலுக்குப் பயிற்சி மாதிரி, பற்கள் வலுவடையவும் பயிற்சிகள் உண்டா? பற்களுக்கு வலிமை கொடுக்கும் உணவு வகைகள் உண்டா?**

தாயின் வயிற்றில் இருக்கும்போதே - அதாவது ஏழாவது வாரத்திலேயே பற்கள் முளைக்க ஆரம்பித்து விடுகின்றன என்று சொன்னேன் அல்லவா? அதனால் கர்ப்ப காலத்தில் தாயார் உடலுக்கு நோய் வந்து, ஆன்டிபயாடிக் மருந்துகள் அதிகமாக உட்கொள்ள நேரிடும்போது பற்கள் வலுவிழந்து விடும். டெட்ராசைக்ளின் எனும் ஆன்டிபயாடிக் மருந்து உட் கொள்ளும்போது, குழந்தையின் பற்கள் ஒரு வித நீலநிறமாகி விடும். இதை டெட்ராசைக்ளின் ஸ்டெயின் என்று சொல்லு வோம். ஆனால் கால்ஷியம், பற்கள் வலுவடைய அவசியம். பேறு காலத்தில் தாய்க்கு அதிகப்படி கால்ஷியம் கொடுத்தால், பிறகு எலும்புகள் வலுவடைந்து பிரசவ காலத்தில் தாயார் சிரமப்பட நேரும். எனவே, மருத்துவர் தேவையான அளவு



வாய் கொப்பளிக்க ஒரு தம்ளர் பச்சைத் தண்ணீர் எடுத்துக் கொள்ளுங்கள். அதுவும் மவுத்வாஷ்தான்! வெதுவெதுப்பான வெந்நீர் எடுத்துக் கொள்ளுங்கள். அதிலே ஒரு சிட்டிகை தூள் உப்பைப் போட்டுக் கலக்குங்கள். அருமையான மவுத்வாஷ் இரண்டே நிமிஷத்தில் தயார்!

அமேசான், டான்டம், ஹெக்சிடின் போன்ற மருந்துகளும் மவுத்வாஷாக மருந்துக் கடைகளில் கிடைக்கிறது. வாயில் புண் உள்ளவர்கள் அல்லது வாய் துர்நாற்றம் போன்ற குறிப்பிட்ட சில காரணங்களுக்கு டாக்டர் இவற்றைச் சிபாரிசு செய்வார்!

கால்ஷியம் கொடுக்கச் சொல்லுகிற போது மட்டும் கொடுத்தால் போதும். கால்ஷியமும் வைட்டமின் டியும் கொடுக்கலாம். ஆனால் டானிக் மாதிரி ஊற்றிக் கொடுக்க முடியாது!

கால்ஷியம் பாலில் இருக்கிறது. முட்டையில் இருக்கிறது. வைட்டமின் சி, ஈறுகளுக்குத் தேவை. பழங்களில், தக்காளி - எலுமிச்சையில் வைட்டமின் சி இருக்கிறது.

● ***சிலருடைய வாயில் எப்போதும் துர்நாற்றம் வருவதற்குப் பற்கள்தான் காரணமா?***

பற்கள் மட்டும்தான் காரணம் என்று சொல்ல முடியாது. சைனஸ் கோளாறு, தொண்டையில் இன்ஃபெக்ஷன், டான்சில்ஸ் வந்து சீழ் பிடித்துப் போன நிலை, அஜீரணக் கோளாறு வந்து புளியேப்பம் விடுகிற நிலை, நுரையீரல் பாதிப்பு என்று பல காரணங்கள் இருக்கின்றன. அதனால்தான் இந்தக் குறை உள்ளவர்கள் வரும்போது, நாங்கள் பரிசோதித்துப் பார்த்து விட்டு, சைனஸ் முதலிய உபாதைகள் இருந்தால் இ.என்.டி. ஸ்பெஷலிஸ்ட்டிடம் அனுப்பி வைக்கிறோம். பிறகு அவரும் பரிசோதித்த பின், வயிற்றுக் கோளாறுகளைச் சரிப்படுத்தும் காஸ்ட்ரோ என்டராலஜிஸ்ட்டிடம் அனுப்பி வைக்கிறார்.

● ***அப்படியானால் மவுத் வாஷ் ஒன்றும் பயன்படாதா?***

மவுத் வாஷ் எல்லாம், குளிக்காமல் சென்ட் பூசிக் கொள்ளுகிற மாதிரிதான். குணப்படுத்தாமல், மூடி மறைத்துவிடும் வேலைதான்.

● ***மனிதனை மனிதன் கடித்தால் விஷம் என்கிறார்களே, உண்மைதானா?***

அதிகபட்சம் காயம் உண்டாகும். இன்ஃபெக்ஷன் வரும். ஆனால் விஷம் ஆகி இறந்து போய்விட மாட்டான்!

● ***உடல் எரிந்து முடிந்த பிறகும் கூடப் பற்கள் எரியாமல் இருக்கும் என்கிறார்களே, அப்படிப்பட்ட வலுவுடைய பற்களுக்கு நோய் வருவது ஆச்சரியமாக இல்லையா?***

மனித உடலிலேயே ரொம்பவும் கடினமான பகுதி இந்த எனாமல்தான். அது எரிந்து போகாது. ஆனால் நாள்பட நாள்பட, எந்தப் பொருளுமே மக்கிப் போகும் தன்மை உள்ளது அல்லவா? பற்களைக் கிருமிகள் தாக்கும்போது அமிலத்தின் - குறிப்பாக ஹைட்ரோகுளோரிக் அமிலத்தின் பாதிப்பு ஏற்பட்டு எனாமல் போய்விடுகிறது. எனாமல் போன பிறகு பற்களுக்கு வலு இருக்காது. ஆஸிட் பாட்டிலில் ஒரு பல்லைப் போட்டு விட்டுச் சிறிது நேரம் கழித்து எடுத்துப் பார்த்தால் தெரியும். ரப்பர் மாதிரி ஆகிவிடும் பல்!

ஆனால் நடைய அறிவியலில் பல் பலவிதங்களில் உதவித்தான் வருகிறது. போருக்குச் செல்லும், வீரனின் பல் ஒன்றின் உள்ளே கம்ப்யூட்டரைஸ்ட் எண் ஒன்றைக் குறித்து வைத்து விட்டு, அதை ஒட்டும் தன்மையுள்ள பொருளினால் மூடி வைத்து விடலாம். பிறகு அவன் போர்க் களத்தில் இறக்க நேரிடும் போது, பல்லில் பதித்திருக்கும் இந்த எண் அவன் யார் என்பதை, அவன் உடல் முழுதும் சிதிலமான பிறகும்கூட கண்டு பிடிக்க உதவும் என்று சொல்லுகிறார்கள்!

# உமிக்கரி போட்டு பல் தேய்க்கலாமா?

**டீ.வி.யில் எத்தனை பற்பசை விளம்பரங்கள் வந்தால்தான் என்ன? இன்னும் பலர் உமிக்கரிப் பல்பொடியைத்தான் உபயோகிக்கிறார்கள். இதனால் பற்கள் கெட்டு விடுமா?**

**பற்கள் பாதுகாப்பு சம்பந்தமாக டாக்டர் எம். ஜான் சபாஸ்தியனிடம் சில கேள்விகளை எழுப்பினோம். அப்போது -**



''உமிக்கரி பற்களை நன்றாகச் சுத்தப்படுத்தலாம். ஆனால் பற்கள் இடையிலோ, ஈறு இடையிலோ அது புகுந்து கொண்டு சிக்கிக் கொண்டு விட்டால் பற்சிதைவு ஏற்படும். ஈறுகளை அது காயப்படுத்தி விடவும் கூடும்!'' என்றார் டாக்டர்.

**"அது போல, இன்னும் கிராமத்துப் பக்கங்களில் வேப்பங் குச்சியை வைத்துப் பல் துலக்குவதைப் பார்த்திருக்கிறோம். இதைப் பல் மருத்துவர் என்ற முறையில், ஆதரிக்கிறீர்களா?" என்று அடுத்த கேள்வியை எழுப்பினோம்.**

"வேப்பங்குச்சியை உபயோகித்துப் பல் துலக்குவதையும் ஏற்றுக் கொள்ள முடியும். ஆனால் வேப்பங் குச்சியின் முனையை பிரஷ் போலவே, கடித்துக் கடித்து உருவாக்க வேண்டும். நகரில் எத்தனை பேருக்கு நேரமும் பொறுமையும் இருக்கிறது? அதனால் நகரவாசிகளுக்கு டூத் பிரஷ்தான் ஏற்றது."

**''ஒரு நாளைக்கு எத்தனை முறை பல் துலக்க வேண்டும்?''**

"Brushing once a must.

Twice is best" என்பதுதான் எப்போதும் நான் சொல்லுகிற பிரசார வாசகம். ஒருமுறை துலக்குவது கட்டாயம். இருமுறை துலக்கினால் சிறப்பு."

**"சில வேளைகளில் கழுத்து, தோள் பட்டை வழியே கைகளுக்கும் வலி உண்டாகும்போது, அதற்குப் பல்**




# கோல்கேட் கால்சிகார்டு

## இந்தியன் டெண்டல் அசோஸியேஷன் அங்கீகார முத்திரை பெற்ற முதல் மற்றும் ஒரே* டூத் பேஸ்ட்.




ஐடிஏ முத்திரையைப் பாருங்கள் உங்கள் பல் டாக்டரின் அங்கீகாரப் பலனை நீங்கள் காண்பீர்கள்.

இந்தியன் டெண்டல் அசோஸியேஷன், பற்கள் மற்றும் ஈறுகள் சம்பந்த பராமரிப்பு மீது கோல்கேட் கொண்டுள்ள ஈடுபாட்டை அங்கீகரித்து, கோல்கேட் கால்சிகார்டை அங்கீகார முத்திரையுடன் ஆதரித்துள்ளது. கோல்கேட் கால்சிகார்டின் ஒப்பற்ற ஃபார்முலா உங்கள் பற்களின் இயற்கையான கால்ஷியத்தை உள்ளேயே தக்க வைக்கிறது மற்றும் வலுவுடையதாகவும் பற்குழிகளுக்கு எதிர்ப்புத்திறன் கொண்டதாகவும் ஆக்குகிறது என்பதைத்தான் இந்த முத்திரை வழிமொழிகிறது. எனவே அடுத்த முறை டூத்பேஸ்ட் வாங்கும்போது ஐடிஏ முத்திரை உள்ளதா என பாருங்கள். அதனை நீங்கள் கோல்கேட் கால்சிகார்டில் மட்டுமே* காணமுடியும்.




கிருமிகளைத் தவிர்த்திடுவீர், பற்குழிகளைத் தவிர்த்திடுவீர். பற்களை வலுவாக வைத்திடுவீர்.

* நடப்பில் உள்ள

Rediffusion-DY & R/Bom/CP/330 e TM

**காரணமாக இருக்கும் என்று சொல்கிறார்களே, எப்படி?"**

"சாதாரணமாக பற்களை இணைக்கும் நரம்புகள், பற்கள் பகுதியில் பாதிக்கப்படும்போது, குறிப்பாக கிருமித் தொற்றினால் பழுதடையும்போது, வலி உண்டாகி, அது முகத்தின் ஒரு பகுதிக்கும், பிறகு கழுத்துக்கும் பரவும். மிக அபூர்வமாகவே, கைகளுக்கு அந்த வலி பரவ வாய்ப்பு இருக்கிறது."

**"பற்களில் நோய்த் தொற்று ஏற்பட்டு, இதய வால்வுகளைக்கூடப் பாதிக்குமாமே, உண்மையா?"**

"இன்ஃபெக்ஷன் அல்லது கிருமித் தொற்று, உடல் உபாதைகளுக்குக் காரணமாக இருக்கிறது என்பது எல்லாரும் ஒப்புக்கொள்ளும் உண்மை. பற்களுக்கிடையே ஏற்படும் குழிகளில், அல்லது ஈறும் பல்லும் இணையும் பகுதியில் உண்டாகும் வெற்றிடங்களில், இன்ஃபெக்ஷன் தீவிரமாக இருந்தால், பாக்டீரியா கிருமிகள் அங்கே பெருகிப் போக வாய்ப்பு உண்டு. அப்போது இதயநோய் மட்டுமல்ல, நீரிழிவு நோய், ஜாயின்டுகளில் பயங்கரமான வலி முதலியவை உண்டாகும்."

**"பற்கள் தூக்கலாக வளராமல், சீராக வளர, இப்போதெல்லாம் க்ளிப் போட்டுக் கொள்ளுகிறார்களே, இதை எப்போது போட்டுக் கொள்ள வேண்டும் - அதாவது எந்த வயதில்?"**

"பற்கள் சீராக வளராமல் இருக்க, குழந்தையாக இருக்கையில் கட்டைவிரல் சூப்புவது, அடிக்கடி நாக்கை வெளியில் துருத்தித் துருத்தி வைத்துக் கொள்ளுவது தவிர, வாய் வழியே மூச்சுவிடுவதும் கூடக் காரணமாக இருக்கலாம். போட்டுவிட்டு அகற்றக்கூடிய க்ளிப்புகள், ஒவ்வொருவருடைய பற்களின் அமைப்புக்கும் ஏற்ப உருவாக்கப்படுகின்றன. க்ளிப்பைக் குறைந்த பட்சம் 12 முதல் 24 மாதங்களாவது உபயோகிக்க வேண்டும். பிறகு எட்டு முதல் 12 மாதங்களுக்குக்கூட, தேவைப் பட்டால் அணிந்திருக்க வேண்டும். ஒன்பது வயது முதல் 16 வயது வரை இந்த 'க்ளிப்'புகளைப் பயன்படுத்த வேண்டும்.

**"எப்போது பல் டாக்டரிடம் போய்ப் பற்களைச் சுத்தம் செய்து கொள்ள வேண்டும்?"**

"வழக்கமாகப் பற்களைச் சுத்தப்படுத்தும் பழக்கம் உள்ளவர்கள், வருடத்துக்கு ஒருதடவை பல் மருத்துவரிடம் போய்ப் பற்களை க்ளீன் பண்ணிக் கொள்ள வேண்டும். சுற்றி வளைத்துச் சொல்வதானால், பற்களைச் சுத்தமாக வைத்திருக்கும் ஒருவருக்குத்தான் இந்த அறிவுரை!"

**"ஆனால் பற்களை க்ளீன் பண்ணிக் கொண்ட பிறகு, பற்கள் கூசுகிறது என்றும், எனாமல் தேய்ந்து விடுகிறது என்றும் சிலர் சொல்லுகிறார்களே? இதில் உண்மை இருக்கிறதா?"**

"ஈறுகள் சுருங்கிப் போய், பற்களின் வேர்ப்பகுதி வெளியே தெரிய ஆரம்பிக்கிறபோதுதான் கூச்சம் இருக்கும். ஏனென்றால் அடிப்பகுதிக்கு எனாமல் பாதுகாப்புக் கவசம் கிடையாது. எனவே கூச்சம் உண்டாகிறது. அடிக்கடி க்ளீன் செய்து கொள்ளுவதால் பற்களின் சென்ஸிடிவிடி பாதிக்கப்படாது. அதிகமாகக் காரை சேர்ந்து ஈறுகள் சுருங்கி பற்களின் பகுதி வெளியே தெரியும்போதுதான் கூச்சம் ஏற்படும்.

**"பற்கள் தேய்ந்து போக என்ன காரணம்?"**


**ல் பிடுங்கிய இடத்தில் கையையோ, நாக்கையோ வைக்கக் கூடாது. கையிலே உள்ள அழுக்கு எதுவும் எலும்பிலே பட்டால், கிருமித் தொற்று உண்டாக வாய்ப்பு இருக்கிறது. அதனால்தான் பல் எடுத்த இடத்தில் கையையோ நாக்கையோ வைத்துத் துழாவக் கூடாது.**

"முரட்டுத்தனமாக பிரஷ் செய்வது; சரியான முறையில் பிரஷ் செய்யாமல் இருப்பது; வாயில் சதா ஏதாவது போட்டு மென்றுகொண்டே இருப்பது; ஹைப்பர் அஸிடிடி, எல்லாமே பற்களின் ஸ்திரத் தன்மையைக் குலைக்கக் காரணங்கள் என்று சொல்லலாம். இதனால் எல்லாம்கூடப் பற்களில் கூச்சம் ஏற்படும். பற்களை இணைக்கும் நரம்புகளுக்குப் பாதிப்பை உண்டாக்கும். இந்த சென்ஸிடிவிடியைப் போக்க, சில பேஸ்ட்டுகள் இருக்கின்றன. பல் மருத்துவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்."

**"சூயிங்கம் போன்றவற்றைச் சிலர் மென்று கொண்டே இருக்கிறார்களே, அப்படி மென்று கொண்டே இருப்பது பற்களுக்குப் பயிற்சியாக அமையுமா, அல்லது தேய்ந்து போகுமா?"**

"பற்கள் தேயாது. தசைப் பயிற்சி மாதிரி, பற்களுக்கும் ஈறுகளுக்கும் உதவும். கிட்டத்தட்ட பிஸியோ தெரபி பயிற்சி மாதிரி."

**"கண் ஆபரேஷனுக்கு முன்னால்கூட பற்கள் சரியாக இருக்கின்றனவா, இன்ஃபெக்ஷன் இருக்கிறதா என்று பரிசோதிக்கிறார்களே?"**

"கண் ஆபரேஷனுக்கு மட்டுமல்ல. சில சரும நோய்கள், இதயம் சம்பந்தப்பட்ட நோய்கள், சிறுநீரகக் கோளாறுகள் எல்லாவற்றிலுமே, பற்கள் பாதுகாப்பு முக்கியமாகக் கோடிட்டுச் சொல்லப்படுகிறது."

**"அழகாகத் தோற்றமளிக்க, காஸ்மெடிக் சர்ஜரி செய்து கொள்ளலாம் என்கிறார்கள். இது பற்கள் விஷயத்தில் எப்படி?"**

"அழகாகத் தோற்றமளிக்க வேண்டும் என்பது எல்லாருடைய விருப்பமும்தான். இதில் முக்கியப் பங்கு வகிப்பது பற்கள்தாம். பற்கள் ஒரே சீராக, வரிசையாக, அமைந்திருந்தால்தான் முக அழகு தெரியும். இதற்கு காஸ்மெடிக் சர்ஜரி என்று ஒட்டுமொத்தமாகப் பெயர் சூட்டினாலும், தனித்தனியாகப் பல குறைபாடுகளை நிவர்த்தி செய்தாக வேண்டும். இதில் நிறையவே ஹை-டெக் சாதனங்கள் இந்தியாவிலேயே கிடைக்கின்றன. அதிலும் காம்போஸிட் ரிசின்ஸ், கிளாஸ் அயோனமர்ஸ், செராமிக்ஸ் என்று பல பொருள்கள் இருக்கின்றன.

"காஸ்மெடிக் டென்டிஸ்ட்ரியில் (dentistry), நிறையவே அறுவைச் சிகிச்சை மூலம் சரிப்படுத்தக்கூடிய வாய்ப்புகள் உள்ளன. இந்த வகை அறுவைச் சிகிச்சைகளை ஆர்த்தோக்னாதிக் என்பார்கள். இது தவிர, பிளவு பட்ட உதடுகளைச் சரிப்படுத்தும் அறுவைச் சிகிச்சை, கான்சர் மூலம் பழுதடைந்து முக விகாரங்களைச் சரிப்படுத்தும் அறுவைச் சிகிச்சை சேர்ந்து, மல்ட்டி-டிஸிப்ளினரி எனப்படும் பலவகை வழிமுறைகளில், தோற்றப் பொலிவை உயர்த்திக் கொள்ள முடியும். 'உங்கள் முகமே உங்களின் அதிர்ஷ்டம்' என்றுகூட ஆங்கிலத்தில் சொல்லுவார்கள்: Your face is your fortune என்று!"

சந்திப்பு : **சாருகேசி**






# ஆயிரக்கணக்கான அன்னையர் அங்கீகரிப்பது கோல்கேட்.

அவர்கள் அவ்வாறு விரும்பிட மற்றுமொரு காரணம்
கோல்கேட் கால்சிகார்டு இந்தியன் டென்டல்
அசோஸியேஷன் அங்கீகார முத்திரை பெற்ற முதல்
மற்றும் ஒரே* டூத்பேஸ்ட் என்பதாகும்.

இந்தியன் டென்டல் அசோஸியேஷன், பற்கள் மற்றும் ஈறுகள் சம்பந்த பராமரிப்பு மீது கோல்கேட் கொண்டுள்ள ஈடுபாட்டை அங்கீகரித்து கோல்கேட் கால்சிகார்டை அங்கீகார முத்திரையுடன் ஆதரித்துள்ளது. கோல்கேட் கால்சிகார்டின் ஒப்பற்ற ஃபார்முலா உங்கள் பற்களின் இயற்கையான கால்ஷியத்தை உள்ளேயே தக்க வைக்கிறது மற்றும் வலுவுடையதாகவும் பற்குழிகளுக்கு எதிர்ப்புத்திறன் கொண்டதாகவும் ஆக்குகிறது என்பதைத்தான் இந்த முத்திரை வழிமொழிகிறது. எனவே அடுத்த முறை டூத்பேஸ்ட் வாங்கும்போது ஐடிஏ முத்திரை உள்ளதா என பாருங்கள். அதனை நீங்கள் கோல்கேட் கால்சிகார்டில் மட்டுமே* காணமுடியும்.







கிருமிகளைத் தவிர்த்திடுவீர், பற்குழிகளைத் தவிர்த்திடுவீர், பற்களை வலுவாக வைத்திடுவீர்.

பதவியாகிய நிரந்தர செல்வத்தையும் கொடுக்கிறான். வைகுண்டத்தில் இருக்கிற அவனேதான் அவதார காலத்தில் பூலோகத்தில் மங்களத்தையே கொடுக்கும்படியான மஹாலக்ஷ்மியுடன் அவதரிக்கிறான். அப்படிப்பட்ட நாராயணனே விஷ்ணு.

ராமா, கிருஷ்ணா, கோவிந்தா, நரசிம்ஹா என்று நாமங்களால் அழைக்கப்பட்டாலும் சர்வேச்வரனான விஷ்ணுவைத்தான் அழைக்கிறோம். ஆயிரம் நாமங்களால் சொல்லப்பட்டவனின் இரண்டாவது நாமம், விஷ்ணு சஹஸ்ர நாமத்திலே இந்த நாமம் மூன்று முறை வருகிறது. இரண்டாவது நாமமாக முதல் முறை; இருபத்தெட்டாவது சுலோகத்தில் ஒரு முறை; அதே போல் எழுபத்திரண்டாவது சுலோகத்தில் ஒரு முறை.

இவ்வாறு மூன்று இடங்களில் வரப்பெறும் பெயருடையவன் அவன் திருநாமத்தைச் சொன்னாலே போதும் என்கிறது வேதம்.

அவன் திருநாமத்தைச் சொன்னால் என்ன கிடைக்கும்...?

மஹா யக்ஞங்களெல்லாம் பண்ணிய பலன் விஷ்ணு என்கிற நாமத்தைச் சொன்னால் கிடைக்கும். இதை நன்றாக கவனிக்க வேண்டும்.

அஸ்வமேத யாகம் பண்ணினால், அஸ்வமேத யாகம் செய்த பலன்தான் கிடைக்கும்; பௌண்டரீக யாகம் பண்ணினால், பௌண்டரீக யாகம் செய்த பலன்தான் கிடைக்கும். ஆனால், விஷ்ணு என்று சொன்னாலோ, எல்லா யக்ஞங்களும் செய்த பலன் கிடைக்கும்.

இப்போது சொல்லுங்கள்... யாக யக்ஞாதிகளைச் செய்கிறோம்



என நாம் போய் அவஸ்தைபடுவதா? இல்லை சுலபமாக அவன் நாமாவைச் சொல்வதா?

கலியுகத்தில் இருக்கும்படியான, நம்மைப் போல் நோற்ற நோன்பில்லாதவர்களான அப வாத சக்ரவர்த்திகளுக்கு எது சுலபமான மார்க் கமு?

ஒரு சந்தியாவந்தனம் செய்வதற்கே ஏக சிரமப்பட வேண்டியதாயிருக்கிறது. அவசர அவசரமாக அர்க்யத்தை விடவேண்டியதா யிருக்கிறது. அவசர அவசரமாக பிராணாயாமத் தை பண்ண வேண்டியதாகியிருக்கிறது. அந்த காயத்ரி ஜபமானால் அதைவிட அவசரம்! பஞ் சாவதானா காயத்ரி என்று ஐந்து இடத்தில் நிறுத்தி காயத்ரியை ஜபம் பண்ணினால், பஞ்ச பாதகங்கள் போய் விடும். காயத்ரியைச் சொல் லும்போது ஐந்து இடங்களில் நிறுத்தி மூச்சு விட்டுச் சொல்ல வேண்டும்.

பிரணவத்தைச் சொல்லி ஒரு மாத்ரா காலம் நிறுத்த வேண்டும். அப்புறம் வியாக்ருதியைச் சொல்லி நிறுத்தி, அப்புறம் மூன்று வாக்யம்... இப்படி நிறுத்தி யார் ஜபம் பண்ணு கிறார்களோ, அவர்களுக்கு எல்லா பாவமும் போய்விடும்.

ஆனால் நமக்கோ பத்து காயத்ரி பண்ணக் கூட அவகாசம் இல்லையே! இப்படிப் பட்ட சமயத்தில் யக்ஞம் பண்ண நம்மால் முடியுமா? அதற்கான அதிகாரிகளெல்லாம் இருக் கிறார்களா?

இப்படியெல்லாம் விஷய விசாரம் பண்ண ஆரம்பித்தோமானால், எதுவுமே நம் மால் செய்ய முடியாது என்று விளங்கும்.

பெரிய பெரிய யக்ஞங்களெல்லாம் பண்ணு வதற்கு சக்தியற்ற நாம் என்ன பண்ணலாம்? அந்த யக்ஞாதிகளிலெல்லாம் போய் முனைய வேண்டாம்.

'இப்படி யக்ஞம் பண்ண வேண்டாம் என்று சொல்வதற்கு யார் பிரமாணம்?' என்று நீங்கள் கேட்கலாம். அந்த வேதமேதான் இதற் கும் பிரமாணம்!

அதெப்படி? வேதமே 'யக்ஞம் பண்ணு' என்றும் சொல்கிறது; அதைப் 'பண்ண வேண் டாம்' என்றும் சொல்கிறதா? ஏன் அப்படிச் சொல்கிறது?

பண்ணக்கூடிய சக்தியுடைய மஹரிஷிக ளெல்லாம் பண்ணலாம்; அதிகாரிகள் பண்ண லாம்... பண்ண முடியாதவர்கள் என்ன செய் வார்கள்...? அவர்களுக்குத்தான் 'பண்ண வேண் டாம்' என்ற அனுமதி!

அந்த வேதத்துக்கு நம்மிடத்திலே எவ்வளவு இரக்கம் பாருங்கள்; தயை பாருங்கள்! 'ஐயோ யக்ஞம் பண்ண முடியவில்லையே என்று கவலைப்படாதீர்கள்... எம்பெருமான் திருநாமம் இருக்கிறதில்லையா? அதோடு முடித்துக் கொள் ளுங்கள்' என்கிறது!

பிருஹத்தே விஷ்ணு பிருஹத் என்கிற சப்தத்தினால் விஷ்ணுவைச் சொல்லுகிறோம். 'பிருஹத்' என்றால் 'பெரியவன்' என்று அர்த்தம்.

மஹதே விஷ்ணு; 'மஹத்' சப்தத்தினால் சொல்லப்படக் கூடியவன் விஷ்ணு.

சாமகானமிருக்கிறதே, அதற்குப் பொருளாக இருக்கக்கூடியவன் விஷ்ணு.

ஆதி சங்கர பகவத்பாதாள் சொல்கிறார்: 'உத்கீத ப்ரணவ உபாஸனையில் உள்ளுக்குள் இருக்கக்கூடியவன் விஷ்ணு' என்கிறார்.

'ப்ருகத் ஸாமம் முதலானவற்றில் கானம் பண்ணப்பட்ட நாமம் அல்லவா விஷ்ணு!' என்று ஆனந்த தீர்த்தர் மத்வாசார்யர் சிலாகிக் கிறார். இப்படி எல்லா ஆசார்யர்களாலும் ஒரு சேரக் கொண்டாடப்பட்ட ஒரே திவ்ய மான, ஏகமான பதம்; பலனைக் கொடுக்கக் கூடிய பதம் விஷ்ணு.

இதற்கு பலச்ருதியும் வேதம் சொல்கிறது.

ஓம் விஷ்ணவே நம: என்று ஒரு புஷ்பத்தை எடுத்து அர்ச்சனை பண்ணினால் என்ன கிடைக்கும்?

சுமதிம் பஜாமஹே!

அப்படியென்றால்...?

சுமதிக்கு நேர் எதிர்மறை குமதி! குமதி என் றால் கோணலான புத்தி! ஆகவே சுமதி என்பது நல்லபுத்தி என்பதாகும். அந்த நல்ல புத்தி ஒருத்தருக்கு அமைந்து விட்டால், தெளிவான ஞானம் பிறந்து விட்டால், அவரை அசைக்க யாராலும் முடியாது.

கைகேயியை ஒரு க்ஷணத்தில் மாற்றிவிட் டாள் கூனி - மந்தரை. ஆனால் அந்த ராமாய ணத்தில் அத்தனை பேரும் - வசிஷ்டாதி மஹ ரிஷிகள் அத்தனை பேரும் பரதனை மாற்றப் பார்த்தார்கள். முடிந்ததா? முடியவே யில்லையே! ஏன் முடியவில்லை?

அவன் பிறக்கும்போதே சுமதி! வால்மீகி அவனை வர்ணிக்கிறார். மீதி பேருக்கெல்லாம் இல்லாத வர்ணனை பரதனுக்கு! 'பிறக்கும் போதே தெளிவுடைய சிந்தனையோடு, நல்ல புத்தியோடு பிறந்தான்' என்கிறார். ஆகை யினால் நல்ல புத்தியுடைய அவனை யாராலும் மாற்ற முடியவில்லை.

அந்த மாதிரி, சலிக்காத புத்தியை நமக்கும் தரும்படியாக வேண்டித்தான் 'விஷ்ணு' என்று அவனை அழைக்கிறோம். 'அந்த புத்தியை நீ கொடுத்தாயானால் உயர்ந்து நிற்பேன்; உன் திருவடியை மறவேன்' என்கிறோம்....

எங்கும் பரவியிருக்கும்படியான பரமாத் மாவை விஷ்ணு என்று அழைப்பதற்கான பலச்ருதி இதுதான். - இந்த சுமதிதான் - என் கிறது விஷ்ணு சஹஸ்ரநாம பாஷ்யம்.

(தொடரும்)

# தீபாவளிப் பரிசு




## ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும் மகத்தான முதலீட்டுத் திட்டம்!



**ரூ. 10,000 முதலீடு செய்யுங்கள்**
**5 ஆண்டுகளில் ரூ. 20,000 (இரு மடங்கு)**
**பெற்றுக் கொள்ளுங்கள்**

அத்துடன்

**4 இலக்கியப் பொக்கிஷங்களையும்**
**அன்பளிப்பாகப் பெறுங்கள்**

1. **'கல்கி'** வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. **'கல்கி' தீபாவளி மலர்** 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் **'அமுதசுரபி'** இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. **'அமுதசுரபி' தீபாவளி மலர்** 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.

ரூ. 10,000 (ரூ பத்தாயிரம்) **'ஸ்ரீராம் டிரஸ்ட்'** பெயருக்கு செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி :

**'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ–7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு,**
**சென்னை – 600 102. தொலைபேசி எண் : 628 6869 628 7879**

---

1. முழுப்பெயர் : திரு/திருமதி/செல்வி ..............................
   முகவரி : ..............................
   ..............................
   ..............................
   ..............................
2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர் :
   முழுப்பெயர் : ..............................
3. வாரிசுதாரர் : ..............................
4. **'கல்கி' 'அமுதசுரபி'** இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி : ..............................
   ..............................

CHEQUE / D.D. No. .................... DT .................... ON ....................

அன்புள்ள

இடம் ....................

தேதி .................... முதலீட்டாளர் கையொப்பம்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி ரூ.2500/- முதல் பரிசுக் கதை

பாட்டி வாசலுக்கு வந்து ஆகாயத்தை ஏறிட்டாள். அக்னி நட்சத்திர சூரியன் கிழக்கிலிருந்து உக்கிரமாய்க் கிளம்பிக் கொண்டிருந்தான். அந்தப் பிரகாசம் அவர் கண்களைக் கூசச் செய்ய, உள்ளே வேலை செய்து கொண்டிருந்த தன் மருமகளைப் பார்த்துக் கேட்டாள்.

"வெயில் ஏறக்கட்டிருச்சு. மார்க்கெட் போய் தேங்கா வாங்கணும்னா முன்னாடியே சொல்லியிருக்கக் கூடாதோ?"

"சொல்லியிருக்கணும்தான். உங்க பிள்ளை இப்பதானே வந்து, தேங்கா சாதம் செய்னு ஆர்டர் போட்டுட்டுப் போறாரு. ஆபீஸ்லயிருந்து அஞ்சாறு பேர் சாப்பிட வர்றாங்களாம். தேங்கா சாதத்துக்குத் தேங்கா வேணுமில்லை? பக்கத்துக் கடையில வாங்கிடலாம்னா, தக்கணுண்டு தேங்காயை ஏழு ரூபா, எட்டு ரூபான்னு கொள்ளையடிக்கிறான். நடை பார்க்காம மார்க்கெட் போனா நாலு, இல்ல அஞ்சு ரூபாய்க்கே கிடைக்கும். எனக்கும் இங்க வேலை சரியா இருக்கு. விதவிதமா சாதம் பண்ணிக் கொட்டியாகணுமே. சும்மா உட்கார்ந்துண்டா, உங்களை மார்க்கெட்டுக்குப் போகச் சொல்றேன்?"

'ஒண்ணு கேக்கறதுக்குள்ளே இவள் அம்பத்திரெண்டுல்ல நீட்டி முழக்குறா. தேளுக்கு மணியம் கொடுத்தா அது நிமிஷத்துக்கு நிமிஷம் கொட்டுமாம். இவகிட்ட அதிகாரம் வந்துடுச்சில்ல? ஆட்டி எடுக்கிறா என்னை...' பாட்டி முணுமுணுத்தபடி கிளம்பினாள்.

பா. உஷாராணி





எதிர்வீட்டு சந்துரு சைக்கிளோடு வெளியே வருவது தெரிய, முகத்தில் வலிய புன்னகையை அப்பிக் கொண்டு, காரியச் சிரிப்புடன் அவனருகே சென்றாள்.

"ஏண்டா! மார்க்கெட் பக்கமாத்தானே போற. என்னை மார்க்கெட்டுல இறக்கி விட்டுடேன்"

"நேத்து நான் நூன்ஷோ போனதைப் பார்த்துட்டு வந்து, அம்மாட்ட போட்டுக் குடுத்தீங்கள்ல. அப்ப இதையெல்லாம் யோசிச்சுப் பாத்திருக்கணும். இப்படியே நடந்து போங்க. நடக்கிறது உடம்புக்கு நல்ல எக்ஸர் ஸைஸ்!"

சந்துரு விருட்டென சைக்கிளைக் கிளப்பிக் கொண்டு போய் விட்டான்.

"போய்ட்டியா? போபோ... போனவாரம் நீ அந்த கிளிமூக்குப் பொண்ணோட வழிஞ்சிட்டு பேசிட்டிருந்ததையும் சொல்லியிருக்கணும் நான்."

போகும் நடையையாவது மிச்சப்படுத்தலாம் என்ற நப்பாசை, புகைந்து போன

# சில மனிதர்கள், சில நிகழ்வுகள்



மாமியார்: "அடியே... அஞ்சலை அலமாரியில அஞ்சு முட்டை வச்சிருக்கேன். இங்கே கொண்டு வா!"

மருமகள்: "போங்க அத்தை! டாக்டர் கனமான பொருளை தூக்கக் கூடாதுன்னு சொல்லியிருக்கார்!"

— புளியரை கணேசன்

ஏமாற்றத்தில் சந்துருவைத் திட்டியபடி மெல்ல நடிக்க ஆரம்பித்தாள். ஏறு வெயில் சுட்டது. மார்க்கெட் போவதென்பது அவளுக்கு அலுப்பான விஷயமாக இருந்தது.

முத்தாளம்மன் கோவில் வாசலிலிருந்து அய்யனார் மெடிக்கல் வரை நீண்டிருக்கும் மிக விஸ்தாரமான மார்க்கெட் அது. முன்பு கோவிலுக்குச் சொந்தமாக இருந்த இந்த பரந்த இடம், பலவிதப் போராட்டங்களுக்குப் பின் மார்க்கெட்டாக உருமாறியிருந்தது. ஊரைச் சுற்றியிருக்கும் கிராமவாசிகள், மொத்த விலைக்கு விற்காமல், அன்றைக்குப் பறித்த மலர்ச்சியாக காய்கறிகளுடன், தாங்களே நேரிடையாக விற்பனை செய்யும் பாதையோரக் கடைகள் ஒருபுறம், பெரிய வியாபாரிகள் வேன்களில் கொண்டு வந்து இறக்கியிருக்கும் மதுரைக் காய்கறிகள் விற்பனையாகும் உள்க்கடைகள் ஒருபுறம், மண்டபம், இராமேசுவரத்திலிருந்து கூடை கூடையாய் இறக்கும் மீன்கள் குவிக்கப்பட்டுள்ள மீன்கடைகள் மறுபுறமுமாக, ஜே. ஜேவென மக்கள் அலை மோதும் பகுதி.

கிழவியின் அலுப்பிற்குக் காரணம், இந்த தெரிசலுக்குள் போய்விட்டு வர வேண்டுமே என்பதுதான். மருமகளை நினைத்துப் பொருமியபடியே தேங்காய்க் கடையருகே வந்தாள். தேங்காய்கள் சிறியது, நடுத்தரம், பெரியது என தனித் தனியாக அடுக்கப்பட்டிருந்தன.

"இந்த தேங்காயெல்லாம் என்ன விலை?"

நெடு நெடுவென உயரத்தில், நெடிய திருமகலாய், கொஞ்சம் பெரிய அளவு இரட்டைக் கொம்பு எழுத்தை உதட்டுக்கு மேல் தலைகீழாய் படுக்கப் போட்டது போன்ற மீசையோடு காட்சியளித்த கடைக்காரன் நிமிர்ந்தான்.

ப இந்த ஆறரையடி ஆஜானுபாகுவை, எந்த ஜென்மம், 'டா' போட்டுக் கூப்பிடுகிறது? அவன் கிழவியை மேலும் கீழுமாய்ப் பார்த்தான்.

"இந்தக் கூறு ஆஞ்சரை, அது ஆறரை, இது எட்டு..."

"என்ன,, இந்த பாழாப் போன தேங்காய்க்கு யானை விலை, குதிரை விலை சொல்ற"

"ஆமா கிழவி! யானை விலை, குதிரை விலைதான். கிராக்கி நேரத்துல பேரம் கீரம் பேசிட்டு நிக்காம வாங்கறதானா வாங்கிட்டுப் போ."

"சரி... முதல் கூறை நாலு ரூபாண்ணு கொடு."

மீசைக்காரன் நாக்கை மடக்கிக் கொண்டான்.

"ந்தே, பேரம் பேசாதேன்னு இப்பத்தானே சொன்னேன்? இந்த நொள்ளைக்கு ஐயாயிரத்தைக் கொட்டி இறக்கியிருக்கேன். உங்கொப்பன் சும்மாவா அள்ளிக் கொடுக்கிறான்? நீ கேட்ட விலைக்குத் தர. போட்ட அசலாவது தேறுமான்னு நான் கிடந்து திண்டாடிக்கிட்டு இருக்கேன்."

"போதுண்டா! அவங்கவங்க கஷ்டம் அவங்கவங்களுக்கு. முதல் கூறை நாலரைன்னாவது தா."

"ரெண்டு பேர் எடுத்திக்கிட்டு இருக்காங்கல்ல? பேரம் பேசி வர்ற வியாபாரத்தையும் கெடுக்காம, உன் சனிப்புடுச்ச வாயை மூடிக்கிட்டு, போ அப்பால."

"போடா, இந்த மடம் இல்லைன்னா சந்த மடம். என்னமோ நீதான் பெரிசா கடை விரிச்சிருக்கிற மாதிரி அலப்புற? வேற கடையா இல்ல? உள்ள நடந்தா சல்லுசா வாங்கிட்டு போறேன்."

"வாங்குவ, வாங்குவ, மார்க்கெட்ல எந்த மூலைக்கிப் போனாலும் ஒரே விலைதான். இந்த மார்க்கெட்டுக்குள்ளே எவன் உனக்கு கொறச்சுத் தர்றான்னு பாக்கிறேன்."

"உன் கண்ணுக்கு எதிரே நான் குறைச்சு வாங்கி வர்றனா, இல்லையா பாரு."

அவள் விடு விடுவென உள்ளே நடக்க ஆரம்பித்தாள்.

நடு மார்க்கெட்டில் கெச்சலான உடல் வாகு கொண்ட ஒருவன் தேங்காய்களை அடுக்கிக் கொண்டிருந்தான். அவள், அவனருகே சென்றாள்.

"எடுங்க பாட்டிமா, இந்தக் கூறு அஞ்சரை, அது ஆறரை, அந்தப் பக்கம் இருக்கிறது எட்டு."

அவனிடமே வாங்கலாம் என்று அவளுக்குத் தோன்றியது.

"ஏம்பா நாலரைண்ணு கொடேன் அந்த முதல் கூறை."

"அய்யே, முடியாது ஆயா! தேங்காயெல்லாம் ரொம்ப கிராக்கி. இல்லையின்னா இத்தனை விலை சொல்வனா, உட்கார்ந்து விக்கிற கூலி கூட எனக்குக் கிடைக்குதோ என்னமோ."

அவன் யோசித்தாள்.

"சரி, கால் ரூபா கொறச்சு அஞ்சே கால்ணாவது கொடு"

இருபத்தைந்து பைசாவாவது குறைக்காவிட்டால் அது என்ன பேரம்?

"முத போணி... எடுங்க."

எப்படியோ அவன் சொன்ன விலையிலிருந்து குறைத்து வாங்கிய திருப்தியோடு கிழவி திரும்பினாள்.

**மீ**சைக்காரனின் கடையைத் தாண்டும் போது அவன் எகத்தாளமாகக் கேட்டான்.

"எய், கெய்வி! விசுப்பிக்கிட்டு போன, குறைச்சு வாங்கிட்டியா?"

அவன் அழைத்த விதம் சுரீரென கோபத்தை அவளுள் விதைத்தது. அந்த எகத்தாள தொனி ஆத்திரத்தைக் கிறட, வேகமாய் பையிலிருந்த தேங்காயை வெளியே எடுத்தாள்.

"டேய் மீசை! பாத்துக்கோ. இந்த தேங்காயெல்லாம் நாலு ரூபான்னு தான் வாங்கிட்டு வர்றேன்."

"நாலு ரூபாய்க்கு வாங்கினயா..." மீசைக்காரன் முகம் சுருங்கியது.

"நிஜமாத்தான் சொல்றியா?"

"பின்ன, உன்கிட்ட பொய் பேசி விளையாடற வயசாடா எனக்கு? நீ நாய் மாதிரி கொலக்கிற, அதான் உங்கடை காத்தாடுது, நல்ல மனுசன் யாரும் உன் கடைக்கு வர மாட்டான்!"

"இந்தா கிழவி, நாக்கை மடக்கி வாய்க்குள்ள வச்சுக்க, இல்ல பேஜாராயிடும். எந்த அறிவு கெட்டவன் உனக்கு நாலு ரூபாய்க்குக் கொடுத்தான்? எங்க வாங்கின இதை?"

"ம், நடுமார்க்கெட்டுல வச்சு. நிமிஷமா அவன் தேங்கா வித்திடப் போகுது பாரு. நீ இப்படியே கொலச்சிட்டு இரு."

அவள் வெடுக்கென முகத்தைத் திருப்பியபடி போய் விட்டாள்.

**மீ**சைக்காரனின் இரட்டைக் கொம்பு மீசை துடித்தது. கண்கள் சிவக்க கைலியை வரிந்து கட்டிக் கொண்டான். அவனது கடைக்கு அப்பால் ஐந்தாறு கடைகள் தாண்டி, அப்போதுதான் தேங்காய்க் கடை வைக்க ஆயத்தம் செய்து

## அருள்வாக்கு

**உ**லக வாழ்வில் சகல மனிதர்களுக்கும் அளவில்லாத கஷ்டங்கள் உண்டாகத்தான் செய்யும். பணக்காரன், பெரிய பதவியில் இருப்பவன் கஷ்டமில்லாமல் இருப்பதாக மற்றவர்கள் நினைக்கலாம். அப்படி நினைத்துத் தாங்களும் அவர்களைப் போலப் பணமும் பதவியும் பெறப் பாடுபடலாம். ஆனால் பணக்காரனை, பதவியில் உள்ளவனைக் கேட்டால் தெரியும், அவனுக்கு எத்தனை கஷ்டங்களென்று. நாம் திண்ணையில் இருக்கிறோம். விழுந்தால் சிராய்த்துக் கொள்வதோடோ, சுளுக்காவதோடோ போய்விடும். பணக்காரனும் பதவிக்காரனும் மாடிமேல் இருக்கிறான். எனவே அவன் விழுந்தால் எலும்பெல்லாம் முறிந்து போகும். பிராணாபத்து ஆகும். ஒருவனுக்குப் பணமும் பதவியும் உள்ளபோதே அதனால் உண்டாகிற சிறிது சுகத்தோடு, தன் பணம், பதவி போகக் கூடாது என்ற கவலை சுகத்தைவிட அதிகமாக இருக்கிறது. இதனால்தான் உலகத்தில் எவனுமே, தான் சந்தோஷமாக இருப்பதாகச் சொல்லக் காணோம். ஒவ்வொருவனும் தானே மகா புத்திசாலி, தானே மிகவும் யோக்கியன், தானே ரொம்ப அழகு என்று நினைத்துக் கொண்டிருப்பது போல், அதிக துக்கமுள்ளவனும் தானே என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்.



துக்கம் நம் உடன்பிறப்பு. நம் பூர்வ கர்ம வினையின் பயனாக இந்தத் துக்கங்களுக்கு நாம் முன்னமேயே விதை போட்டிருக்கிறோம். இதிலிருந்து தப்ப வழியில்லை.

ஆனால் கர்மத்தினால் ஏற்படும் கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்டு சாந்தமாக இருக்க வழி உண்டு. புதிதாகக் கர்ம மூட்டையைப் பெருக்கிக் கொண்டு எதிர்காலத்தில் கஷ்டத்தை அதிகமாக்கிக் கொள்ளாமலிருக்க வழி உண்டு. ஞானம்தான் அந்த வழி.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

## துப்பட்டா துயரம்!

ரூபம் அகர்வால் தனது கணவர், மகனுடன், அந்த உல்லாச விளையாட்டுப் பூங்காவுக்கு வந்தார். அவருக்கு ஒரு ஆசை. பிள்ளைகள் விளையாடும் அந்தத் திறந்த விளையாட்டுத் காரில், சவாரி செய்ய வேண்டும், என்பதே.

காரில் ஏறி ஆக்ஸிலேட்டரை அழுத்தினார். கார் விர்ரென்று புறப்பட்டது. ஆனால் பரிதாபம்! காற்றில் ரூபம் கழுத்தைச் சுற்றி அணிந்திருந்த துப்பட்டா காரின் பின்சக்கரத்தில் மாட்டி அவரது கழுத்தை இறுக்கி, கத்தவோ, கையை ஆட்டவோ, முடியாமல் செய்து விட்டது.

மனைவி ஆபத்தில் இருப்பதைக் கண்ட கணவர் ராஜேஷ் அகர்வால், பாய்ந்து சென்று மூச்சுத் திணறிக் கொண்டிருந்த மனைவியை மீட்டார். அந்தப் பூங்காவில் முதல் உதவிச் சாதனமும் இல்லை. அவசரமாக ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போக, பத்து நிமிடத்தில் அன்பு மனைவி ரூபம் இறந்து விட்டாள் என்பதைத் தெரிந்து கொண்டார்.

தகவல்: வீ.எஸ். ராஜகோபால்,

ஆதாரம் : டைம்ஸ் ஆப் இந்தியா



கொண்டிருந்தவர்களை அழைத்தான்.

"ஏலேய், முத்து, ரத்தினம், நடு மார்க்கெட்ல யார் யாருடா தேங்காய்க் கடை போட்ருக்கானுக".

"தேங்காய் கிடைக்காத, கிராக்கி நேரத்துல எத்தனை பேர் போடப் போறானுக. ஒருத்தன்தான்ணே, வலசக்காரன். ஏன்ணே ஏதாவது தகராறா?"

"நாமெல்லாம் சங்கத்துக்குக் கட்டுப் பட்டு ஒரே விலைன்னு விக்கிறோம். நடு மார்க்கெட்டுல போய் உட்கார்ந்துக்கிட்டு, எவனும் கேட்க மாட்டாங்கிற தைரியத்துல, அந்த நாயி நாலு ரூவான்னு தேங்காயை அள்ளித் தள்ளிக்கிட்டு இருக்கான்."

"நாலு ரூவாயா? இப்டி கொறச்சு வித்தா நமக்கெல்லாம் எப்படி போணியாகும்? வைச்சது வைச்சபடி பூசைதான் பண்ணனும்."

"அதாண்டா, காலையிலேயே நான் கடை போட்டும் ரெண்டு தேங்காய்க்கு மேல விக்கல எனக்கு, என்ன விஷயம்னு இப்பத்தானே தெரியுது."

"அந்த ஊர்க்காரனுக மண்டைக்கனம் புடிச்சவனுங்கண்ணே, ஊர்க்காரங்க மட்டுமில்ல. அந்த ஜாதிக்காரனுக யாரும் நம்ம சங்கத்துலயும் சேர மாட்டானுக. எப்ப பார்த்தாலும் நம்மளோட ஒத்து சேராம ஒரே தகராறுதான்."

"சங்கத்துல சேராம எப்படிடா, மார்க்கெட்டுக்குள்ள தேங்கா விக்க முடியும். நம்மளை இளிச்சவாயன்னு நெனச்சானுகளா?"

"அன்னைக்கு என்னடான்னா, நடு மார்க்கெட்ல நிக்கிற நம்ம தலைவர் சிலை மேல காக்கா எச்சம் போட்டதைப் பார்த்துட்டு கை தட்டி, கிண்டல் பண்ணினானுக. அப்பவே அவனுகளுக்கு பல் பேந்துருக்கும்! தப்பிச்சுட்டானுக. கொஞ்சமாச்சும் பொடதில தட்டி வச்சாத்தான் சரிப்படும். இன்னிக்கு ஒண்ணுல ரெண்டு பாத்துப் புடுவோம். வாங்க".

அவர்கள் நடுமார்க்கெட் நோக்கிப் புறப்பட்டார்கள். போன வேகத்தில் மீசைக்காரன், அந்த கெச்சலான கடைக்காரன் கூறு பிரித்திருந்த தேங்காய்களைக் காலால் எத்தி விட்டான்.

"ஏண்டா, நீதான் பொழக்கிறவன், மத்தவங்க காதுல பூ வச்சுக்கிட்டு அலையறாங்கன்னு நெனச்சியா. என்னா விலைக்குடா நீ தேங்கா விக்கிற?"

சிதறி ஓடிய தேங்காய்களைப் பார்த்ததும் கெச்சலான கடைக்காரனுக்குக் கோபம் மூக்கில் வந்து உட்கார்ந்தது.

"ஏய், என்ன இல்லிருந்தா ஏந் தேங்காயை எத்தி விடுவ. நான் எப்படி வேணுமினாலும் விப்பேன். மூடிக்கிட்டு போ. அதைக் கேட்க நீ யாரு?"

"உன்னிஷ்டத்துக்கு விக்கணும்னா, மார்க்கெட்டுக்குள்ள கடை பரப்பாதே. தெருவுல போய்க் கூவு. யாரும் கேட்கல. எங்க சங்கத்துல சேர்ந்திருக்கிறவன்தான் மார்க்கெட்லே தேங்கா கடை வக்க முடியும். நீ சங்கத்துல அனுமதி வாங்கியிருக்கியாடா?"

"போங்கடா நீங்களும் ஒங்க சங்கமும். சங்கமாம் சங்கம். பெரிசா பீத்திக்கிட்டு வர்றானுங்க. வியாபாரிக்கு வர்ற லாபத்தைக் கொள்ளையடிக்கிற, பிச்சைக்காரப் பயலுக நடத்துற சங்கத்தைப் பத்தி பெரிசா பேச வந்துட்டானுக."

"என்னடா சொன்ன...."

மீசைக்காரன் பொங்கி வந்த ஆத்திரத்

தோடு, நடு மார்க்கெட்காரனின் சட்டையைக் கொத்தாகப் பற்றி பளாரென அறைந்தான்.

"ஏண்டா நாய்ப்பயலே, இந்த மார்க்கெட்டே எங்களது தாண்டா. எங்க சங்கத் தலைவர் பேரத்தான் இந்த மார்க்கெட்டுக்கு வச்சருக்கு. கோயில் திடலை இப்படி மார்க்கெட்டா மாத்த போராடி ஜெயிச்சு, கிராமத்து வியாபாரிகளுக்கு வாழ்வு கொடுத்தவர் எந்தலைவர். அந்த தலைவர் சிலைக்கு எதிரே வியாபாரம் பண்ணிக்கிட்டு கேவலமாவா பேசுற."

எதிரே பழக்கடை வைத்திருந்த கெச்சாலனவனின் தம்பி, அண்ணன் அடிபடுவதைப் பார்த்து, எகிறிப் பாய்ந்து வந்தான்.

"ஆமாம், பெரிய தலைவரு, வீதிக்கொரு வப்பாட்டி வச்சுருந்த கேவலப்பய. அவம் பேருல ஒரு மார்க்கெட். அவனுக்கு இந்தக் கேணப் பயலுக சிலையெடுக்கானுக. உங்க வண்டாளமெல்லாம் தெரியாதுன்னா பேச வந்துட்ட. வந்ததுமில்லாம என்னா தெனாவட்டு இருந்தா - எங்கண்ணன் மேல கை வப்ப... ஜாதி திமிராடா உங்களுக்கு?"

அவன் பேசிக் கொண்டே மீசையின் அடிவயிற்றில் ஓங்கி உதைத்தான்.

அடியின் வலி, மீசையை வெகுண்டு எழச் செய்ய, அடித்தவனின் பிடரியைக் கீழே தள்ளி அமுக்கினான். அவனுடன் வந்தவர்கள், விழுந்தவனை மொத்த ஆரம்பிக்க,

ஆங்காங்கே கடை போட்டிருந்த ஆட்கள் திரும்பினார்கள்.

"சித்தப்பாயோய். நம்மாளுகளை கூப்பிடுங்க. வலிய வம்புச் சண்டைக்கு வந்துக்கிட்டு, கையை நீட்டுறானுங்க." நடு மார்க்கெட்காரன் கூக்குரலிட்டான்.

"டேய் மாப்பிள்ளை, நம்மூர்க்காரன்களை... ஜாதிப் பயலுக தொவச்சு எடுக்கிறானுக டோய்."

"தேங்காய்க் கடை ராமு வம்புச் சண்டைக்கெல்லாம் போமாட்டானே. அவனைப் போய் இந்த அடி அடிக்கிறானுக?"

"நம்ம ஜாதின்னா இவனுகளுக்கு எப்பவும் எளக்காரந்தான். எகத்தாளமா பேசிக்கிட்டு அலைவானுக. நீட்டுன கையை ஒடிச்சுப்புடணும் இன்னிக்கு. வாங்கடா..." பேசியபடி கடையை விட்டு கும்பலாய் ஆட்கள் ஓடி வந்தார்கள்.

ஓடி வருபவர்களைப் பார்த்ததும், மீசைக்காரனும் அவனோடு வந்தவர்களும், சிதறிக் கிடந்த தேங்காய்களைப் பொறுக்கி விசிற ஆரம்பிக்க, வந்தவர்களில் இரண்டு மூன்று பேருக்கு மார்பிலும், தலையிலும் தேங்காய் தாக்கியது.

திகைத்துப் போன கும்பல், ஆத்திரத்துடன் பக்கத்து விறகுக் கடையில் புகுந்து, கையில் கிடைத்த உருட்டுக்கட்டைகளை தூக்கிக் கொண்டு ஓடி வந்தது. தங்கள் பங்குக்கு அவர்களும் கட்டைகளை எறிய, யாரோ ஒருவன் வீசிய உருட்டுக்கட்டை திசை மாறி மீசைக்காரனின் தலைவர் சிலையின் முகத்தைத் தாக்க, தலைப்பகுதி முற்றாக நொறுங்கியது.

தலையை இழந்து முண்டமாய் நின்ற சிலையைப் பார்த்த ஒருவன் கத்தினான்.

"அய்யய்யோ, நம்ம தலைவர் சிலையை பாருண்ணே, உடைச்சுட்டானுக."

"பாவம்டா காக்கா, இனிமே அது எச்சம் போட எங்க போகும்?". எதிர்க்கூட்டத்தில் ஒருவன் விசிலடித்தபடி கத்தினான்.

"டே காளி, ரங்கா, முத்து நம்ம சங்கத்துல போய் நம்மாளுகளைத் திரட்டிக்கிட்டு வாங்கடா. தலைவர் செலய உடச்சு அவமானப்படுத்திட்டாங்க. இனிமே இவனுகளை இங்கே ஜென்மத்துக்கும் கடை போட விடக்கூடாது."

"முக்குக்கு முக்கு ஆட்கள் ஓடிக் கத்தினார்கள்.

"மார்க்கெட்டுக்குள்ள போய் நம்ம தலைவர் சிலைக்கு வந்த கதியைப் பாருங்க. மூஞ்சியை உடைச்சு முண்டமா நிக்க வச்சுட்டானுகளே. வயிறு எரியுது".

"என்னதுடா சொல்றீங்க, சிலையை எவண்டா உடைச்சான்?"

"அந்த...ஜாதிக்காரனுக வேல. எப்பயும் வாய்வார்த்தையிலதான் வம்புக்கு வருவானுக. இன்னிக்கு, தெருவுக்கு ஒரு பொம்பளைய வச்சுக்கிட்டு இருந்த, இந்த கேவலப்பயதானடா ஒங்களுக்கு வாலுறுவி விட்டிருக்கான்னு சொல்லிக்கிட்டே, நம்ம தலைவர் செலய அடிச்சு பேத்தெடுத்துட்டானுக."

"ஏண்டா டேய், உடச்ச கையை, அங்கணயே வெட்டிக் கூறு கட்டாம, இங்க சேதி சொல்ல எதுக்குடா வந்தீங்க? அந்த முட்டாப் பயலுக செலய உடக்கிறவரை விரல் சப்பிக்



"என் மனைவி காக்கா மாதிரி!"

"கறுப்பா?"

"இல்லே! விருந்தாளி வராங்கன்னு தெரிஞ்சா காலைல இருந்தே கத்தத் தொடங்கிடுவா!"

- பர்வதவர்த்தினி



"என்னாலயே என் காதை நம்ப முடியலீங்க!"

"என்ன செய்யுது?"

"ஒரு காது கேட்கிற ரகசியத்தை இன்னொரு காது ஒட்டுக் கேட்குது!"--

— பார்வதவர்த்தினி

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

இட்டு நின்னீங்களாடா. போங்கடா. தூங்குற புலியை குத்திவிட்டுட்டானுக. பதிலடி கொடுக்கலைன்னா தலைமேல எகிறிருவானுக. செயை உடைச்ச கைய தனித்தனியா கழட்டிக் கொண்டாங்கடா"

பற்றியெரியும் மூங்கில் காடாய், ஆங்காங்கே செய்தி பரவி, புற்றீசலாய் ஆட்கள் அரிவாளும், வேல்கம்புமாய் மார்க்கெட்டுக்குள் புகுந்தனர். மூர்க்கவெறியில் கண்ணில் பட்ட கடைகளை அடித்து நொறுக்கிக் கொண்டே வந்தனர்.

'எங்க தலைவர் செலய எவண்டா உடச்சான்? நீயாடா... நீயாடா...."

'டேய்... நீ... அந்த ஜாதிக்காரன்தானே. செல மேல கைவக்கிற அளவுக்கு தைரியம் வந்துடுச்சாடா ஒங்களுக்கு. ஊரையே பொணக்காடா ஆக்கிப்புடுவோம்..."

வெறி பிடித்த வேங்கையின் பாய்ச்சலோடு வந்தவர்களால், எதிர்ப்படுவோருக்கு, சரமாரியாய் அடியும், வெட்டும் விழுந்தன. இதைப் பார்த்த பாதசாரிகள் பதறி ஓடினர். பாதையோரம் கடை விரித்திருந்த கிராமவாசிகள், தங்கள் காய்கறிகளை அள்ளியும், அள்ளாமலும் பயத்திலும் அங்குமிங்குமாய் அல்லாட, உள்கடைக்காரர்கள் சட்சட்டென ஷட்டரை இழுத்து விட்டு கடைக்குள் பாதுகாப்பாய் ஒடுங்கிக் கொண்டனர். கும்பலில் ஒரு பகுதியினர் ஆவேசமாய் முத்தாளம்மன் கோயிலுக்குள் புகுந்தனர்.

"எந்தலைவன் நொறுங்கிப் போய் கிடக்கான். உங்களுக்கென்னடி கோயில்... கும்பிடு. ஏய்டி போங்க வெளியே. கோயில் கதவைச் சாத்துங்கடா. இல்ல.... அம்மன் செலயவே உடச்சு எறிஞ்சிடுவோம்." கோயிலுக்குள் இருந்த பெண்கள், குழந்தைகள் பீதியுடன் வெளியே ஓடிவந்தனர்.

மார்க்கெட்டுக்கு எதிர்ப்புறம் சென்று கொண்டிருந்த பஸ்கள் சரசரவென கற்களால் தாக்கப்பட்டன. அவிழ்த்துக் கொட்டிய நெல்லிமுட்டையைப் போல, பயணிகள் சிதறி ஓடினர். பதட்ட நிமிடத்தில் போலீஸ் வேன் பிளிறிக் கொண்டு வந்து சேர்ந்தது. படபடவென வேனிலிருந்து இறங்கிய போலீசார் தடிகளைச் சுழற்ற ஆரம்பிக்க, கலவரக்காரர்களுடன், அப்பாவியாக பாதசாரிகளும் சேர்ந்து அடிபட்டனர். வெறி பிடித்த கூட்டம் ஆங்காரமாய் போலீஸ் வேனையும், போலீஸ்காரர்கள் சிலரையுமே தாக்க, அவர்களைக் கட்டுப்படுத்த இயலாமல் போலீஸ் கண்ணீர் புகைக்குண்டுகளை வீசத் தொடங்கியது.

"ஏண்டி... உங்க வீட்டுக்கு வந்தா வர்றவங்களை உம்பொண்ணு, வாங்கன்னுகூட கேட்க மாட்டேங்கிறா. ஆனாலும் நீ, பொண்ணை இப்படி வளர்க்கக்கூடாதுடி...." தேங்காய்ப் பையோடு கிழவி யாரிடமோ பேசிக் கொண்டிருந்தாள்.

அந்தவழியாக எதிர்வீட்டு சந்துரு சைக்கிளில் படுவேகமாய் வந்து கொண்டிருந்தான். அவனது இடதுகை புஸ்ஸென வீங்கியிருந்தது. கிழவியைப் பார்த்துவிட்டு அவன் சடெரென பிரேக்கடித்தான்.

"ஆயா, இங்க என்ன வம்பளக்கறீங்க. சீக்கிரமா வீட்டுக்குப் போங்க. சூட்டிங் ஆனாலும் ஆகும்."

"சூட்டிங்கா.... நம்மூர்லயா. அட யாருடா நடிக்க வர்றாங்க? அப்பாஸ், அப்பாஸ்ங்கிறாங்களே, அவன் வந்தா சொல்லுடா."

"நாசமாப் போச்சு. சினிமா சூட்டிங்கில்ல. போலீஸ் துப்பாக்கி சூடு. மார்க்கெட்டுக்குள்ள பயங்கரச் சண்டை.... அந்த ஜாதி தலைவர் சிலையை வேற உடைச்சிருக்காங்க. பத்துப் பதினைஞ்சு பேருக்கு வெட்டு விழுந்துடுச்சி. பொழக்கிறானோ என்னவோ. செத்தா கலவரம் இன்னும் ஜாஸ்தியாகும். இப்பவே போறவன், வர்றவன் எல்லாரையும் புடிச்சு அடிக்கிறானுங்க. எனக்கும் கையில அடி விழுந்துடுச்சி. பஸ்லயெல்லாம் கல்லை வீசி எறிஞ்சி, ஒரே கலாட்டா. கண்ணீர்ப்புகை விட்டும் சமாளிக்க முடியாத போலீஸ், துப்பாக்கியை நீட்டிண்டு நிக்கிறாங்க... சீக்கிரமா வாங்க போயிடலாம்."

தடதடவென்று ஆட்கள் காயம்பட்ட சிலரை, அந்த வழியாகத் தூக்கிக் கொண்டு ஆஸ்பத்திரி பக்கமாய் ஓட, ரத்தச் சேறாய்த் துடித்துக் கொண்டு போனவர்களைப் பார்த்து பயந்து போனாள் கிழவி. மிக அவசரமாய் சந்துருவின் சைக்கிளில் ஏறிக் கொண்டு, பின் கேட்டாள்:

"ஏண்டா, எதனால திடீர்னு மார்க்கெட்டுக்குள்ள கலவரம் வந்தது?"

## மணமக்கள் தேவை
## கம்ப்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

**கம்ப்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில்**

| | | |
|---|---|---|
| ஆங்கிலம், தமிழ் | : | ரூ. 50/- |
| எதிர்கால கணிப்புடன் | : | ரூ. 150/- |
| கல்யாண பொருத்தம் | : | ரூ. 50/- |

**CONSULT DIVINE ASTROLOGER**
**THETIYUR V. MAHADEVAN**
**WITH PRIOR APPOINTMENT.**

**ASTROLOGY SOFTWARE FOR SALE.**

## ஸ்வயம்வராலயா

(GOVT REGD)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,

| | | |
|---|---|---|
| சென்னை - 33. | போன் | : 4846427 |
| மைலாப்பூர் | போன் | : 4984278 |
| பெங்களூர் | போன் | : 3340146 |

**ALL POOJA ENTHRA/RAKSHA**
**AVAILABLE RATES ON REQUEST**





## வெற்றி மேல் வெற்றி

"காலத்தின் விதி மதியைக்
கடந்திடுமோ என்றேன்;
காலமே மதியினுக் கோர்
கருவியாம் என்றாள்..."

ஆம். காலமே கருவி!
காலம் அறிந்து செயலாற்றி
வெற்றி சூட உதவுவது
எண்ணியல் சோதிடம்.
எனவே - உங்கள் மிகச் சரியான ஆங்கிலப்
பிறந்த தேதி மாதம் - வருடம் மற்றும்
நீங்கள் பிறந்த ஊர் ஆகிய விவரங்களை

| புரவி | Puravi |
|---|---|
| நவீனஇயல் எண்சோதிடம் | New Mode Numerology |
| தபால் பெட்டி : 3363 | Post box : 3363 |
| சென்னை - 600 035 | Chennai - 600 035 |
| இந்தியா | INDIA |

நீங்கள் மேற்கொள்ளும் செயல்களில் எல்லாம்
சாதனை புரிய, திட்டவட்டமாகவும்
திட்ப நுட்பமாகவும் கணித்த தேதி விவர
அட்டவணையைப் பெற்றுச் செயல்படுங்கள்.

**ஓர் ஆண்டுக்கு ரூ. 60/-**
**இரு ஆண்டுகளுக்கு ரூ. 100/-**



இசையோடு பாடுதல் இறைவனை மகிழ்விக்கும்
திசையெட்டும் கிடுகிடுக்கத் தாண்டவம் ஆடினானை-உளம்
நசைஇ நெஞ்சம் நெக்குருகி நலமார்ந்த
இசை வடிவில் ருத்ரத்தை எடுத்தியம்பும் ஒலிநாடாவும் புத்தகமும்

## ஸ்ரீ ருத்ரம்

பாடியவர்
**எ.வி. ரமணன்**

ஒலிநாடா விலை ரூ. 36.00 தபால் செலவு 1 – 3 க்கு ரூ. 18.00 7– க்கு மேல் 26.00

புத்தகம் விலை ரூ. 15.00 தபால் செலவு 1 க்கு ரூ. 11.00

ஸகல துன்பங்களையும் துடைத்து தூயவனாக்கும்

## ஸ்ரீமத் பாகவத மஹா புராணம்

விலை ரூ. 75.00 (இரண்டு பாகங்கள்) 1 செட் தபால் செலவு ரூ. 18.00

**கிரி டிரேடிங் ஏஜென்ஸி**

நேரில் பெற
10, கபாலீஸ்வரர் கோயில் சன்னதி தெரு,
மயிலை, சென்னை – 600 004.
போன் : 494 0376, 494 2530




தபாலில் பெற
58/2, டி.எஸ்.வி. கோயில் தெரு,
மயிலை சென்னை – 600 004.
போன் : 494 3551 ஃபேக்ஸ் 91+44+495 3821

கிரி ஸ்டோர்ஸ் : மோடி நிவாஸ், பண்டார்கர் ரோடு, (தபால் நிலையம் எதிரில்), மாட்டுங்கா, மும்பை. போன் : 414 3140, 414 1344.

● டி. அரவிந்த் பகபதி,
ஊஞ்சவேலாம்பட்டி. ❒

? நாட்டில் எவ்வளவோ திட்டங்களுக்குப் பணத் தட்டுப்பாடு இருக்க, கோடிக்கணக்கில் வரிபாக்கி வைத்திருக்கும் நடிகர்-நடிகைகளையும் பெரும் புள்ளிகளையும் நம் அரசு அவ்வளவாகக் கண்டு கொள்வதில்லையே...?

! வயிற்றெரிச்சலான விஷயம் தான். இவர்களின் பட்டியலைப் படிக்கிற யாருக்குத்தான் வரி செலுத்தும் எண்ணம் வரும்?

● கே. ரமேஷ்ராமன்,
சென்னை – 52

? கமல் செய்தது சரியா...?

! முற்றிலும் சரியே. வறட்டுப் பிடிவாதங்களை யாராவது ஒரு தரப்பினராவது விட்டுக் கொடுத்தாலொழிய பிரச்னை தீர வழியில்லை. மேலும், பெரும்பான்மையான தொழிலாளர்கள் ஃபெப்ஸி பக்கம் இருக்க, அவர்களைப் புறக்கணிப்பது என்பது சினிமா துறைக்கு நல்லதல்ல. கமலின் முடிவு ஒரு கதவு திறக்க வழி கோலியிருக்கிறது. ஃபெப்ஸி மேலிடமும் இறங்கி வரவேண்டும்.

● பி. ஜெயப்பிரகாஷ்,
சர்க்கார்பதி.

? வீரப்பனால் கடத்தப்பட்ட வனத்துறையினரில் ஒருவர் கூட, "நாட்டுக்காக நாங்கள் உயிர் துறந்தாலும் பரவாயில்லை... வீரப்பன் கோரிக்கைக்கு அரசு அடிபணிய வேண்டாம்" என்று ஏன் கூறவில்லை சார்...?

! கடத்தப்பட்டது நாமாக இல்லாதவரை இதுவும் பேசலாம்; இன்னமும் பேசலாம்!

● லீலா இராம், தக்கலை.

? உலக நாடுகளை இந்தியா எதில் பின்னுக்குத் தள்ளியிருக்கிறது? (ஜனத்தொகை என்ற பதிலைத் தர வேண்டாம்!)

! ஆன்மிகம்.

● ஜெ. ரஜினி ராம்கி,
மயிலாடுதுறை.

? குடும்ப அரசியல்னா என்னங்க?

! வாழையடி வாழையாக ஊழல் பெருகிக்கிட்டே போறதுதாங்க! நரசிம்மராவ் மகன் முன் ஜாமீன் ரத்து; சீதாராம் கேசரி மகன் மீது சி.பி.ஐ. விசாரணை தீவிரப்படுத்தப்பட வேண்டும்... என்றெல்லாம் நீதிமன்ற உத்தரவுகள் வருதே... அதான்! அதான் குடும்ப அரசியல்!

● ப. இராம் முருகன், சிவகங்கை.

? நான் இருபத்தைந்து முறை காதலித்து வெற்றி பெற்றுள்ளேன் என்கிறாரே பாலகுமாரன்! அது பத்தி...?

! அப்படியானால் அவை காதலே அல்ல!

● மு. இரவிச்சந்திரன், சேலம் – 9.

? அப்பாடா... லாலுவை சிறையில் அடைத்து ஒரு வழியாக நிம்மதிப் பெருமூச்சை விட வைத்து விட்டார்களே...?

! சிறையா அது? சொர்க்க வசதிகள் அல்லவா செய்து தரப்பட்டன! அதுவும் போதாமல், வழக்கமான பல்லவியான இதய நோய் என்று கூறிக் கொண்டு மருத்துவ மனைக்கு இடம் பெயர்ந்து விட்டாரே...!

## நீங்கள் கேட்டவை


• வெற்றிப் பெருமிதம்!


• வழக்கமான பல்லவி!


• வேறெப்படி...?


• முற்றிலும் சரி...

## ஐ.மு. அரசு
# தள்ளாடுகிறதா? தடுமாறுகிறதா?

● தெரிசை ஜயப்பன், திருப்பூர் – 4.

? உள்துறை அமைச்சர் பதவியை ஒரு மாதம் தன்னிடம் கொடுத்தால் சந்தன வீரப்பனைப் பிடித்துத் தருகிறேன் என்று சவால் விட்டுள்ளாரே சுப்ரமண்ய சுவாமி!

! நக்கீரன் கோபாலாக மாறுவேடம் அணிந்தா?

● வ. ரஜினி பாலாஜி, சி.என்.கிராமம்.

? 'பிரேமானந்தா கற்பழிப்பு வழக்கில் அறிவியல் பூர்வமான ஆதாரங்கள் இல்லை' என்ற ராம் ஜெத்மலானியின் வாதம் குறித்து!

! பிரேமானந்தாவின் வக்கீலாக இருந்து கொண்டு அவர் வேறெப்படி வாதாடுவாராம்?! இருபதாம் தேதி தீர்ப்பைத் தமிழகமே எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறது.

● எம். அழகம்மாள், மதுரை–10.

? பெயர்களை வைத்து நடந்த ஜாதிக் கலவரம் இப்போது சிலைகளை வைத்து நடக்க ஆரம்பித்துள்ளதே! சிலைகளை அகற்ற முதல்வர் முன்வருவாரா?

! இதற்குத்தான் முன்பே சொன்னது... 'ஜாதி', பெயர்களிலிருந்து அகன்றால் போதாது; மனங்களிலிருந்து அகல வேண்டும் என்று...

● தேவந்தி துரைராஜ், திருப்பத்தூர் –2.

? 'குஜ்ரால் அரசு நீடிக்காது' என்று கூறி வரும் பா.ஜ.க.வுக்கு அதைத் தவிர வேறு வேலை கிடையாதா?

! ஏன் இல்லை..? தேர்தலுக்குத் தயாராகும் வேலை இருக்கிறதே!

● பி. நடராஜன், அன்னூர்.

? ஆசிய கோப்பையும் கை நழுவிப் போய்விட்டதே?

! அது போனால் போயிட்டுப் போகுதுங்க. நம்ம அண்டைநாடுதானே அள்ளிக்கிட்டுப் போச்சுன்னு சந்தோஷப்படக்கூடாதா? ஸ்ரீலங்கா உலக ரிகார்டுகளை ஏராளமாக முறிய டிச்சு, முதல் டெஸ்ட்டில் பிரமிப்பூட்டற சாதனைகளைப் படைத்தது ஒரு த்ரில் உண்டாக்கலையா... விளையாட்டை ரசிக்க ஒரு பரந்த மனப்பான்மை வேணுங்க...


• எங்கும், எதிர்ப்பு!

□ ரூ 50 பரிசு பெறுபவர்:
டி. அரவிந்த் பசுபதி,
2/72, ஊஞ்சவேலாம்பட்டி அஞ்சல்,
பொள்ளாச்சி (தாலுக்கா),
கோவை மாவட்டம்


• எப்போது உம் முறை?

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? பீகார் அரசியல் பிரச்னையை சமாளிக்க முடியாத குஜ்ரால், ராஜினாமா செய்ய வேண்டும்! என்று எதிர்க்கட்சிகள் தாக்கியுள்ளது பற்றி...?

! எதிர்க்கட்சிகள் தாக்கினால் தேவலையே! அவர் கட்சியிலேயே அல்லவா அவரை எதிர்த்துப் பேசுகிறார்கள்! எதிர்ப்பு கோஷத்தைத் தாங்க திராணியின்றி பிரதமர் தமது கட்சிக் கூட்டத்தைவிட்டு வெளியேறுகிறார்! என்ன கேவலம் ஐயா இது!


• உப்பு போதுமா...?

– தராசு

● வ. திருநாவுக்கரசு, தெங்கால் அஞ்சல்.

? லாலு பிரசாத் மனைவியின் சொத்து மதிப்பு வெறும் 28 மாடுகளும் ஐந்து ஏக்கர் நிலமும்தானாமே...?

! ஆனால் என்ன? அவர் அண்ணன்-தம்பிகள் சுபிட்சமாய் இருக்கிறார்களாம். லாலுவின் சகோதரர்கள்தான் சோற்றுக்கே லாட்டரியாம். குடும்ப சுமுசா என்று வேறு சொல்கிறார்கள்.

● பஞ்சவர்ணமகள், கருப்பம்புலம்.

? வை.கோ., சு.சுவாமி இருவரிடமும் நாக்கைப் பிடுங்கிக் கொள்கிற மாதிரி ஒரு கேள்வி கேட்கணுமே... என்ன கேட்கலாம்?

! சு.சுவாமியிடம் : 'வேதா நிலையம்' விருந்தில் உப்பு போதுமாயிருந்ததா?

வை.கோவிடம்: உமக்கு போயஸ் தோட்டத்தில் விருந்து எப்போது...?

● செ. பெரியசாமி, நரசிங்கபுரம்.

? நாட்டிலும் திருடுகிறார்கள் வீட்டிலும் திருடுகிறார்கள்... என்ன செய்வது?

! காட்டில் திருடுகிறவர்களைவிட இவர்கள் மோசமானவர்கள். அதிலும் சென்னையில் அண்மைக்காலத்தில் பகல் கொள்ளையே மிக அதிகமாகிவிட்டது!

● ஏ. எஸ். இராமசாமி, நீலம்பூர்.

? இ.மு. அரசு தள்ளாடுகிறதா? தடுமாறுகிறதா?

! ஹவாலா வழக்கில் ஷரத் யாதவ் சிக்கிய பிறகும் ராஜினாமா செய்ய மறுக்கும்போது தடுமாறுகிறது.

இன்ஷூரன்ஸ் தனியார் மயம் மசோதாவை சிதம்பரம் வாபஸ் பெற நேரும்போது தள்ளாடுகிறது!

● வி. முத்துக்குமரன், திருமானூர்.

? திறமையுடையவர்களிடம் நிறைய பலவீனங்களும் இருப்பது ஏன்...?

! அதான் கடவுளின் சாமர்த்தியம். குறைகளே இல்லாத மனிதனைப் படைத்துவிட்டால் மனிதனே தெய்வமாகிவிடமாட்டானா..?!

# நடக்குமென்பார், நடக்கும்!

## ஆகஸ்ட் 13 முதல் 19 வரை

**மேஷம் :** ஹலோ, சௌக்கியமா இருக்கீங்களா? - அப்படீன்னு இந்த வாரம் யாராவது உங்களண்ட கேட்டா இழுத்து வெச்சி நறுக்குனு குட்டலாமான்னு தோணும். சரி தானுங்களே? என்னங்க செய்யறது? கிரக நிலைமை கொஞ்சம் சரியில்லை. பத்துக்கு ஆறு பழுதாப் போகிற மாதிரி இருக்குது. நல்லதே நடக்காதுன்னுட்டு இல்லை. குஜ்ரால் வேகத்துல சில சந்தோஷமான சமாசாரங்களும் லல்லு-ரப்ரிதேவி ஸ்பீடுல சில இடக்கான காரியங்களும் நடக்கும். நீங்க என்ன பண்றீங்க, புதுசா எதாவது தொடங்கறதா இருந்தா ஒரு வாரத்துக்குத் தள்ளி வெச்சிருங்க. குறிப்பா பண ட்ரான்ஸாக்ஷன் ஏதாச்சும் முக்கியமா இருந்துச் சின்னா நிதானமா செயல்படணும். வீட்டுல கூட பாருங்க, புருஷன் பெண்டாட்டி, அப்பா - பிள்ளை, அண்ணன் தம்பிங்க நடுவுல இடீர் இடீர்னு மனஸ்தாபம் வராப்பல தெரியுது. வாயை சும்மா பிளாஸ்திரி போட்டு ஒட்டி வெச்சிங்கன்னா பிரச்னை இல்லையே.

**ரிஷபம் :** ஒம்போதுல குரு. பதினொண்ணுல சனி. சாமி, சும்மா சொல்லக் கூடாது. பிரமாதமா இருக்குதுங்க இந்த வாரம்! ஜாலியா உல்லாச உலா எதனாச்சும் போய்வர சான்ஸ் இருக்குது. வீடு கிடு வாங் கற பிளான் இருந்துச்சின்னா, இந்த வாரம் அட் வான்ஸ் குடுத்துடுங்க. ஒர்க் அவுட் ஆயிடும். இன்னொரு விஷயம். ஆபீஸ்ல மேலதிகாரிகளோட எதனா டீப்ரிக்ஷன் இருந்துச்சின்னா இந்த வாரம் அவங்களே அதுக்கு ஃபுல்ஸ்டாப் போட்டுடுவாங்க. ஸோ, டோன்ட் ஒர்ரி! பிறகு, சில பேருக்கு எங்கேருந்தோ லக் அடிக்கப் போகுது. பணம் கூரையைப் பிச்சிக்கிட்டு கொட்டாட்டாலும் பாக்கெட் நிறைய வாச்சும் வந்து சேரும்படியா கிரக நிலைமை சாதகமாக இருக்குது. ஜமாய்க்க வேண்டியது தானே?

**மிதுனம் :** இந்த... லேட்-பிக் அப் புன்னு வாங்களே, அந்த மாதிரி காரியங்கள் நடக்கும் உங்களுக்கு. சனிக்கிழமை வரைக்கும் ஒண்ணும் சுக மில்லை. கையில காலணா நிக்காது. வர வேண்டியது எதாவது இருந்தாலும் இழுத்தடிக்கும். ஞாயிறு லேருந்து கொஞ்சம் சரியாகத் தொடங்கிடும், பார்த்துக்குங்க. ஆனா வியாபாரிகளுக்குக் கொஞ்சம் சாதகமா இருக்குது, இந்த வாரம். புதுசா எதனா ஆரம்பிச்சிட்டீங்கன்னா ஒர்க் அவுட் ஆயிடும். முக்கியமா ஒரு விஷயம். டூ-வீலரைத் தொடாதீங்க இந்த வாரம். விபத்துக்கு சான்ஸ் இருக்குது. மாநகரப் பேருந்துகள்தான் நிமிஷத்துக்கு ஒண்ணு போகுதே. அதுல போங்க. அல்லது இருக்கவே இருக்குது நடராஜா சர்வீஸ்!



**கடகம் :** பொதுவா, குரு நல்ல நிலைமைல இருந்தா பலனும் நல்லா இருக்கும். ஆனா பாருங்க. உங்களுக்கு குரு சரியா இருந்தும் சிலருக்கு சோதனை வராப்பல தெரியுது. அவசர குடுக்கையாட்டம் எதாவது காரியம் செஞ்சி மாட்டிப்பீங்க. நிதானம் முக்கியம் சார்! உணர்ச்சி வசப்படாம இருந்தீங்கன்னாலே பாதி பிரச்னை தீர்ந்துடும். கல்யாணத்துக்கு வெயிட்டிங் லிஸ்ட்டுல இருக்கறவங்களுக்கு டும்டும் சான்ஸ் அடிக்கப் போகுது. அதே மாதிரி குவா குவா சான்ஸ்களும் இருக்கறாப்பல தெரியுது. (அறு பது வயசுக்காரங்க, 'எனக்கா?'ன்னு கேக்காதீங்க!)

**சிம்மம் :** உங்களுக்கு இருக்கறாப்பல எதையும் தாங்கும் இதயம் வேற யாருக்குங்க இருக்குது? சில வாரங்களாவே நிறைய பிரச்னைகளை சந்திச்சிட்டே வந்திருப்பீங்க. மூச்சைப் பிடிச்சிக்குங்க. இந்த வாரமும் அப்படித்தான்! யாருக்காச்சும் கோர்ட், கேஸ் விவகாரம் இருக்குமானா சைலன்டா, வாய்தா கிடைக்குமா பாருங்க. வாதம்னு ஆரம்பிச்சா பிரச்னைதான். ஆனா பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் சாதகமாவே இருக்குது. மனசுல சந்தோஷம் தங்கும். பிரமாதமா சொல்லிக்கறாப்பல நல்லது எதும் நடக்கறது கஷ்டம்னாலும் பாதகமாவும் பெரிசா எதும் நடந்துராது!

**கன்னி :** இந்த ராசி இளைஞர்கள்,



ஜோதிடம் என்பது கலை அல்ல; அது விஞ்ஞானம். கிரகங்களின் சஞ்சாரங்



இளைஞிகளுக்குக் கல்யாணம் நடக்கற நேரம் - பலருக்கு (அந்த வயசுக்காரங்களுக்குத் தான் சார்!) நெருங்கிடுச்சி. படிப்பு, விஷயத்துல பசங்க கொடி கட்டிப் பறப்பாங்க. சிலருக்கு வெளிநாட்டு வேலை சான்ஸ் அடிக்கலாம். ஆனா என்ன ஒன்னுன்னா, உங்களுக்கு நீங்களே எதிரியா மாறி சில காரியங்கள் பண்ணுவீங்க. உதாரணமா, கிடைக்கற நல்ல சான்ஸ் எதையாவது அலட்சியமா தள்ளிப் போட்டுட்டு, அப்புறம் பார்த்துக்கலாம்னு நினைப்பீங்க. இந்த விஷயத்துல கொஞ்சம் ஜாக்கிரதையா இருந்தா போதும். சக்கைபோடு போடலாம்!



**துலாம் :** எதையும் துல்லியமா செய்து முடிப்பீங்க! உற்சாகம் எக்கச்சக்கமா பொங்கி வழியும். (பிடிச்சி வெச்சிக்கங்க.) சந்தோஷமான வாரம்தான். ஆனா, மிதப்புல கொஞ்சம் உடம்பை கவனிக்காம விட்டுடுவீங்க! அதனால பக்கத்துல இருக்கற டாக்டருக்குப் பத்து இருபது தட்சணை வெக்க வேண்டி வரலாம்! குறிப்பா வயசானவங்களுக்குக் கொஞ்சம் உடம்பு நல்லாவே படுத்தும். ஃப்ரைடே அன்னிக்கு அம்பாளை ஒரு ரவுண்டு கும்பிட்டுட்டு வந்துருங்க. பிச்சத்தை அவ கவனிச்சிக்குவா.



**விருச்சிகம் :** இன்னிக்கும் நாளைக்கும் மட்டும் கிரகங்கள் கொஞ்சம் சரியா இல்லை. வெள்ளிக்கிழமையேருந்து பிச்சி உதறலாம்! புள்ளைங்க மூலமா சந்தோஷ செய்தி எதாவது கட்டாயம் கிடைக்கும். அது நீங்க, நினைச்சிப் பெருமைப் படறாப்பல அமையும்! உதாரணமா உங்க பையன் பரீட்சைல பிரமாதமா பாஸ் பண்ணியிருப்பான். இல்லாட்டா, அவன் அப்பாவாயிருப்பான்! ஏதோ ஒன்னு! உற்சாகமா இருப்பீங்க. அது போதாதா?



**தனுசு :** ரொம்ப சந்தோஷமான வாரமா இருக்கும். நினைச்சுப் பார்க்காத இடங்கள்ளேருந்தெல்லாம் துட்டு வரும்! உங்க சாதனைகள் எதனாச்சும் இது வரைக்கும் கவனிக்கப்படாம இருந்திச் சின்னா இந்த வாரம் அதுக்கான அங்கீகாரம் தானா தேடி வரும்! வியாபாரிகளுக்குத் தொழில் நல்லா சூடுபிடிக்கும். ஒன்னுக்கு ரெண்டா லாபம் வரப் போவுது சாமி! உடம்பை மட்டும் சாக்கிரதையா பார்த்துக்கிடுங்க. அது போதும்.



**மகரம் :** உங்ககிட்ட என்ன பிராப்ளம்னா, எதையும் சட்டு சட்டுன்னு முடிவு பண்ணிடறீங்க! யோசிக்கணும் சார்! இந்த வாரம் ரெண்டு மூணு விஷயத்துல இப்படித்தான் அவசர முடிவு எடுத்துட்டு பின்னால வருத்தப்படப் போறீங்க. ஜாக்கிரதையா இருங்க. அதே மாதிரி வீட்டுல சண்டை - உலகப் போரா இல்லாட்டியும் உள்நாட்டுக் கலகமாவாவது வராப்பல தெரியுது. அன்பா நடந்துக்குங்க. குறிப்பா சம்சாரத் தாண்ட! (அம்மணிகள் புருஷனாண்ட..) நிறைய அலைச்சல் வேற இருக்கு. காரியம் என்னவோ அரைக் கிணறு வெற்றிதான்னாலும் கடுமையான அலைச்சல் இருக்குது. அதனால வீட்டுல அமைதியை நிலை நாட்டினீங்கனா ஒரு சாய் மானம் கிடைக்கும்.



**கும்பம் :** டூர் எதனாச்சும் பிளான் போட்டீங்களா? இந்த வாரம் 'டுர்ர்'னு கிளம்பிடுவீங்களே! ஹாயா போயிட்டு வாங்க. வந்ததும் நிறைய வேலை இருக்குது. பின்ன, கல்யாணம், கிரகப்பிரவேசம்னு பல ஃபங்ஷன் வரப் போகுதுங்களே! காசு கொஞ்சம் தாராளமா செலவழியும், பார்த்துக்குங்க.



**மீனம் :** கையில காசே வெச்சிக்காதீங்க சார்! கன்னா பின்னான்னு செலவாயிடும். (வீட்டுல சம்சாரத்தாண்ட குடுத்து வைங்க. கண்ணுக்குத் தெரியாமயாவது செலவாகும்!) 19, 20 தேதில வீடு மாற வாய்ப்பு இருக்குது. அல்லது சொந்த வீடு வாங்கி, புது மனை புகுவிழாவா? ஜமாய்ங்க!

— அக்னி சர்மா

...களை அடிப்படையாகக் கொண்டு கணிக்கப்படுகிறது என்கிறார் அக்னி சர்மா.

# சுதந்திரமாய்ச் சிரியுங்கள்










கருத்து: குல்லூ

படம்: செல்லம்









நாட்டு நிலைமையைத் தத்ரூபமா வரைஞ்சிருக்கிங்க!

INDEPENDENCE
சுதந்திரம்

# "தலித் மக்கள் என்ன காட்டு விலங்குகளா?"

**23 ஜூலை முதல் 31 ஜூலை வரை:**

இருபத்து மூன்றாம் தேதி கோவையிலிருந்து புறப்பட்டேன். உடுமலைப்பேட்டை, பரமக்குடி, கோவில்பட்டி, கொடியன்குளம், சங்கரன்கோவில், கடையநல்லூர், கிருஷ்ணாபுரம் என்று தினமும் கூட்டங்களில் பேசினேன். குறிப்பிட்ட சில இன மக்களும், அதிகாரவர்க்கமும் தலித் மக்களின் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போடுகின்றன; கொடுமைகள் புரிகின்றன என்று விளக்கிப் பேசினேன். ஆகஸ்ட் ஆறாம் தேதி சென்னை தலித் பேரணியில் அனைவரும் கலந்து கொள்ள வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினேன். மதுரையிலிருந்து புறப்பட்டு சென்னை வந்து சேர்ந்தது முப்பதாம் தேதி. அடுத்த நாள் சென்னை புளியந்தோப்பில் பொதுக்கூட்டம்.

**ஆகஸ்ட் 1 :**

திருத்தணி அருகில் உள்ள ஆர்.கே. பேட்டை என்ற ஊருக்குச் சென்றேன். குடியரசுத் தலைவராக திரு. கே. ஆர். நாராயணன் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பாராட்டி போஸ்டர் ஒட்டியதற்காகச் சுமார் 250 தாழ்த்தப்பட்ட மக்களின் குடிசைகள் தீ வைக்கப்பட்டன. பாதிக்கப்பட்ட அந்த மக்களைச் சந்தித்து, ஆறுதல் கூறி, அரசு உடனடி நடவடிக்கை எடுக்கக் கோரினேன்.

**ஆகஸ்ட் 2, 3 :**

அம்பேத்கர் மன்றங்கள் கூட்டாக, செங்கல்பட்டில் ஒரு கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தன. அதில் கலந்து கொண்டேன். திரிசூலம் கூட்டத்துக்குச் சுமார் 2000 கல்லுடைக்கும் தொழிலாளர்கள் வந்திருந்தார்கள். அதில் பெண்கள் அதிகம். எத்தனை தடைகள் வந்தாலும், பேரணியில் கலந்து கொள்ளுவதாய் உறுதியளித்தார்கள்.

**ஆகஸ்ட் 4 :**

பேரணியில் கலந்து கொள்ள இருந்த தலித் மக்களை வரவிடாமல் போலீஸ் தடுப்பதையும், வாகனங்களில் அவர்கள் சென்னை வருவதற்கு விடாமல் செய்யும் நடவடிக்கைகளையும் எதிர்த்து, கோர்ட்டில் ஒரு ரிட்மனு தாக்கல் செய்தேன். செங்கல்பட்டில் ஒரு மீட்டிங் முடிந்து, சென்னை திரும்பியபோது இரவு மணி பத்து.

**ஆகஸ்ட் 5 :**

காலையிலிருந்தே அடுத்தடுத்து பல ஊர்களிலிருந்தும் டெலிபோன் கால்கள் வந்த வண்ணமிருந்தன. 'பேரணிக்குப் போகாதீர்கள்; கலவரம் நடக்கும்; துப்பாக்கிச் சூட்டில் உயிர் இழக்கும் அபாயம் இருக்கிறது' என்று பல ஊர்களிலும் போலீசாரே பயமுறுத்துவதாகச் செய்தி. 'புக் பண்ணியிருந்த வேன்காரன் திடீரென்று வர மறுக்கிறான்; பஸ், லாரிக்கு அட்வான்ஸ் கொடுத்திருந்தோம். ஆனால், அட்வான்ஸை திருப்பி வாங்கிக்கச் சொல்கிறார்கள்' என்று செய்திகள் வந்தவண்ணம் இருக்க, நான், முதல் நாள் போட்ட ரிட்டின் மீதான முடிவுக்குக் காத்திருந்தேன். பேரணியை அனுமதித்து அதே நேரம் போலீசுக்கும், எங்களுக்கும் சில கண்டிஷன்களையும் போட்டிருந்தார் நீதிபதி. பத்திரிகையாளர்களைச் சந்தித்து, பேரணி ஏற்பாடுகள், அதைத் தடுக்க எடுக்கப்படும் முயற்சிகள் எல்லாவற்றையும் விளக்கினேன்.

உள்ளூர, 'கலவரம் வரும்' என்று அரசு தரப்பில் திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டிருக்கிறார்களே! நாம் அமைதி காத்தாலும், எப்படியும் கலவரம் மூள வழிசெய்ய ஒரு திட்டத்துடன் இருப்பார்களோ என்ற சந்தேகத்துடனே இரவு தூங்கப் போனேன்.

**ஆகஸ்ட் 6 :**

காலை எழுந்தது முதலே பேரணி அமைதியாய் நடந்து முடியவேண்டுமே என்ற டென்ஷன். சுமார் 2000 வாகனங்களையும், ஒரு லட்சம் பேரையும் பேரணியில் கலந்து கொள்ள விடாமல் பல்வேறு ஊர்களிலும் தடுத்திருப்பதாக ஒரு கணக்கீட்டை, சில முக்கியமான நண்பர்கள் என்னிடம் கூறியபோது, திட்டமிட்டபடி, திரளான மக்கள் பேரணிக்கு வருவார்களா என்ற சந்தேகமே எனக்குத் தோன்றியது.



பார்க்கக் கூட போலீஸ் அனுமதிக்கவில்லை. தலித் மக்களை சிங்கம், புலி போன்ற காட்டு விலங்குகள் போல சித்திரிக்க அரசு முயன்றது ஆட்சேபணைக்குரியது.

இதனால் தலித் மக்களின் பிரச்னைகள் போதிய அளவுக்குப் பொதுமக்களின் கவனத்தை ஈர்க்காமல் போய்விட்டதாகக் கூட நான் கருதுகிறேன்.

ஒரு மணிக்கு கவர்னரின் அப்பாயிண்ட்மென்ட். ஆனால் பேரணி கொஞ்சம் தாமதமாகி விட, நாங்கள் கவர்னர் மாளிகையை அடைந்தபோது மணி ஒன்றே முக்கால்.

பொறுமையுடன் எங்களுக்காகக் காத்திருந்த கவர்னர், எங்கள் மனுவைப் பெற்றுக் கொண்டார்.

எங்களைப் பொறுத்த வரை, கவர்னர் பதவி என்பது ஓர் அலங்காரப் பதவி அல்ல. ஒரு மாநிலத்தைப் பொருந்த வரை அவர்தான் முக்கிய மானவர். எனவேதான், மாநில அரசின் கொடுமைகளைக் கண்டித்து கவர்னர் மாளிகைக்குப் போனோம்.

கவர்னரைச் சந்தித்தபின் பிரஸ்மீட். தொடர்ந்து பொதுமக்கள் மத்தியில் உரை

இரவு, ஐஜி. காளிமுத்துவைச் சந்தித்து முன் னெச்சரிக்கை நடவடிக்கை என்ற பெயரில் கைது செய்துள்ள தலித் இன மக்களை உடனடியாக விடுதலை செய்யும்படி கேட்டுக் கொண்டேன்.

எங்கள் இயக்கம் சார்பாக, ஒரு குழு, இன்டலிஜென்ஸ் ஐஜி. அலெக்ஸாண்டரை இதே நோக்கத்துடன் சந்தித்தது.

காலை மணி பதினொன்றே காலுக்கு. எம்எல்ஏ. விடுதியிலிருந்து புறப்பட்டேன். வள்ளுவர் கோட்டத்தை அடைந்தபோது, அங்கே, நான் கணக்குப் போட்டிருந்த எண்ணிக்கையை விட கூடுதலான மக்களைக் கண்டேன்.

மைக் வைத்த வேனைப் பயன்படுத்த போலீஸ் அனுமதிக்காததால், போலீஸ் வேனிலேயே நான் புறப்பட்டேன்.

பேரணியின் முன்னும், பின்னும் பார்ப்பதைவிட, பக்கங்களில் என் பார்வை பதிந்திருந்தது. வேண்டாத விஷமிகள், எங்கிருந்தாவது, சட்டென்று, கூட்டத்தில் புகுந்து, கலகம் விளைவித்து விடுவார்களோ என்று நான் அச்சப்பட்டதே அதன் காரணம்.

தமிழ்நாட்டுப் போலீசார் பற்றாது என்று அண்டை மாநில போலீஸ், அதிரடிப் படை என்று அரசு குவித்திருந்தாலும், விஞ்ஞான பூர்வமான மாஸ் மானேஜ்மெண்ட் என்பது நம் போலீஸாருக்குக் கொஞ்சமும் தெரியவில்லை என்பது அங்கே பளிச்சென்று தெரிந்தது.

வழிநெடுக கடைகளை அடைக்கச் செய்து, மக்களை மாற்றுப் பாதையில் செல்ல வைத்து, பேரணியை மக்கள் சாலை ஓரமாய் நின்று

## ஆகஸ்ட் 7:

எல்லா பத்திரிகைகளிலும், பேரணி குறித்து விரிவான செய்திகள் வெளியாகியிருந்தன. நிறைய விசிட்டர்கள்.

பேரணிக்கு வந்த இரண்டு பேர் (ராஜபாளையம் பகுதியைச் சேர்ந்தவர்கள்) ரயில் பாதையைக் கடக்கிறபோது, ரயிலில் அடிபட்டு இறந்து போன செய்தி வந்தது. அவர்கள் உறவினர் வீட்டுக்குச் சென்று ஆறுதல் சொல்லிவிட்டு வந்தேன். இரவு கல்கி பேட்டி.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

**— டாக்டர் கிருஷ்ணசாமி எம்.எல்.ஏ. டைரியிலிருந்து....**

ஆகஸ்ட் 15, 1947...

கல்கத்தா: ராஜ்பவனின் கதவுகளை அகலத் திறந்து வைத்தார் மேற்கு வங்க கவர்னர் ராஜாஜி. சுதந்தரம் அடைந்த மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருந்த மக்கள் கூட்டம், நேற்றுவரை அன்னிய அதிகாரக் கேந்திரமாக இருந்த இடத்தினுள் நுழைந்து பார்த்து, விடுதலையை ருசித்தது!

நவகாளி: மகாத்மா காந்தி, தலைநகரிலிருந்து வெகு தொலைவில், அன்பையும், சகோதரத்துவத்தையும் வலியுறுத்தும் பணியில் ஈடுபட்டிருந்தார். ஹிந்து - முஸ்லிம் மனப்புண்களை ஆற்றும் முயற்சியிலிருந்தார்.

பஞ்சாப்: சுதந்தரத்தின் மகிழ்ச்சி ஒரு பக்கம் பொங்கினாலும் பிரிவினையின் துயரம் மறுபுறம் அழுத்திக் கொண்டிருந்தது.

தில்லி: இந்த உணர்ச்சிக் கலவையினூடே எதிர்காலம் பற்றிய நம்பிக்கை மட்டும் அத்தனை மனங்களிலும் நிரம்பியிருந்தது.

இன்று...? அந்த தினத்திலிருந்து ஐம்பது ஆண்டுகளைக் கடந்து வந்து விட்டோம். என்ன முன்னேற்றங்களைக் கண்டிருக்கிறோம்?

விவசாயம், தொழில், சேவைகள் பிரிவில் நிறைய வளர்ச்சி தெரிகிறது. சுதந்தரம் அடைந்தபோது ஐம்பது மில்லியன் டன்னாக இருந்த உணவு உற்பத்தி, இப்போது இருநூறு மில்லியன் டன்களைத் தொட்டிருக்கிறது. எஃகு, சிமெண்ட், மின்சாரம் போன்றவற்றின் உற்பத்தியும் பெருகியிருக்கிறது.

நாமே ராணுவ விமானங்களும் கப்பல்களும் நிர்மாணிக்க ஆரம்பித்து விட்டோம். சாலை கொள்ளாமல் வாகனங்கள், சுய தேவையைப் பூர்த்தி செய்தது போக, ஏற்றுமதி செய்கிற அளவுக்கு எஃகு உற்பத்தி.

பசுமைப் புரட்சியைத் தொடர்ந்து, வெண்மைப் புரட்சியும் நிகழ்த்திக் காட்டியிருக்கிறோம். பால், வெண்ணெய், நெய் போன்ற பொருட்கள் தேவைக்கு அதிகமாகவே கிடைக்கின்றன. காய்கறிகள், எண்ணெய் வித்துக்கள் விளைச்சலையும் பெருக்கியிருக்கிறோம்.

நுகர்பொருள் உற்பத்தி உச்சத்தைத் தொட்டிருக்கிறது. தொலைபேசி இணைப்புகளுக்குத் தேவை இன்னமும் இருக்கிறது என்றாலும் பல சிற்றூர்களும் கிராமங்களும் தொலைபேசி இணைப்பைப் பெற்றுவிட்டன என்பதில் நாம் பெருமை கொள்ளலாம். எல்லா ஊர்களிலும் டி.வி இருக்கிறது. பிற எலக்ட்ரானிக்

• ஓவியம்-நன்றி: ஆதிமூலம்

# கை கட்டிக் காத்திருக்கலாகாது!

சாதனங்களும் புழக்கத்துக்கு வந்து விட்டன. சாடிலைட் இணைப்பு மூலம் தொலைத் தொடர்பு கைவசமாகி விட்டது.

இவ்வளவு இருந்தும், நமது மொத்த ஜனத் தொகையில் நாற்பது சதவிகிதத்தினர் இன்னமும் ஏழைமையின் கொடுமையில் துவள்கிறார்கள். 1947-ல் முப்பது கோடியாக இருந்த ஜனத்தொகை நூறு கோடியைத் தொட்டிருக்கிறது. அன்று வறுமைக் கோட்டுக்குக் கீழே பத்துக் கோடி பேர் இருந்தார்களெனில் இன்று அதே இடத்துக்கு நாற்பது கோடிக்கும் மேற்பட்டவர்கள் போட்டி போடுகிறார்கள்.

ஜனத் தொகை பெருக்கத்தின் வேகத்துக்கு வளர்ச்சிப் பணிகளால் ஈடு கொடுக்க முடியவில்லை. முதலில் இந்தப் பெருகும் ஜனத் தொகைக்கு ஏற்ப அடிப்படை வசதிகளைப் பெருக்கியாக வேண்டிய கட்டாயத்திலிருக்கிறோம்.

நகரங்கள் நிரம்பி வழிகின்றன; போதுமான கவனம் செலுத்தத் தவறி விட்டோம். காந்திஜியின் பெயரை வாய்க்கு வாய் கூறிய தலைவர்கள் அவர் வலியுறுத்திய கிராம ராஜ்யத்தை அலட்சியப்படுத்தி விட்டார்கள்.

இன்னும் நெடுந்தூரம் சென்றால்தான் நாம் நெஞ்சு நிமிர்த்திப் பெருமை கொள்ளலாம் என்பது புரிகிறது.

ஆனால் அதை எப்படி சாதிப்பது?

இரண்டாம் உலக யுத்தத்தின்போது நொறுக்கப்பட்ட ஜப்பானும் ஜெர்மனியும் எவ்வாறு ஃபீனிக்ஸ் பறவைகளாக மீண்டு எழுந்தன? உலகின் முன்னணி நாடுகளாக இன்று எப்படி விளங்குகின்றன?

இரண்டாம் உலக யுத்தம் முடிந்த பிறகு, அமெரிக்க அரசு, நசிந்து போன நாடுகளுக்குப் பொருளாதார ரீதியில் உதவ முன்வந்தது. புனர் நிர்மாணப் பணிகள் விரைவாக நடைபெற கை கொடுக்கவே இந்த உதவி வழங்கப்பட்டது. ஆனால், இந்தியா அந்த சமயத்தில் அவ்வுதவியை ஏற்க மறுத்தது.

இப்போது.... தாராளமயமாக்கல் என்ற கொள்கை மாற்றம் பிறந்துள்ளதால் அமெரிக்கா முதலான அயல்நாடுகளின் முதலீட்டை ஏற்க நாம் தயாராயிருக்கிறோம்.

தாமதமாக வந்த இந்த ஞானோதயம் பலனளிக்க நாம் காத்திருப்பதைத் தவிர வேறு வழி இல்லை. வெறுமனே கை கட்டிக் கொண்டு காத்திருப்பதோ, 'நாடென்ன செய்தது நமக்கு என்று கேட்பதோ, இன்றைய சூழ்நிலையில் தேசத் துரோகம்! நாமென்ன செய்தோம். நாட்டுக்கு என ஆத்ம பரிசோதனை செய்து பார்ப்பதுடன் கடுமையான உழைப்பை முதலீடாக்க வேண்டும்.

**— வி. கோபாலன்**



''இருந்தாலும் நம்ம தலைவர் ரொம்ப மோசம்.''

''என்ன பண்ணாரு?''

''சந்தன வீரப்பனுக்கு காட்டுக்கு வெளியில இருந்தபடியே ஆதரவு தரப் போறதா அறிக்கை விட்டிருக்காரு.''

— பா. ஜெயக்குமார்

●●●●●●●●

*''தலைவர் ரொம்ப குழம்பிப் போயிருக்கார்!''*

*'' என்ன பிரச்னையாம்?''*

*''தம்மோட மூணு சம்சாரத்தில யாரை முதல்வர் ஆக்கிறது என்கிற பிரச்னையாம்!''*

*—ஜியெஸ்*



''என்ன, அந்த கிரிக்கெட் அணியோட இன்னொரு குழுவும் சேர்ந்து வந்திருக்கு?''

''தேவைப்பட்டா மழை வரணும்னு அவங்கதான் கூடி 'பிரார்த்தனை' செய்வாங்களாம்!''

— டி. அரவிந்த பகபதி

• தொடரும் பாரம்பரியம்: வாழ்த்து பெற்றவர்கள்.



நாலு நாள், இல்லையில்லை... ஆறு நாள் கல்யாணம்போல் சென்னையில் ஒரு விழா சமீபத்தில் நடந்தேறியது. பல முன்னணி கம்பெனிகளின் ஸ்பான்ஸர்ஷிப் உதவியுடன்தான்.... அந்த நிறுவனங்கள் வைத்த நம்பிக்கைக்கு முற்றிலும் பாத்திரமானது விழா நடத்திய அமைப்பு என்பதை நிறைவுநாள் நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டின.

"இந்தியாவையே இந்த இளைஞர்களிடம் ஒப்படைக்கலாம்; எதிர்காலம் குறித்துக் கவலைப்பட வேண்டாம்..." என்றார் வித்வான் வி.வி. சுப்ரமண்யம்.

"இந்தியா, இவர்களைப் போன்ற நல்லவர்கள் கைக்குப் போய்ச் சேருவதாகத் தெரியவில்லை..." என்று வருத்தத்துடன் 'ஜோக்' அடித்த இளையராஜா, அதோடு நிறுத்தவில்லை.... 'இந்தியா' என்று ஏன் எல்லை வகுக்க வேண்டும்? விரிந்து பரந்த உலகம் முழுக்க இருக்கிறதே... எல்லா இடங்களும் இவர்களுடையவைதான். எங்கெங்கும் இவர்கள் முத்திரை பதிப்பார்கள்" என்று வாழ்த்தினார். வாழ்த்துப் பெற்றவர்கள் - ஒய்.ஏ.சி.எம் இளைஞர்கள்.

ஒரு டஜன் ஆண்டுகளைக் கடந்து வந்துள்ளது ஒய்.ஏ.சி.எம் (Youth Association for Classical Music). அதன் ஆண்டு விழா நிறைவு நாளன்று தலைமை ஏற்றார் வயலின் வித்வான் வி.வி.எஸ்; சிறப்பு விருந்தினர்: இளையராஜா.

"இத்தனை ஆண்டுகளாக இப்படியொரு அமைப்பு இயங்கி வருவது எனக்குத் தெரியாது" என்று வியந்து பாராட்டினார் இளையராஜா.

ஒய்.ஏ.சி.எம் பற்றி அறிந்தவர்களுக்கு அதன் வளர்ச்சியும் பிரகாசமும் ஆச்சரியம் ஏற்படுத்தாது. காலத்தின் தேவையுணர்ந்து உருவான ஓர் அமைப்பின் இயல்பான வளர்ச்சி அது.

இளம் கர்னாடக இசைக் கலைஞர்களுக்குக் கச்சேரி வாய்ப்புகள் பெற்றுத் தரும் பிரதான நோக்கத்துடன் தொடங்கப்பட்டது, ஒய்.ஏ.சி.எம். விரைவிலேயே புதிய ரசிகர்களை உருவாக்குவதில் தீவிர கவனம் செலுத்த ஆரம்பித்தது இந்த அமைப்பு. இசையுலகில் ஸ்பான்ஸர்ஷிப் முறையை அறிமுகப்படுத்தியன் மூலம் கலைஞர்களுக்கு வாய்ப்புகளைப் பெருக்கி, ரசிகர்களுக்கும் பொருளாதார பளுவைக் குறைத்த பெருமை ஒய்.ஏ.சி.எம்மையே சேரும். 'த்வனி'

• குதூகலமான போட்டிகள்





# உற்சாகத்துக்கு வயது பன்னிரண்டு!

என்றொரு தனிச்சுற்று இதழும் நடத்துகிறார்கள்.

கடுமையான உழைப்பு மட்டுமின்றி திட்டமிடல், கட்டுக்கோப்பு, புதிய யோசனைகள், யுக்திகளுக்கு இடங்கொடுத்தல் போன்ற பல காரணங்கள் இந்த அமைப்பின் வளர்ச்சிக்குத் துணை புரிந்திருக்கின்றன. ஆகஸ்டில் இவர்கள் நடத்திவரும் ஆண்டு விழாக்களே இதற்கு சாட்சி. கச்சேரிகள் மட்டுமின்றி அனைவரும் பங்கேற்கக்கூடிய போட்டிகள், விவாதங்கள், அனுபவப் பகிர்தல் என்று ஒவ்வொரு வருடமும் புதுப்புது நிகழ்ச்சிகளை சுவை குன்றாமல் வழங்கி வருகிறார்கள். உதாரணமாக 'இசையினால் நற்பண்பு வளருமா?' என்பது இவ்வாண்டு talk show தலைப்பு. மூன்று - நான்கு தினங்கள் நீடிக்கும் விழா நிகழ்ச்சிகளின் போது ஒவ்வொரு நாளும் இரவோடிரவாக செய்தித் தொகுப்பு தயாரித்து, மறுநாளே விழா அரங்கில் கிடைக்கச் செய்து விடுகிறார்கள்.



இவ்வாண்டு, சுதந்தர தினப் பொன்விழாவையும் சேர்த்துக் கொண்டாடியது தனிச் சிறப்பு. 'வந்தே மாதரம்' என்று ரம்மியமான குழந்தைகள் குரலில் தொடங்கி, ஆலத்தூர் சகோதரர்கள் முதல் டி.கே. பட்டம்மாள் வரை, கர்நாடக இசையில் முத்திரை பதித்த கலைஞர்களின் ஒலிப் பதிவுகளைக் கொண்டு நூதனமான ஒலி-ஒளி நிகழ்ச்சியொன்றைத் தொகுத்து வழங்கினார்கள்

இந்த இசையுலக ஜாம்பவான்களை கௌரவிக்கும் வகையில், அவர்களுடைய பரம்பரையில் தொடரும் இன்றைய பாடகர்களையும் பாடகிகளையும் வாழ்த்தினார்கள். இந்த வரிசையில் செம்மங்குடி ஸ்ரீனிவாச அய்யர், மஹாராஜபுரம் விஸ்வநாத அய்யரின் வாரிசாக இடம் பெற, செம்மங்குடியின் பரம்பரையைத் தொடரும் கலைஞராக பி.எஸ். நாராயணசுவாமி அதே மேடையில் இடம் பெற்றதைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

தங்களின் இன்றைய நிலைக்கு ஒரு வலுவான பாரம்பரியமே அஸ்திவாரம் என்பதை உணர்ந்து வலியுறுத்துவது போல், இன்றைய முன்னணி இளம் கலைஞர்கள், சீனியர் வித்வான்களுக்குச் சால்வை போர்த்தி மரியாதை செய்ததைக் காண நிறைவாகவும் நெகிழ்ச்சியாகவும் இருந்தது. கலைச்செல்வம் என்பது ஒரு நாட்டின் நிகரில்லாச் செல்வம் என்பதை நினைவூட்டுவதாகவும் அமைந்தது.

— சுருதி கீர்த்தி

படங்கள்: யோகா




✉ அரியலூர் ரயில் விபத்தின் போது அன்றைய ரயில்வே அமைச்சர் லால்பகதூர் சாஸ்திரி தார்மீகப் பொறுப்பு ஏற்று ராஜினாமா செய்தார். ஆனால் அன்று துணை அமைச்சர் ஓ.வி. அழகேசன் ராஜினாமா செய்யவில்லை. உடனே தி.மு.க.வினர், "அழகேசா, ஆண்டது போதாதா? மக்கள் மாண்டது போதாதா?" என்று கோஷம் எழுப்பினர். இன்று அதே தி.மு.க., ஊழலின் மொத்த உருவான லல்லுவை மறைமுகமாகவும் அவரது மனைவி ஆட்சியை நேர்முகமாகவும் ஆதரிப்பதைப் பார்க்க "கருணாநிதியே! ஜெ. ஊழல் கசக்குதாம்; லல்லு ஊழல் இனிக்குதாம்!" என்று கோஷம் எழுப்பத் தோன்றுகிறது!

புதுதில்லி, சுதாமன்.

# ஜெ. ஊழல் கசக்குதாம்; லல்லு ஊழல் இனிக்குதாம்!

✉ "குழப்ப முன்னணி" தலையங்கம் முதல்வரின் இரட்டைச் செயல்பாட்டிற்கு ஒரு குட்டாகவும், 'கல்கி'யின் நடுநிலைக்கு ஒரு ஷொட்டாகவும் அமைந்திருந்தது பாராட்டுக்கள்!

செங்குன்றம், கே. ரமேஷ்ராமன்.

✉ கல்கியால்தான் இப்படிப்பட்ட கேள்விகளை கமலிடம் கேட்க முடியும். கமலால்தான் இப்படிப்பட்ட பதில்களையும் சொல்ல முடியும். பேட்டி 'டச்சிங்'-காக இருந்தது!

காவேரிப்பட்டணம், கே. சோமசேகர்.

✉ கல்கியின் சரமாரியான கேள்விகளும், கமலின் சளைக்காத பதிலும் இரண்டு வாரங்களாக எங்களை ஆக்கிரமித்து, அசத்தி விட்டது.

களஞ்சவேலாம்பட்டி, டி. அரவிந்த் பசுபதி.

✉ கமல்ஹாசன் பதில்கள் அனைத்தும் மழுப்பலாகத்தான் இருந்தன. சிற்பி உளியை வைத்துப் பாறை செதுக்குவதால் அருமையான சிலை உயிர்பெறுவதுபோல, உமது நிருபர் சாமர்த்தியமான கேள்விகளால் கமல்ஹாசனை நல்ல "பிரேமில்" கொண்டு வருவதற்கு கடும் முயற்சி செய்து இருப்பதை உணர முடிகிறது.

தென்குத்துபுதுநகர், தமிழரசி தேவசேனாபதி.

✉ உயிரை வாங்கும் உட்கட்சிப் பூசல்களுக்கு உடனடி 'வைத்தியம்' செய்யாவிட்டால்.. நாளை தி.மு.க. - த.மா.கா.வின் இரு கட்சிகளும் 'அறுவை' சிகிச்சை செய்ய வேண்டிய கட்டாயத்துக்கு ஆளாக நேரிடும்!

சேலம் - 2, சூர்யநிலா.

✉ சிரிப்புகளுக்கு, சிரிப்பவர்களின் படங்களைப் போட்டுப் புதுமை செய்திருந்தது என்னைக் கவர்ந்தது!

திருச்சி - 14, ராஜி ராதா.

✉ பல மொழி காதல் கோட்டைகள் பற்றி தெளிவாக எழுதியுள்ளதற்கு தொகுப்பாளரைப் பாராட்ட வேண்டும். திரைப்படங்களைப் பார்க்க முடியாவிடினும் படித்தது சுகமே..!

நாகூர், ஏ. காதர்.

✉ அமைதி வழிகள் ஆயிரம் இருக்க, பத்தாயிரம் பேர் கடப்பாரையுடன் சென்று கர்நாடக நீர்த் தேக்கத்தை இடித்தால் காவிரிப் பிரச்னை தீரும் என்று வன்முறைக்கு வாசல் திறந்து வைக்கும் முறை சரியல்ல! மத்திய அரசு நடுவர்மன்றத் தீர்ப்பை நிறைவேற்ற மனதிடத்தோடு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

ஏத்தாப்பூர், சண்முக சுந்தர வடிவேலு.

✉ மன இறுக்கம் பெண்களுக்கு மட்டுமல்ல, ஆண்களுக்கும் கைப் பகுதியில் நோயாக வடிவெடுக்கும் என்பது அனுபவ உண்மை. சரளமாக எழுத முடியாமல் மணிக்கட்டிலும், விரல்களிலும் ஏற்படும் முடக்கம், இறுக்கம் (writer's cramp) உண்மையில் மனதை அரிக்கும் ஏதோ கவலை, அச்சம், தளர்வு அல்லது அழுற்சியின் வெளிப்பாடான அடையாளம்தான் என்கிறார்கள் மருத்துவர்கள். அப்பிரச்னை தீர்ந்தால் அந்நோயும் விரைவில் குணமாகி விடுகிறது.

சிட்லபாக்கம், அ. ஷண்முக சுந்தரம்.

✉ ஒவ்வொரு பத்திரிகையும் பரபரப்புச் செய்திகளுக்காக நக்கீரன் கோபாலை சிறப்புப் பேட்டி எடுத்து வெளியிட்டு வரும் நேரத்தில் உள்ளத் தவிப்புடன் வளைய வரும் அவரது மனைவி விஜயலட்சுமியின் பேட்டியை வெளியிட்டிருந்தது ரொம்பவும் 'டச்'சிங்காக இருந்தது. சம்திங் ரியலி டிஃபரண்ட் வித் செண்டிமெண்ட்!

நாராயணபுரம், எஸ். வைத்தியநாதன்.



# என்றும் இளமையாய் இருப்பது எப்படி?

**நம்ம ஊரில், அழகையும் பாடி இமேஜையும் ஒண்ணா பார்க்கக் கற்றுக் கொள்ள வேண்டும். இது வேறு அது வேறல்ல!**

“குண்டாவது ஆசியாவிலுள்ள ஒரு பொது அம்சம். இதற்குப் பல காரணங்கள் சொல்லலாம். முக்கியமாக ஜெனடிக்ஸ், அதிகம் சாப்பிடுதல் மற்றும் கொஞ்சம் நோய்” என்று ஆரம்பித்த டாக்டர் ரமேஷ், ஒரு டயபடாலஜிஸ்ட்!

உணவு விஷயத்தில் கட்டுப்பாடுகள், டயட் என்றாலே இங்குள்ளவர்களுக்கு அலர்ஜி. அதைக் களைந்து, ஒவ்வொருவருக்கும் வேண்டிய கலோரிகளுக்கேற்ப உணவை வடிவமைத்துத் தருகிறார்.

“சின்ன வயகள்ள பலரை நாம் குண்டான

## இளமைப் போட்டி – 1

**இந்தக் கட்டுரைத் தொடரை விடாமல் படியுங்கள். வாரா வாரம் ஒரு போட்டி உண்டு. எளிமையான ஒரு கேள்வி ஒவ்வொரு வாரமும் கேட்கப்படும். (பதிலை, கட்டுரையிலிருந்தே எடுக்கலாம்!) பதில்களைக் கண்டுபிடித்துச் சேர்த்து வையுங்கள். பன்னிரெண்டு வார முடிவில் – தொடரின் கடைசிப் பகுதியுடன் ஒரு கூப்பன் வெளியாகும். விடைகளை அதில் எழுதி அனுப்புங்கள். சரியான விடைத் தொகுப்பாளருக்குப் பிரமாதமான பரிசுகள் காத்திருக்கின்றன. ரெடி, ஸ்டார்ட்!**

**இந்த வாரக் கேள்வி : என்றும் பதினாறாய் இருக்கும் எட்டெழுத்துக்காரர் யார்?**

வர்களாகப் பார்க்கிறோம். இதற்கு ஒரு காரணம் ஜெனடிக்ஸ் உடற்கூறமைப்பு. இருந்தாலும் அவர்களையும் ஓரளவுக்காவது ஒழுங்காக்கலாம். குழந்தையாக இருக்கும்போதே பெற்றோர்கள் புஷ்டியாக இருக்க வேண்டும் என்று நிறைய சத்துள்ள உணவைக் கொடுத்து உப்ப வைத்து விடுவதும் உண்டு. இது தப்பு. என்ன செரிக்குமோ, எவ்வளவு தேவையோ, அவ்வளவு மட்டுமே கொடுத்தால் போதும்!" என்கிறார்.

பெண்கள் குழந்தை பெற்றவுடனேயே உடல் பெருத்து விடுவதும் நாம் சாதாரணமாகப் பார்க்கும் ஒன்று. இதற்கு என்ன காரணம்?

"இதுக்கு முக்கிய காரணம் அவங்களேதான்! சிசேரியனோ, குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷனோ செஞ்சுகிட்டா கொஞ்ச நாளைக்கு வெயிட் தூக்கக் கூடாது. வெயிட் மட்டும்தான் தூக்கக் கூடாதே தவிர, மற்றபடி எல்லா வேலைகளையும் செய்யலாம். ஆனா நடைமுறை என்னன்னா, ஆபரேஷன் ஆனவுடனே, பெண்கள் ஒரு வேலையும் செய்வதில்லை. அவங்க பெற்றோரும் அல்லது மாமியார், மாமனார், கணவன் போன்றோரும் 'ஆபரேஷன் ஆன பொண்ணு'ன்னு உட்கார வெச்சு ஊட்டு ஊட்டுனு ஊட்டுவாங்க. அப்புறம் குண்டாகாமல் என்ன செய்வாங்க?"

இதைக் குறைக்க வழியே இல்லையா?

"எக்சர்சைஸ்தான் வைத்தியம். வீட்டுக்குள்ளேயே செய்யறமாதிரியான சிம்பிளான எக்சர்சைஸ் எல்லாம் உண்டு. அதை செஞ்சா இடுப்பு குறையும். உடம்பும் குறையும்.

"Obesity - அதாவது உடம்பு ஊதிப் போய், தொப்பை விழுவது ஆண்களுக்கும் நேர்வது தான. சரியான நேரத்துக்குச் சரியான உணவின்மை; அதிகப்படி உணவு; உடலுழைப்பின்மை இவையே இதற்குக் காரணம்."

ஆனால் நாம் பார்க்கும் வெளிநாட்டவர்கள் எல்லாம் ட்ரிம்மாக இருப்பது போல் தோன்றுகிறார்களே? அவர்களுக்கு இப்பிரச்னைகள் இல்லையா?

"உடற்கூறமைப்பும் பருமனுக்கு ஒரு காரணம் என்றேன் இல்லையா? ஆசியர்களின் உடற்கூறமைப்பு இப்படி சதை போடக் காரணமாயிருக்கிறது. மேலைநாட்டவர்களுக்கு இந்தப் பிரச்னை குறைவு.

ஆனால் இருக்கும் வசதிகளைக் கொண்டு, எப்படி ஆரோக்கியமாக இருக்க முடியும்?

"முதல்ல ஹெல்த் அவேர்னஸ் வேண்டும். நாம நல்லாயிருக்கணும்னா, அதுக்கு நாமதான் கவலைப்படணும். உடம்பு ஆரோக்கியமா இருந்தாத்தான், மனசு ஆரோக்கியமா இருக்கும். மனம் ஆரோக்கியமாக இருந்தால் வாழ்க்கையில் எல்லா விஷயங்களிலும் பிடிமானம் ஏற்படும். அப்புறமென்ன, எப்பவும் மார்க்கண்டேயன் மாதிரி இருக்கலாம்.

"ஆரோக்கியம்னாவே ருசியான உணவு வகைகளை திருப்தியாகச் சாப்பிட்டு, புஷ்டியாக, தளதளவென இருப்பதுன்னு நெனைக்கறாங்க. உடல் உழைப்புக்கேற்ற போதிய உணவுதான் சரி.

"மற்றொரு விஷயம், நம்முடைய கவனத்தில் வராதது. பாடி இமேஜ்! கண்ணாடியில் பார்க்கும்போது நாம் எப்படி இருக்கோம், எப்படி இருக்கணும்னு ஆசைப்படறோம்னு யோசிக்கணும். சின்ன வயசுல கண்டபடி இருப்பாங்க. ஒரு முப்பத்தஞ்சு வயசான பிறகுதான் தெரியும், தேவையில்லாத இடத்துல தேவையில்லாமல் சதை போட்டிருப்பது.

"நம்ம ஊரில், அழகையும் பாடி இமேஜையும் ஒண்ணா பார்க்கக் கற்றுக் கொள்ள வேண்டும். இது வேறு அது வேறல்ல! உலக அழகிப் போட்டியில் உயரத்துக்குத் தகுந்த எடை-பருமன் இருக்கிறவங்கதான் கலந்துக்க முடியுது. காரணம், அவங்க பாடி இமேஜ் முக்கியம் என்று கருதுவதுதான். அங்க குண்டானவங்களை அழகு லிஸ்ட்டுல சேர்த்துக்க மாட்டாங்க. நாம அப்படியில்லை. பருமனையும் அழகுன்னு ரசிக்கிறோம். இது மாறணும்" என்ற டாக்டர் ரமேஷிடம் ஒரு பொதுவான ஆரோக்கியமான உணவுப் பட்டியல் தரச் சொன்னபோது,

"பொதுவான டயட் தரமுடியாது. அது அவரவர் செய்கிற வேலைகளைப் பொறுத்து நபருக்கு நபர் வேறுபடும். இரண்டு விஷயங்களைக் குறைத்தால், கொஞ்சம் பலன் ஏற்படும். ஒன்று, நொறுக்குத் தீனி சாப்பிடுவது. இன்னொன்று, கூல்ட்ரிங்க்ஸ், சாக்லேட், கேக் என்று கொழுப்புச்சத்து நிறைந்தவற்றைத் தவிர்ப்பது!" என்றார்.

கூல்டிரிங்கும் கையுமாகக் காட்சியளிப்பது இளமைக்கு அடையாளம் என்று ஆகிவிட்டது. ஆனால், பதினெட்டில் இல்லாவிட்டாலும் இருபத்தெட்டிலாவது கொஞ்சம் கட்டுப்பாடு காட்டினால், முப்பத்தெட்டில் பாண்டுகளை அடிக்கடி ஆல்டரேஷனுக்கு அனுப்ப வேண்டாம்; ஆறு கஜத்தைக் கொண்டு அங்கங்கே தலைதூக்கும் 'எக்ஸ்ட்ரா ஃபிட்டிங்ஸை' மறைக்க கஷ்டப்பட வேண்டாம்.

சந்திப்பு: **துளசி**

# மருந்தில்லாத இன்னொரு நோய்!

ஆல்ஸெய்மார்ஸ் நோய். மிக பயங்கரமான நோய்களில் இதுவும் ஒன்று.

ஆங்கிலக் கால்வாயை நீந்திக் கடந்த முதல் ஆசியர் என்ற பெருமை கொண்டவர் மிஹிர் சென். இந்தியரான இவருக்குக் கடைசி காலத்தில் தமது சட்டையைப் போட்டுக் கொள்ளக் கூட மனைவியின் உதவி தேவைப் பட்டது. அந்த அளவுக்குக் கைநடுக்கம். இந்தியாவின் மிகச் சிறந்த தொலைதூர நீச்சல் வீரர் களில் ஒருவரான மிஹிர் சென்னுக்கு, தமது கடைசி மூன்று வருடங்களில், இதுவரை தாம் செய்த சாதனைகளில் எதுவுமே நினைவுக்கு வரவில்லை. குழறலான பேச்சு. உற்சாகமும் துள்ளலுமாக இருந்த இந்த நீச்சல் வீரர் இப்படி அடியோடு மாறிப் போனார். காரணம் இந்த நோய்.

நமக்குக் கூட ஞாபக மறதி என்பது அவ்வப்போது உண்டாகும்தான். ஆனால் ஏதாவது வாக்கியத்தை நாம் சொல்ல நினைக்கும்போது அதற்கான வார்த்தைகளை கோப்பதில் தடுமாற்றம் ஏற்பட்டால்? இப்படி எப்போதோ ஒரு முறையல்ல; அடிக்கடி உண்டாகிறது என்றால்? உடன் பிறந்தவர்களையோ குழந்தைகளையோ கூட அடையாளம் கண்டுபிடிக்க முடியாமல் போனால்? இப்படி ஒரு வேதனையான சூழலை உண்டு பண்ணும் அளவுக்கு சக்தி வாய்ந்தது இந்த ஆல்ஸெய்மார்ஸ் நோய். மூளையின் வழக்கமான செயல்பாட்டில் நாலில் ஒரு பங்கைக் கூட இது குறைத்துவிடலாம்.

இந்த நோய் மருத்துவர்களைப் பொருத்த வரை ஒரு பெரும் சவால். இதைக் கண்டுபிடிப்பது, சிகிச்சை அளிப்பது– இப்படி ஒவ்வொரு கட்டத்திலும் மருத்துவருக்கு இந்த நோய் இணறலை ஏற்படுத்துகிறது. புற்றுநோய் உட்பட பல நோய்களை ஆரம்பத்திலேயே கண்டுபிடித்தால் குணமாக்குவது சுலபம் என்பதுண்டு. ஆனால் ஆல்ஸெய்மார்ஸ் நோயைப் பொருத்தவரை அதை ஆரம்பத்திலேயே கண்டுபிடிப்பது என்பது கிட்டத்தட்ட சாத்தியமில்லை.

முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி ரீகன் இந்த நோயால் பாதிக்கப்பட்டது தெரிய வந்ததும் உலகம் முழுவதுமே இந்த நோய் பற்றி பேசப்பட்டது. ஆனாலும் இரண்டு ஆண்டுகளுக்கு முன்தான் இந்த நோய் தொடர்பான ஆராய்ச்சியில் ஒரு முன்னேற்றம் கிடைத்தது. மூளைப் பகுதியை ஆராயும் தொழில்நுட்பம் மிகவும் முன்னேறி வருவதால் இது சாத்தியமானது. "Apo-E4" என்ற உயிரணுதான் வில்லன் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆல்ஸெய்மார்ஸ் நோயால் பாதிக்கப்பட்டவர்களின் உடலின் இந்த உயிரணு இருக்கிறதாம். அதாவது யாருடைய உடலில் எல்லாம் இந்தக் குறிப்பிட்ட உயிரணு இருக்கிறதோ, வருங்காலத்தில் இந்த நோய் அவர்களைத் தாக்கலாம் என்று கண்டு பிடித்திருக்கிறார்கள். அதே சமயம் மேலே குறிப்பிட்ட



• மிஹிர் சென்

உயிரணு யாருடைய உடலில் இல்லையோ அவர்கள் இந்த நோய் தன்னைத் தாக்குமோ என்ற கவலை யில்லாமல் இருக்கலாம்.

ட்யூக் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த சில விஞ்ஞானிகள் ''நோயின் காரணத்தைப் புரிந்து கொண்டதால் இனி அதை அழிக்கும் மருந்தையும் கண்டுபிடிப்பது பெரிய காரியமல்ல'' என்று ஆராய்ச்சியில் தீவிரமாக இறங்கியிருக்கிறார்கள்.

— அருண் சரண்யா



# கன்னியராகி நிலவினில் ஆடி...

**இதுவரை...**

சுதந்தரப் போராட்ட வீரரான அனந்தாச்சாரி, தம் ஊரில் கெமிகல் தொழிற்சாலை கட்டுவதால் விபரீத விளைவுகள் ஏற்படும் என்று எச்சரிக்கை செய்கிறார். அவரது பேத்தி நர்மதா, தாத்தாவின் இந்தப் பணியில் தன் பங்கும் இருக்க வேண்டுமென்று விரும்புகிறாள். தொழிற்சாலை கட்டுமானப் பணியேற்ற எஞ்ஜினியர் பத்ரி நாராயணனைச் சந்திக்கும் போது தன் கருத்தையும் வெளியிடுகிறாள். அவளைப் பெண் பார்க்கத் திருவனந்தபுரத்திலிருந்து ஒரு வரன் வருகின்ற அதே நாளில், தொழிற்சாலை கட்டுவதை எதிர்க்கும் கூட்டமும் நடைபெற உள்ளது. தனது தோழி மீனாட்சியைச் சந்திக்கச் செல்லும் வழியில் பத்ரிநாராயணனைச் சந்திக்கிறாள் நர்மதா....

"ஹலோ!"

மீண்டும் இவன் ஹலோ. மீண்டும் இவன் முற்றுகை.

நர்மதா பத்ரியைக் கடந்து செல்வதா, நிற்பதா என்று யோசித்தாள்.

"சைக்கிள் பங்சரா?" பத்ரி வினயமாகக் கேட்டான்.

"இல்லே."

"பின்னே தள்ளிட்டுப் போறீங்களே?"

"ஐ லைக் இட்."

"விநோதமா இருக்கே."

அவளுக்குப் பற்றிக் கொண்டு வந்தது.

"உங்க கமெண்ட் வேணும்னு நான் கேக்கலியே."

"ஸாரி."

அவள் சைக்கிள் ஏறி அவனைக் கடந்து போய் விடலாம் என்று தோன்றியது. ஏன், உனக்குப் பயப்படுகிறேன் என்று காட்டவா?

"ஸாரி சொல்லியாச்சு இல்லே... வழி விடுங்கோ."

பத்ரி தலை குனிந்து நின்றான். ஒரு நிமிஷம். பின் தலை நிமிர்ந்தான்.

"ஒன் மினிட்."

அவள் புருவம் உயர்த்திப் பார்த்தாள்.

"இப்ப தற்செயலா ஒங்களைப் பாக்கலேன்னாலும் நாளைக்கு ஒங்க ஆத்துக்கே வந்திருப்பேன்."

நர்மதா அவன் கண்களைக் கவனித்தாள். அந்த இளம் பச்சை நிற விழிப்படலத்தில் ஒரு நேர்மை.

கோயில் சந்திப்பில் கவனிக்கத் தவறியது.

"என்ன விஷயமா?"

"மோகன்ராஜ் பத்தி நீங்க சொன்னேளே... எங்க எம்.டி.யை எச்சரிக்கை பண்ணச் சொல்லி..."

"ம்ம்ம்."



அவன் முகபாவத்தைக் கூர்ந்து கவனித்தான்.

"நேக்கும் அதுக்கும் சம்பந்தம் கிடையாது. நான் இன்னிக்குக் காலமேதான் பெங்களூர்லேருந்து வந்தேன்."

நர்மதாவின் பார்வை அவனைத் துருவியது.

"அஃப்கோர்ஸ். இந்த ஃபாக்டரி கன்ஸ்ட்ரக்ஷன் விஷயத்திலே நான் உறுதியான முடிவோட இருக்கேன். இருந்தாகணும். ஆனா இப்படி ஆள் வச்சு அடிச்சோ மிரட்டியோ காரியம் சாதிக்கறதிலே நேக்கு சம்மதமில்லே..."

## வையவன்

அவனுடைய ஒவ்வொரு வார்த்தையையும் அளப்பது போல் பார்த்தாள்.

"எதிர்ப்பு வந்தா நேருக்கு நேராச் சந்திக்கறதுதான் என் பிரின்ஸிபிள்!"

இன்னும் இவன் பேசட்டும்.

"நான் ஒங்களைக் கோவில்லே மீட் பண்ணப்ப இந்த ப்ராஜக்டோட நல்ல அம்சங்களை எடுத்துச் சொல்லணும்னுதான் சின்ஸியரா முயற்சி பண்ணினேன்."

"இதெல்லாம் ஒங்க எம்.டிட்டே சொல்ல வேண்டியது!" நர்மதா குறுக்கிட்டாள்.

அவன் புருவம் சுளித்தான். ஏதோ கசப்பை விழுங்கியதுபோல் அவன் தொண்டைக் குழி ஏறி இறங்கியது.

"ஆக்சுவலா... இதுவும் எங்க எம்.டி பண்ணின ப்ளான் இல்லே. ஃபாக்டரி கட்ட எதிர்ப்பு இருக்குன்னு ரெண்டு மூணு தோல் ஏற்றுமதியாளர்கள்கிட்டே அவர் பேசியிருக்காரு. அதையெல்லாம் நாங்க சமாளிச்சுக்கறோம்னு அவங்க சொல்லியிருக்காங்க... இப்படி நடக்கும்னு எங்க எம்.டியே எதிர்





"மேல்-மாடி காலியா இருக்கிறதாமே? வாடகைக்குக் கிடைக்குமா சார்....?"

"முதல்லே மேல்-மாடி இருக்கிற தா-ன்னு பார்த்துக்கிட்டு, அப்புறமா கேளு...!

- பெ. கலாசாமி

பார்க்கலே."

நர்மதா இடைமறித்தாள்.

"அந்த தொழிலதிபர்கள் யார்னு பேர் சொல்ல முடியுமா?"

அவன் இகைத்து விட்டான்.

"என்ன பண்ணப் போறீங்க? நான் சொல் லிடலாம். பலன் இருக்காது... அவங்க பின் னாலே நூறு பேர் நிப்பாங்க. கவர்மெண்டே நிக்கும். காலமே நிக்கும்."

"காலம்?"

"ஆமா... அதுக்கு எதைப்பத்தியும் கவலை யில்லே. நடக்கிற கொள்ளைகள்ளேயும் கொலைகள்ளேயும் இது அற்பம்னு தாண் டிடும்."

அவன் வெகு இயல்பாகப் பேசினான். நர்ம தாவின் மூக்கு துடித்தது.

"நீங்களும் இது சாதாரணம்ங்கறீங்க?"

"ஐ'ம் ஹெல்ப்லஸ்."

"நீங்க ஒரு சுயநலவாதி."

"இருக்கலாம். ஒங்க பார்வையிலே."

"நீங்க ஒரு கோழை."

"என்னவாவது சொல்லுங்கோ. பட் ஒன்திங். அதான் நெஜம். நான் ஒரு சின்னப் பல்' சக்கரம். நாலாபக்கமும் ராட்சத பல் சக்கரங்களுக்கு நடுவே நான் மாட்டி யிருக்கேன்."

அவள் சட்டென்று திரும்பி சாலை யோரத்தில் இயற்கையின் மௌன வசி கரத்தைச் சுட்டிக் காட்டினாள்.

இந்த மரம், விழுது, நெழல், பசுமை இதெல்லாம் நாளைக்கு இல்லாமப் போயி டணும்னா ஒங்களுக்கு ஒரு வருத்தம் வரலே?"

பத்ரி திரும்பிப் பார்த்துவிட்டு ஒரு வருத்த மான புன்னகை செய்தான்.

"ஜனங்க குடிக்கிற தண்ணி நாசமானா... அதனாலே விதவிதமான அபாயங்கள் வந்தா ஒங்களுக்கு வருத்தம் இருக்காது?"

"ஐ'ம் ஜஸ்ட் எ கன்ஸ்ட்ரக்ஷன் என்ஜினியர்?"

"நீங்க கட்டப்போற கட்டடத்திலே கெமி கல் பாய்ஸன்தான் உற்பத்தியாகப் போறது. அதுலே உங்களுக்குப் பொறுப்பில்லே?"

"ஸீ மிஸ் நர்மதா... ஒங்க தர்மாவேசம் நேக் குப் புரியறது. ஆனா இன்னொரு ஸைடை நீங்க பார்க்கலே!"

"என்ன?"

"மக்களுக்கு வேலை வாய்ப்பு. கை நிறையக் காசு... வாழ்க்கைத் தரம் உயரும். மொத் தத்திலே ஒரு பெரிய மாற்றம்... மம்மூத் சேஞ்ச் இருக்கும்."

"விவசாயி வயத்திலே அடி விழும். விளை நிலம் மலடாகும். குடிக்கிற தண்ணிக்கு வெலை தர வேண்டி வரும். தென்? நெறயக் கட்டடம், வாகனம், ஊழல்.... வன்முறை அதானே நெட் ரிஸல்ட்... அதான உங்க மம்மூத் சேஞ்ச்?"

"யூ காண்ட் ஹெல்ப் இட்!"

"இதே டயலாகை முடிஞ்ச வரைக்கும் இந்த உலகத்தை உருக்குலைச்சுட்டு அடுத்த தலைமுறைகிட்டே ஒப்படைக்கும்போது சொல்லிக்கலாம். வி காண்ட் ஹெல்ப் இட்!"

பத்ரி மௌனமாய் நின்றான்.

'தனக்கு இதில் சம்பந்தமில்லை' என்று அவன் பார்வையில் ஓர் ஒதுக்கம்.

"நீங்க என்னைக் குற்றம் சாட்டறேளா?"

"கை கட்டி வாய் மூடி சொந்த சுயநலம் பார்க்கற ஒவ்வொருத்தரும் குற்றவாளிதான். எது அழிஞ்சு எக்கேடு கெட்டா நேக்கென் னன்னு போறவா ஒவ்வொருத்தரும்..."

"மிஸ் நர்மதா..."

"இந்த கெமிகல் ஃபாக்டரியைக் கட்ட வரப் போற நீங்க, ஒரு மேஜர் குற்றவாளி."

அவன் முகம் சிவந்தது.

"இது ஒங்க ஊர் இல்லியே. இங்கே என்ன நாசம் நடந்தா உங்களை எப்படிப் பாதிக்கப் போறது? யூ வில் கோ. வேற ஒரு ப்ராஜக்ட் பார்த்துண்டு போயிடுவேள். மிஸ்டர் பத்ரி, இது எங்க ஊர்... இது அப்செஷன் இல்லே... ஒரு தவிப்பு... இதுக்குப் பாசம்னோ பற் றுன்னோ என்ன பேர் உண்டோ தெரியாது. பட் வி ஹாவ் இட். எங்க ஊரை எங்க ஜனங் களை இதிலேர்ந்து எப்படியாவது காப் பாத்திடணும்னு எங்களுக்கு ஒரு தின ஆவே சம் வர்றது. அண்ட் வி வில் ஸேவ் இட்..."

அவனை அவன் தன்னை மறந்து பார்த்தான்.

நர்மதாவின் ஈடுபாடும், உணர்ச்சி வேகமும் அவனை அயர்த்தின.

"நான் வர்றேன்."

அவள் சைக்கிள் ஏறினாள்.

மீனாட்சி வீட்டுக்குப் போகும்வரையில் அவள் சிந்தனை பத்ரியின் அயர்ந்து நின்ற தோற்றத்தையே வட்டமிட்டது.

தான் அதிக உணர்ச்சி வசப்பட்டு விட்டோமா? அவன் ஒரு வார்த்தைகூட மரியாதைக் குறைவாகப் பேசவில்லை.

சொல்லப் போனால் தன் கட்சியை மிகவும் நயமாகத்தான் - தன்னால் ஒன்றும் செய்ய இயலாது என்ற கையறு நிலையில்தான் சொன்னான்.

இந்த இரண்டாவது சந்திப்பில் பத்ரியைப் பற்றிய மதிப்பீடு தனக்குள் உயர்ந்திருப்பதை நர்மதா உணர்ந்தாள்.

ஓர் இளம் பெண்ணைப் பார்த்ததும் கண்ணிலும் முகத்திலும் ஒவ்வோர் ஆணிடம் வெளியாகும் ஒரு வழிசல் வெளிப்பாடு அவனிடமில்லை.

மரியாதைக்குரிய ஒரு கண்ணியம். இங்கிதம் குறையாத நேர்மை.

நர்மதா தனக்குள் ஏற்பட்டிருந்த அந்த மாற்றத்தை ஒரு வியப்போடு உணர்ந்தாள்.

மீனாட்சிக்கு ஒரே ஆச்சரியம். வாசலில் காய்ந்த கருவாட்டை வாரிக் கொண்டிருந்தவள் நிமிர்ந்து சிரித்தாள். அதற்குள் அவள் தாய் அஞ்சலை ஒரு ஸ்டூல் நாற்காலியைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்தாள்.

"இதெல்லாம் எதுக்கும்மா இப்படி கல் மேலேயே உக்கார்றேன்..." என் வார்னிஷ் அடித்த கம்பத்தின் கீழே உட்காரப் போனாள் நர்மதா.

"ஸ்டூல் சேர்லேயே ஒக்காரு. ஐயங்கார் வீட்டுப் பெண்ணை மீன்காரி தரையிலே குந்த வச்சுட்டான்னு எங்களுக்குத்தான் கெட்ட பேர் வரும்!"

நர்மதாவைப் பார்க்காமல் கருவாடு வாரிக் கொண்டே மீனாட்சி சொன்னாள்.

நர்மதா சிரித்துக்கொண்டே ஸ்டூலில் உட்கார்ந்தாள்.

''எங்கியோ மூணு மாசம் வெளியூர் போயிருந்தியாமே கொயந்தே! ஒம் மொகத்தைப் பாக்காம எனக்கு ஊரே சோண்ணு பூடிச்சு.''

வாய் நிறையப் பல்லோடு அஞ்சலை வெளிப்படுத்திய அந்த உணர்வு அடி நெஞ்சில் சில்லிட்டது.

''எனக்கும் அப்படித்தாம்மா இருந்தது! நான் போன ஊருக்குப் பக்கத்திலே மீன் பிடித் தொழில் நடக்கும். யாரைப் பார்த்தாலும் மீனாட்சி மொகமும் ஒங்க மொகமுமா ஒரு ஏக்கம் வரும்."

மீனாட்சி திரும்பாமல் வேலையில் ஈடுபட்டவாறே வெட்டினாள்.

''அதான் தெனமும் ஒரு லெட்டர் போட்டுட்டே."

"இன்னும் நீ அங்கியே நில்லு. ஒக்காந்து எழுதற அளவு டைம் இருந்திருந்தா இப்படி உங்கிட்ட பேச்சு கேக்க வேண்டி வந்திருக்காது.''

●●●● வர்த்தக வங்கிகள் அனைத்தும் ஒருநாள் இந்தியாவில் வேலை நிறுத்தம் செய்தால்... 'அப்படி என்ன இழப்பு ஏற்பட்டு விடப் போகிறது?' என்று அலட்சியம் கொண்டிருப்பவர்களுக்கு....



1) சுமார் 45 லட்சம் மனித நேரம் மதிப்பிழந்து வீணாகிறது!

2) ரூ1.12 ஆயிரம் கோடி சம்பளமாக மட்டும் வீணாகிறது.

3) ரூ. 17,000 கோடி முதல் ரூ.20,000 கோடி வரை மதிப்புள்ள 40 லட்சம் காசோலைகள் தேங்கும் நிலையும்...அன்னியச் செலவாணி இழப்பும்... வாடிக்கையாளர்களுக்கு எண்ணற்ற சிரமங்களும் ஏற்படுகின்றன.

பழங்கூர். மீரா. முருகன்,

நன்றி: இந்திய வங்கிகள் சங்கம்

"இவ கெடக்கா விடு கொயந்தே. நல்லாருக்கியா... அது போதும். நெனப்பு இருந்ததே அது போதும். ஆமாம்... ஏதோ மாப்பிள்ளை வரப்போறதா பேசிக்கினாங்களே..."

"ஆமாம்மா."

''இது நல்லபடியா அமையணும்மா!'... ஆத்தா சாமுண்டியம்மா நடத்தி வைப்பா. இரு ஒனக்கு குடிக்க ஏதாவது கொண்டு வர்றேன்."

அஞ்சலை இரும்பியதுமே மீனாட்சி எச்சரித்தாள்.

"ஏம்மா... அஞ்சலைம்மா... நீ பாட்டுக்கு டீ போடறேன்னு வெறகு அடுப்பை மூட்டி பொகை நாத்தம் புடிச்ச டீ வச்சுடப் போறே."

"ஐயோ எனக்குத் தெரியாதாமடீ... சிவராக இருந்திருந்தா ஒரு எளனியாவது வெட்டியிருப்பான்..."

"அம்மா... அம்மா எனக்கு ஒண்ணும் வாணாம்." அஞ்சலையை அவசரமாகத் தடுக்க முயன்றாள் நர்மதா.

"போகட்டும் விடுடீ!" என்றாள் மீனாட்சி.

பக்கத்திலிருந்த கொல்லுப்பட்டறையைத் திரும்பிப் பார்த்தாள் நர்மதா.

ஒரு பெரிய வண்டிச் சக்கரத்தைச் சட்டமடித்து நிறுத்தி, நீண்ட வார்ப்பட்டை மாட்டி துருத்தியருகே சுழலும் சிறு சக்கரத்தோடு இணைத்திருந்தது.

அரை நிஜாரும் முண்டா பனியனுமாக ஒரு பதினெட்டு வயதுப் பையன் அடிக்கடி திரும்பி நர்மதாவைப் பார்த்தவாறே மாங்கு மாங்கென்று சக்கரக் கைப்பிடியைத் தோள் வலிக்கச் சுற்றிக் கொண்டிருந்தான்.

துருத்தியின் வாய் முகத்தில் உலையின் அக்னி ஜ்வாலை சீறிச் சீறிச் சிவந்தது.

இரும்புப் பார்கள் இரண்டு உலையில் கனிந்த சிவப்பில் எக்களித்தன.

மீனாட்சியைப் பார்க்க வரும்போதெல்லாம் உலையும் கனலும் நர்மதாவை ஏனோ வெகுவாக ஈர்க்கும்.

"நிறுத்துடா" என்று கத்தினார் குத்துக் காலிட்டு உட்கார்ந்திருந்த கொல்லர்.

சக்கரம் நின்றது.

கனலும் இரும்புத் துண்டங்கள் அடி மேடைக்கு இடம் பெயர்ந்தன.

தயாராய் கையில் சம்மட்டியோடு நிற்கிற மத்திய வயசுக்காரர் ஒருவரைப் பார்வையிலே சமிக்ஞை செய்தார் கொல்லர்.

ம்ஹ்ம்... ம்ஹ்ம்... ம்ஹ்ம் என்று ஒரு தாள கதியோடு முனகிக் கொண்டே அவர் சம்மட்டி போட்டார்.

இரும்புப் பார்களின் மீது அடி விழ விழ சிவப்புக்கனல் நீண்டது.

மீனாட்சி கருவாடு வாரி முடித்து, பக்கத்திலிருந்த ஓலை கட்டிய குளியல் அறையில் சோப்பு போட்டு கை கழுவித் துண்டில் துடைத்தவாறே வந்தவள், இன்னும் நர்மதா கொல்லுப் பட்டறை சம்மட்டி வீச்சிலேயே லயித்திருப்பதைக் கவனித்தாள்.

"என்னடீ இருக்கு அந்த சம்மட்டி அடியிலே... எப்ப பார்த்தாலும் அதிலயே மூழ்கிப் போயிடறே."

"ரொம்ப இன்ட்ரஸ்டிங்கா இல்லே?"

'இரும்பு அடி வாங்கறதா?"

'இல்லே அது அடி வாங்கி கடப்பாறை ஆகிறது. ஆப்பு முளை ஆகிறது."

"தத்துவமா?" என்று கேலியாகக் கேட்டாள்.

"ஏ, மரமண்டை! இதில தத்துவம் எங்கே இருக்கு? உருவாக்கம்தான் இருக்கு."

"அவ்வளவு அடி வாங்க வேண்டியிருக்கு, உருவாகங்கறியா?"

"இதான் தத்துவம்" என்றாள் நர்மதா.

அதற்குள் அஞ்சலை ஒரு எவர்சில்வர் டபராவில் எதையோ கொண்டு வந்தாள்.

"என்னம்மா ஒன்னோட ஃபேமஸ் டீயா?" என்று கிண்டல் செய்தாள் மீனாட்சி.

"டீ இல்லேடி. சுக்குக் காப்பி"

"சர்க்கரையா போட்டீங்க?" நர்மதா கேட்டாள்.

"இல்லம்மா... ஒனக்கு வெல்லந்தானே பிடிக்கும்"

சுக்குக் காப்பி உண்மையிலே நன்றாயிருந்தது. தொண்டைக்கு இதமாக.

"மீன் வியாபாரம் எப்படியிருக்கும்மா?" என்று டபராவைத் திருப்பித் தந்தவாறே இயல்பாகக் கேட்டாள்.

"அது சொணங்கி ஒரு மாசமாவப் போவுது."

அஞ்சலை பெருமூச்செறிந்து விட்டு சொன்னாள். நர்மதாவுக்கு முகம் மாறியது.

"ஏம்மா?"

"நம்ம பாலேரி மீனுன்னா எம்மாந் துட்டு குடுத்தாலும் வாங்கித் துன்ற ஜனம், இப்ப பாலேரி மீனான்னு மொகம் சுளிக்குது."

"காரணம்?"

"தோல் ஷாப்பு கசண்டுலே மீனுங்க செத்துப் போவுது. ஒரு மாதிரி கசப்பு. இது ஒடம்புக்குக் கெடுதல்னு ஊர்ல பெரிய காப்ரா."

"அப்புறம்?"

"மீனாச்சியோட அப்பனும் அண்ணாத்தயும் பஸ் ஏறி தாண்டவனேரி போயி திரும்பி வர்றாங்க. பட்டா பட்டா பாக்கியம். சில சமயம் கெடைக்குது. சில சமயம் இல்லே."

"சரி அம்மா பொலம்ப ஆரம்பிச்சுட்டா, போகலாமா?" என்று அவளைக் கிளப்பினாள் மீனாட்சி.

சற்று நடந்தால் ஏரிக்கரை. அங்கே கரை பார்க்கும் புங்க மர நிழலில் ஒரு சுமைதாங்கி.

பள்ளிப் பருவம் தொட்டு மணிக் கணக்காகப் பேசி, கேலி கிண்டல், சாதி வேறுபாட்டு விமர்சனம் என்று எத்தனையோ புழுதி தாண்டி ஊரறிய உறுதிப்பட்ட அவர்கள் நட்பு அங்கேதான் வளர்ந்தது.

போய் உட்கார்ந்ததுமே நர்மதா சொன்னாள்.

"வெள்ளிக்கிழமை நீயும் வர்றே!"

"எதுக்கு?"

"கெமிகல் பாக்டரி எதிர்ப்புக் கூட்டத்திற்கு நான் வர்றேன், சரியா... நீயும் வர்றே."

கரையோரம் குதித்தோடிய அணில் கிக்கிக் கென்று ஆமோதித்தது.

(தொடரும்)

●● தமிழிலும் ஆங்கிலத்திலும் சுமார் பத்து சஞ்சிகைகள் வாங்குகிறேன். படித்துவிட்டு பழைய பேப்பராகப் போடுவதற்குப் பதில் ஒரு வாசகசாலைக்கு இலவசமாகத் தர விருப்பம்.

ஜி. ராமச்சந்திரன்,
45, அலுமேலுமங்காபுரம்,
சென்னை-4.

●● 1963ம் ஆண்டு என்னோடு ஆட்டையாம்பட்டி ''கிருஷ்ணா கேப்''பில் சரக்கு மாஸ்டராகப் பணியாற்றிய ஆப்த நண்பர் வி.என். சுப்பிரமணியம் தற்போது எங்கு இருக்கிறார் என்று தகவல் பெற விருப்பம்.

பி.எஸ். சுப்புரத்தினம்,
ஊராட்சி எழுத்தர்,
க. வெள்ளாளப்பட்டி
கல்குறிச்சி (அ)
நாமக்கல் - 637 402.



●● ஜான் ஸ்டீன் பெக் எழுதிய The Pearl, The Grapes of wrath தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருந்தால் அந்தப் புத்தகங்களைப் பெற ஆசைப்படுகிறேன்.

பெ. பாலசாமி,
19, ஓர்துவில்,
முத்தையால்பேட்டை,
புதுச்சேரி, 605 003.

●● தொழில் / வியாபாரம் தொடங்க பெண்களுக்கு இலவச ஆலோசனை வழங்குகிறோம்.

மைதிலி ரமேஷ்,
செயலாளர்,
தென்னிந்திய பெண்
தொழில் முனைவோர்
சங்கம்,
பேஸ்மெண்ட் - 9,
699, பூந்தமல்லி நெடுஞ்சாலை,
அமைந்தகரை, சென்னை - 600 029.

●● ஜெயகாமராஜ உடையார் எழுதிய Dattatreya; The Philosophy of Aesthitics; பாஸ்கர ராயாவின் கணபதி சகஸ்ரநாமம் பாஷ்யம் ஆகிய நூல்கள் தேவை.

ஆர். சுப்பிரமணியன்,
2/5 முதல் தெரு,
சுப்பிரமணிய நகர், சென்னை - 24.

●● 1957-58ல் கங்கைகொண்டானில் என்னுடன் "சாக்ரட்டீஸ்" நாடகத்தில் நடித்த நண்பர்களுடன் தொடர்பு கொள்ள விருப்பம்.

அ. பட்சிராஜன்,
4, சர்க்குலர் சாலை,
சென்னை -24.

●● அய்யாசாமி சாஸ்திரிகள் எழுதிய கான கதம்பம், பிரகத் குஜா தண்டகம், ஆர்யபாஷா போதினி ஆகிய புத்தகங்கள் இருக்குமானால் தகுந்த விலை தந்து பெற்றுக் கொள்கிறேன்.

கே.ஆர். மகாலிங்கம்,
36, பிராமண மேட்டுத் தெரு,
திருவையாறு 613 204.

●● ஆண்டுக்கு 24 சதம் நிரந்தர வருவாய் கிடைக்கும் தொழிலில் முதலீடு செய்ய ஆர்வமுள்ளவர் தொடர்பு கொள்க.

எஸ்.ஏ. திருஞானவேல்,
422, எஸ். கே.வி சாலை,
ஈரோடு - 9.

●● கவிஞர் பெ. ராசகோபால் இயற்றிய சிலேடைகள், சித்தரக் கவி, திருப்புகழ் - திருக்குறள் வெண்பா உரை என ஆயிரக் கணக்கான மரபுக் கவிதை தொகுப்பு உள்ளது. வெளியிட விரும்புவோர் தொடர்பு கொள்க.

இரவீந்திரன்,
B3/26, கைலாசபுரம்,
பாய்லர் புராஜெக்ட்,
திருச்சி - 620 014.

●● ஜெர்மன் ஷெப்பர்ட் நாய் இரண்டு வயதாகிறது. வளர்க்க முடியாமல் சிரமப்படுகிறேன். விருப்பம் உள்ளவர்கள் வாங்கி வளர்த்தால் மகிழ்வேன்.

ஆர்.
இராசேந்திரன்,
90B, எம்.ஜி. நகர்,
சிட்லபாக்கம்,
சென்னை 600 064.

# பாலம்

●● வால்மீகி ராமாயணம் - சமஸ்கிருதம் - கீதா பிரஸ், கோரக்பூர் வெளியீடு, விலைக்குத் தேவை.

கு. வேங்கடரமணி,
12/344, முகப்பேர் கிழக்கு,
சென்னை 600 050.

●● அஞ்சல் வழி அல்லது நேர்முகப் பயிற்சி மூலம் இயற்கை மருத்துவம் எங்கு பயிலலாம்? விவரம் தெரிவிக்கவும்.

மு. பூபாலன்,
மூஞ்சூர்பட்டு, வ.ஆ. மாவ.
632 057.

*(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி - தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது - ஆர்.)*

எழுதியிருக்கிறார், தம்மை ஆதரிக்கச் சொல்லி.

● சங்கர்தயாள் சர்மாவுக்கு, முதலில் ஒதுக்கப்பட்ட வீடு நெ.1, தியாகராஜ் சாலை. ஆனால் அதில் குடியிருக்கும், முன்னாள் அமைச்சர் தினேஷ் சிங்கின் மகள் ரத்னகுமாரி எம்.பி. அதைக் காலிசெய்து தர மறுக்கவே, 23 சப்தர்ஜங் சாலை வீடு அவருக்கு ஒதுக்கப்பட்டது. இதில் முதலில் குடியிருந்த மகாராஷ்டிர முன்னாள் அமைச்சர் சுஷில் குமார் ஷிண்டே, அந்த வீட்டில் உள்ள தோட்டத்தைச் செப்பனிட்டு, புல்வெளி உருவாக்கி, பாழடைந்து கிடந்த அந்த பங்களாவைப் பளபள என்று ஆக்கி வைத்திருந்தார். சர்மாவுக்கு ஏதோ கொஞ்சம்



# கலைஞர், நாயுடுமேல் பர்னாலா கோபம்!

தமது மகளின் திருமணத்தில், தேவே கௌடாவுடன் நீண்ட நேரம் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார் சி.பி.ஐ. முன்னாள் இயக்குநர் ஜோகிந்தர் சிங். ஏராளமான ஜனதாதள எம்.பிக்களும், உளவுத்துறை அதிகாரிகளும், தெலுங்கு தேசக் கட்சி எம்.பிக்களும், ஜோகிந்தர் சிங்குடன் உற்சாகமாகப் பேசினார்கள். அதற்கு என்ன காரணமாக இருக்கும் என்று பலரும் மண்டையைப் போட்டுக் குடைந்து கொண்டிருக்கிறார்கள்.

● சுர்ஜித்சிங் பர்னாலா, தமக்கு துணை ஜனாதிபதி பதவி கிடைக்கும் என்று ரொம்பவும் எதிர்பார்த்தார். அதிலும், சந்திரபாபு நாயுடுவும், கலைஞரும் அவருக்குள் ஆசையை அதிகமாகவே தூண்டிவிட்டிருந்தனர். கடைசியில் கைகழுவி விட்டார்கள் இரண்டு பேருமே. அதனால் பர்னாலாவுக்கு ஏகக் கோபம். அவருடைய சுயசரிதைப் பிரதி ஒன்றுடன், எம்.பிக்கள் எல்லாருக்கும், ஒரு தனிப்பட்ட கடிதமும்

அதிர்ஷ்டம் இருந்தது! இருந்தாலும் அடிக்கடி மின்சாரம் போய் விடுகிறது. அவருடைய நீண்ட நாள் உதவியாளர் கஷ்யப், ஓடிப்போய் மெழுகுவர்த்தியைத் தேடி எடுத்து, ஏற்றிக் கொண்டு வருவது சர்வசகஜமாகி விட்டது. ஜெனரேட்டர்கள் கிடையாது. மின்சாரம் போய்விட்டால், பாட்டரி இயங்கி விளக்குகள் எரிய, சாதாரண 'இன்வெர்ட்டர்' கூட முன்னாள் ஜனாதிபதி வீட்டில் இல்லை!

● ஆகஸ்ட் 16-ஆம் தேதி, பெட்ரோலியப் பொருட்களின் விலை உயர்வை பிரதமர் அறிவிக்கக்கூடும். மத்திய அரசின் குழு ஒன்று, பெட்ரோலியப்



• சர்மா

பொருட்களை விற்பனை செய்யும் வியாபாரிகளுக்கு கமிஷன் தொகையை நிறையவே அதிகரித்திருக்கிறது.

● உத்தரகாண்ட் மாநில ஆதரவாளர்கள் கூட்டம் ஒன்றில் பேச ஒப்புக் கொண்ட தேவேகௌடா, கூட்டம் ஆரம்பித்து வெகு நேரம் ஆகியும் வந்து சேரவில்லை. குஜராத் முதல்வர் வாகேலாவும், மத்திய அமைச்சர் சத்பால் மகராஜும், இனி காத்திருக்க முடியாது என்று கூட்டத்தைத் தொடங்கச் சொன்னார்கள். வேறு பொதுக் கூட்டங்களுக்குப் போக வேண்டும் என்று அவசரப் பட்டார்கள். ஆனால் தேவேகௌடா பிரதமராக இருந்தபோது, அவருடைய தரிசனத்துக்காக இவர்கள் மணிக்கணக்காகக் காத்திருந்தது உண்டு!

● 'நாட்டைக் கொள்ளை அடித்து ஆயிரம் கோடி ரூபாய் சேர்த்து வைத்து விட்டால், ஐந்து நட்சத்திர ஓட்டலில் தங்குகிற மாதிரி மரியாதையும் உபசாரமும் கிடைக்கிறது!' என்று ஜார்ஜ் பெர்னாண்டஸ் குத்திக்காட்டி இருக்கிறார் லாலுவை. லாலு பிரசாத் யாதவ் இப்போது ஆஸ்பத்திரியில் என்றாலும் முன்பு பீகார் மிலிடரி போலீஸின் நவீன கெஸ்ட் ஹவுசில் ஹாய்யாக இருந்தார் அல்லவா? அதனால்தான்.

● ஹாக்கி நேஷனல் கோச் பகத்சிங், தன்ராஜ் பிள்ளையைக் குழுவில் சேர்க்காததற்காக, படுகோபமாக இருக்கிறார். 'நன்றாக ஆடுபவர்களை எல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டால் எப்படித்தான் ஜெயிப்பது?' என்று குமுறி இருக்கிறார். கிரிக்கெட் ஆட்டக்காரர்களைத் தேர்வு செய்வதில் மட்டும்தான் அரசியல் என்றில்லை. ஹாக்கியும் அப்படித்தான் இருக்கிறது!

● சூப்பர் போலீஸ் அதிகாரி கே.பி.எஸ். கில் எழுதியிருக்கும் சுயசரிதை, தில்லியில் வெளியாகப் போகிறது. பல திடுக்கிடும் தகவல்கள் இதில் சொல்லப்பட்டிருக்கிறதாம். அகாலிகளால் தீவிரவாதிகளை அடக்கியாள முடியவில்லை என்று அதில் குற்றம்சாட்டியிருக்கிறார் கில்.

● தேசிய குற்றப் பதிவு பீரோவின் புள்ளி விவரப்படி, தில்லியில்தான் அதிக அளவு குற்றங்கள் நடக்கின்றன. அதிலும் குழந்தைகளைக் கடத்திக் கொண்டு போகிற எண்ணிக்கையில் தில்லி முதலிடம் வகிக்கிறதாம்.

— நியூஸ்வாலா



## 'சோனி'யிலிருந்து ஒரு 'புஷ்டி'!

சினிமாப் பாடல்கள் அல்லாத, ஏ.ஆர் ரகுமானின் முதல் தனி ஆல்பம் சுதந்தரப் பொன்விழாவை ஒட்டி வெளிவருகிறது. பெயர்: வந்தே மாதரம். அத்தனையும் தேசபக்திப்பாடல்கள். ரகுமானின் ஆஸ்தானக் குரல் குயில்கள் தவிரவும் இந்த ஆல்பத்தில் இரண்டு ஸ்பெஷல் குரல்கள். 1. ரகுமான், 2. பாகிஸ்தானியப் பாடகர் நஸ்ரத் ஃபதே அலிகான்.

ஆடியோ தவிர வீடியோ ஆல்பமாகவும் சுதந்தர தினத்தன்று உலகமெங்கும் வெளியாகப் போகிற ரகுமானின் இந்த ஆல்பத்தில் அவரது பழைய சினிமாப்பாடல்களின் சாயல் ஆங்காங்கே தெரிவதைத் தவிர்த்திருக்க வேண்டும். பாடிப்பாடிப் பழக்கப்பட்டுவிட்ட பக்கிம்சந்திரரின் 'வந்தே மாதரம்' பாடலுக்கு அதே தேஷ் ராகத்தில்- அதே ட்யூன் தான் என்றபோதும்- முற்றிலும் நூதனமான, சிலிர்ப்பூட்டும் பரிணாமம் தந்திருக்கும் ரகுமான் இந்தப் பழைய சரக்கைச் சேர்த்திருப்பதை மட்டும் தவிர்த்திருக்கலாம் என்று தோன்றியது, சாம்பிள் கேட்டபோது

லண்டனில் ரெக்கார்டிங், காஷ்மீர் முதல் கன்யாகுமரி வரை வீடியோ ஷூட்டிங் என்று பிரும்மாண்டத்தில் 'புஷ்டி'யாக உருவாகியிருக்கும் இந்த ஆல்பத்தை வெளியிட்டிருப்பது 'சோனி.'

- கிச்சா

# வெளிச்சத்தின் விலாசம் - 19

செல்வந்தரான ஒரு தந்தைக்கு இரண்டு மக்கள் இருந்தார்கள். கண்ணுக்கெட்டிய தூரம் வரை நிலபுலன்கள்; எண்ணிமாளாத காலி கன்றுகள் என்று அவர் கொடிகட்டி வாழ்ந்தார். அந்தப் பிரதேசத்தில் பார்க்கும் இடமெல்லாம் அவரது சொத்துக்களே நிறைந்திருந்தன. இந்தச் செல் வந்தருக்கு இரண்டு மக்கள். இருவருமே தந்தை சொல் தவறாக தனையர்கள்.

தொடக்கத்தில் தந்தைக்குப் பணிந்து பயந்து வாழ்ந்திருந்த இருவரில் இளையவனின் நடத்தை நாளாக நாளாக வேறுபட ஆரம்பித்தது. தந்தையின் தோட்டந் துறவுகளில் மேற்பார்வைப் பணியை மாத்திரமே, அதிலும் எப்போதோ ஒருமுறை செய்து வந்த இளைய மகன் எதற்காக இப்படி வியர்வை சிந்த உழைக்க வேண்டும் என்று தனது நண்பர்களிடம் புலம்ப ஆரம்பித் தான். நண்பர்களோ நற்புத்தி சொல்லுகிறவர்களாக இல்லை. "உன் தந்தை உன்னை மாத்திரம்தான் வேலை வாங்குகிறார்" என்று ஒருவன். "நீ படுகிற பாட்டுக்கு உன்



வலம்புரி ஜான்

# ஊதாரிப் பிள்ளை உவமை ஆனான்



தந்தை உன்னைப் பெரிதாக ஒன்றும் பாராட்டுவதில்லை; சும்மா இருக்கிற உன் அண்ணனைக் கவனிப்பதில் ஆயிரத்தில் ஒரு மடங்கு கூட உன்னைக் கவனிப்பது இல்லை" என்றெல்லாம் ஒருவன். "எவ்வளவு நான்தான் வயதான இந்தக் கிழத்திற்கு அடிமையைப் போல நீ நடந்து கொள்ளுவாய்?" என்று வேறு ஒருவன்.

இப்படியே ஒவ்வொரு நண்பராக இளையவனுக்குத் தூபதீபம் காட்டினர். அவனது மனத்தில் மூண்டெழுந்த வெறுப்பு நெருப்பில் முடிந்த வரை ஆளுக்கொரு கை நெய்யை வாரி இறைத்தனர். இறுதியாக இளையவனின் மனத்தில் பெருத்த மாறுதல்கள் உண்டாயின. அவன் இப்போதெல்லாம் முன்பு மாதிரி இல்லை. வயல் களத்திற்குத் தந்தையார் வருகிற போது எழுந்து நின்று எப்போதும் வணக்கம் செலுத்துகிற இளையவன் இப்போது உட்கார்ந்து கொள்ள ஆரம்பித்தான். இரண்டொரு வாரங்களுக்குப் பிறகு காலுக்கு மேல் கால் போட்டுக் கொண்டான். தந்தையார் இதைப் பெரிதுபடுத்திக் கொள்ளவில்லை; இளையவனும் இதுதான் சாக்கு என்று தந்தையை அவமதிப்புச் செய்வதையே தனது அன்றாட நடவடிக்கையாக்கிக் கொண்டான்.

ஒரு நாள் அச்சத்தை அறவே தூக்கி எறிந்து விட்டு இளையவன் தந்தையிடம் வந்தான். வந்ததும் வராததுமாக "தந்தையே! நான் உங்களுக்கு உழைத்துக் கொட்டியது போதும்; இனி ஒரு போதும் ஏமாறமாட்டேன்; உடனே சொத்தில் எனக்கு உரிய பங்கினைப் பிரித்துக் கொடுத்து விடுங்கள்" என்றான். தனது தலையில் ஆயிரம் இடிகள் அகலக் கால் வைத்து இறங்கியது போன்று உணர்ந்தார் தந்தை. அழுதார்; அரற்றினார். அருமை மகனிடம் எவ்வளவோ எடுத்துச் சொன்னார். வேண்டாம் இந்த விபரீதம் என்று இளையவனிடம் கெஞ்சக் கெஞ்ச அவன் தந்தையைப் பாதம் தாங்குகிற படிக்கல் என்று நினைத்துக் கொண்டான். ஆகவே கண்டிப்பாக சொத்தைப் பிரித்துத் தந்து தான் ஆக வேண்டும் என்று இளையவன் உறுதியாகச் சொல்லவிட்டான்.

ஒரு வாரம் பொறுத்தார்; இரண்டாவது வாரம் பொறுத்தார் தந்தையார். வேறு வழியே இல்லாமல் இறுதியாக இளையவனுக்கு உரிய பங்கைப் பிரித்துக் கொடுத்தார். இளையவன் மேற்கொண்டும் தாமதம் செய்யாமல், தனது பங்கினை விற்றுக் காசாக்கிக் கொண்டு, தூர தேசம் புறப்பட்டான். பண்ணைக் களத்திலிருந்து இளையவன் புறப்பட்ட அன்றைக்கு அவன் தூரத்தில் மறைந்து புள்ளியாகிற வரைக்கும் தந்தையாரும், மூத்த மகனும் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். இறுதியாக இளையவன் ஒரு புள்ளியாய் ஒடிந்து ஒடுங்கிப் போனான். பெரியவரின் கண்களிலும் அதைப் போலவே மூத்தவனின் கண்களிலும் கண்ணீர் வாய்க்கால் வெட்டியிருந்தது.

வெளி நாட்டிற்குச் சென்ற இளையவன் கையில் நிரம்பப் பணம் இருப்பதைப் பார்த்த நண்பர்கள் எண்ணிக்கையில் அதிகமாயினர். இரவு பகலாக இளையவனைச் சுற்றியே அவர்கள் ஆட்டபாட்டம் நடத்தினர். குடி, கூத்து, கும்மாளம் என்று இளையவனின் பணத்தை அவர்கள் கரைத்தனர். இரண்டு மூன்று ஆண்டுகளில் இளையவனின் பண மெல்லாம் கரைந்து காணமற் போனது. அந்த நேரம் பார்த்து அந்த நாட்டில் பெரும் பஞ்சம் வந்தது.

இளையவன் அன்னிய நாட்டில் மாட்டிக் கொண்டதால் அவனுக்கு இரங்குவோர் இல் லாமல் போனார்கள். ஆகவே கையில் காசில் லாத நிலையில் இளையவன் இரங்கத்தக்க பொருளானான். ஊரெல்லாம் தேடி அலைந் தும் அவனுக்கு உணவிடுவார் எவரும் இல்லை. வேலை கேட்டு அலைந்தான். எத்தனையோ இடங்களில் வேலை தேடி அலைந்தும் கிடைக் காத காரணத்தால் கடைசியாக ஒரு பண்ணைக் காரனிடம் பன்றிகளை மேய்க்கப் போனான். நாட்டில் கடும் பஞ்சம் நிலவியதால் பன்றி களுக்கே தவிடில்லாத சூழ்நிலை உண்டானது. ஆகவே இளையவன் பல நாட்கள் பட்டினி கிடந்தான். இந்தச் சூழ்நிலையில் இளையவன் சில நாட்கள் பன்றிகளோடு போட்டி போட்டு அவைகளின் உணவைப் பறித்து பங்கு வைத் துக் கொண்டான்.

இப்போது இளையவன், தனது தந்தையின் வீட்டில் தானிருந்த போது எவ்வளவு மகிழ்ச்சி யாக வாழ்ந்தேன்; கால் பிடிக்கவும் கை பிடிக் கவுமாக எத்தனை வேலையாட்கள் இருந்தனர் என்றெல்லாம் நினைத்து நினைத்து குமுறிக் குமுறி அழுதான். பன்றிகளுக்கு வைக்கப்படுகிற உணவு கூட தனக்குக் கிடைக்காத சூழ்நிலை வந்து விட்டதே என்று வருந்தினான். அழுது அழுது அவனது கண்கள் அந்திவானமாயின. இப்போது இளையவன் இரவும் பகலும் அவனது தந்தையையே எண்ணினான். தந்தை யின் இல்லத்தில் தான் எவ்வாறு வசதியாக வாழ்ந்தோம் என்றும் எண்ணினான். இறுதி யாக ஆண்டவா என்னை மன்னித்து விடு! எனது பாவங்களை மன்னித்துவிடு என்று கரைந்து முட்டி மோதி அழுதான். பிறகு தனது கந்தல் துணிகளை அள்ளிக் கொண்டு தந்தை யின் நாட்டை நோக்கி நடந்தான்.

பல நாட்களுக்குப் பிறகு அந்த நாட்டை அடைந்ததோடு பட்டினியும், பசியுமாக அவனது தந்தை வீட்டை அடைந்தான். அவனது விருத்தாப்பியரான தந்தையோ தனது மகன் எப்போது வருவான் என்று ஏங்கிய படியே இருந்தார். தனது மகனை எதிர்பார்த்து எதிர்பார்த்து மன வேதனையினால் அவர் கொஞ்சம் கொஞ்சமாக அழிந்து கொண்டிருந் தார். இளையமகன் இல்லத்தின் எல்லையில் வரும்போதே ஓர் இளைஞன், அதிலும் பஞ் சத்தில் அடிபட்ட பாவப்பட்ட ஒரு இளைஞன் தன்னைச் சந்திக்க வருகிறான் என்றுதான் அவர் அறிந்து கொண்டாரே தவிர, தன் மகன் தான் என்பதை அவர் அறிந்து கொள்ள வில்லை. அந்த அளவிற்கு அவரது கண்களின் ஒளி பறிக்கப்பட்டிருந்தது. ஒளியாயிருந்த இளைய மகன்தான் அவரிடமிருந்து எப் போதோ பிரிந்துவிட்டானே! இந்த நிலையில் பெரியவரின் வேலைக்காரர்களும், ஊழியர் களும் உங்களது இளைய மகன்தான் வரு கிறான் என்பதை அவருக்கு உறுதிப்படுத்தி னார்கள். இதயம் அவருக்குள் ஒரு கணம் இளைப்பாறி விட்டு மீண்டும் உட்கார்ந்து கொண்டே ஓட ஆரம்பித்தது.

இளையவன் ஓடி வந்து தந்தையின் கால் களில் விழுந்தான். "அப்பா! பிதாவே! உங்களுக் கும் கடவுளுக்கும் எதிராகப் பாவம் செய்தேன். நீங்கள் சொன்னதைக் கேட்காமல் தங்கள் சொத்தை அழித்து ஒன்றுமில்லாமல் வந்து நிற் கிறேன். உங்கள் அடிமைகளில் ஒருவராகவா வது என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று அழுதான். அதற்கு அந்தத் தந்தையானவர், "மகனே! நீ பாவம் செய்திருக்கலாம்; ஆனால் உன்னை மன்னிப்பதுதான் தகுதியும் நீதியும் ஆகும். நீ ஏறத்தாழ இறந்து போனவன்; இன்று நீ உயிர் பெற்றிருக்கிறாய். ஆகவே நீ உயிர்த்த திருநாளை நான் மகிழ்ச்சியோடு கொண்டாட

## ஒன் :பைன் டே

வெளிகிரகவாசிகள், டினோசர், மலைப் பாம்பு என்றெல்லாம் திரையில் பயம் காட்டிக் கொண்டிருக்கும்போது வெளிவந்திருக்கும் மாறுபட்ட படம். நாற்காலி நுனியில் உட்காருப வர்களைக் கூட பின்னுக்குத் தள்ளிப் புன்ன கைக்க வைக்கும் குடும்பக் கதை!

ஹீரோ ஒரு பிரபல நாளிதழின் சிறப்பு நிருபர். அவனது முன்னாள் மனைவி "நம் குழந்தையை ஒரு வாரம் நீ வைத்துக் கொள். என் புதுக் கணவர் வாசலில் காரில் காத்திருக்கிறார். நாங்கள் தேனிலவுக்குச் செல்ல வேண்டும்" என்று ஆறு வயது மகனை ஹீரோவிடம் விட்டுச் செல்கிறாள். (அடடா, அமெரிக்கா!)

ஹீரோயினும் விவாகரத்து செய்தவள். பிரபி யான ஆர்கிடெக்ட். தன் ஐந்து வயது மகளைத் தனியே வளர்க்க வேண்டிய கட்டாயம் அவ ளுக்கு.

குறிப்பிட்ட தினத்தில் இருவராலும் தங்கள் குழந்தைகளை எந்த இடத்திலும் ஒப்படைக்க முடியாத சூழல். அதே சமயம் தொழில் முறை

யிலும் அன்று பிஸியான எங்கேஜ்மெண்ட்ஸ். தற்செயலாக சந்திக்கும் இந்த இருவரும் முறை வைத்துக் கொண்டு இரு குழந்தைகளையும் பார்த்துக் கொள்ள முடிவெடுக்கிறார்கள். அந்த 'ஒன் ஃபைன் டே'வில் நடக்கும் ரகளைகள்தான் படம்.



மூக்கில் கோலிக் குண்டை போட்டுக் கொண்ட சிறுவன், கூட்டத்தில் தொலைந்து விடும் சிறுமி என்றெல்லாம் கதை நகர்ந்தாலும் குழந்தைகளின் கொட்டங்களை விட அவர்களால் அந்தப் பெற்றோருக்கு ஏற்படும் டென்ஷன்கள்தான் படத்தில் ஹைலைட்.

நினைத்து நினைத்துப் பெய்யும் மழையில் நனையும் அகலக்குறைவான தெருக்கள், கொச கொசவென்று ஒழுங்கில்லாமல் நகரும் மக்கள் - நியூயார்க் நகரம் மேக்கப் இல்லாமல் காட்டப்படுகிறது. படம் பார்க்கும் பெரும்பாலான நேரம் புன்னகைக்கிறோம். சூழல்களை இன்னும் கற்பனை வளத்தோடு சிந்தித்து வெடிச் சிரிப்பு தோன்ற வைத்திருக்கலாமே என்ற எண்ணம் எழுவதைத் தடுக்க முடியவில்லை.

மனிதத்தனமும், வழிசலுமாக வரும் ஹீரோ ஜார்ஜ் க்ளூனியும், கம்பீரத்தோடு சூழல்களை சந்திக்க முயலும் நாயகி மிஷெல்லேயும் பொருத்தமாக நடித்திருக்கிறார்கள்.

நாள் முழுதும், தன் தொழிலின் காரணமாக மகனை அலட்சியம் செய்ய வேண்டிய சூழலில் உள்ள கதாநாயகி, இறுதிக் காட்சிகளில் "சாரி, என் மகனோடு இருக்க வேண்டிய நேரமிது. இனி அவன்தான் என் முதல் சாய்ஸ்" என்று கூறுவது உருக்கம்.

— ஸ்ரீ.

வேண்டாமா?" என்று கேட்டுவிட்டு கொழுத்த ஆட்டுக்குட்டிகளை அடித்து விருந்து படைக்குமாறு உத்தரவிட்டார். வீடு முழுவதும், இல்லத்தின் தொடக்கம் முதற் கொண்டு செடிகொடிகளைப் பறித்து வந்து வேலைக்காரர்கள் தோரணம் கட்டினார்கள். "முதல் தரமான ஆடையைக் கொண்டு வந்து இவனுக்கு உடுத்துங்கள்; இவனுடைய கைக்கு மோதிரத்தையும், காலுக்கு மிதியடியையும் போடுங்கள்; இந்த நாளை மகிழ்ச்சியோடும் மன நிறைவோடும் கொண்டாடுங்கள்" என்று பெரியவர் உத்தரவிட்டார். அவ்வாறே அவரது ஊழியர்கள் செய்தார்கள். அப்பொழுதே வாத்தியக்காரர்கள் வாசிக்க ஆரம்பித்தார்கள். மேளக்காரர்களும் தங்களது திறமைகளைக் காட்டினார்கள்.

அப்போது மூத்த மகன் வயலில் வேலையாயிருந்துவிட்டு திரும்பி வந்து கொண்டிருந்தான். தூரத்தில் வரும் போதே கூத்தும் கும்மாளமுமாக இருந்ததை அவன் பார்த்ததால் என்னவென்று விசாரித்தான். அதற்கு வேலையாட்கள் "உமது தம்பி திரும்பி வந்துவிட்டான். அதைத்தான் உமது தந்தை கேளிக்கைகளோடும், விருந்தோடும் கொண்டாடத் தொடங்கியிருக்கிறார்" என்றார்கள். உடனே மூத்தவனுக்கு மூக்கின் முகத்துவாரத்தில் கோபம் கொடியேற்றியது. வீட்டிற்கு உள்ளே வர மனதில்லாதவனாக அவன் வெளியிலே நின்றான். தந்தையோ அவனை வீட்டிற்குள் வரச் சொல்லி கெஞ்சிப் பார்த்தார்.

அவனோ மிகுந்த கோபத்தோடு "பாரும், இத்தனை ஆண்டுகளாக ஒரு அடிமையைப் போல நான் உம்மிடம் பணியாற்றினேன். உமது கட்டளைகளை ஒரு போதும் மீறியதில்லை. ஆயினும் என் நண்பர்களோடு நான் மகிழ்ந்து கொண்டாடும்படி ஓர் ஆட்டுக்குட்டியைக் கூட நீர் தந்ததில்லை. ஆனால் விலை மகளிரோடு சேர்ந்து உமது சொத்தையெல்லாம் அடியழித்துப் போட்ட ஊதாரி மகன் வந்ததும் ஊரை அழைத்து விருந்து படைக்கிறீர்" என்றான்.

அதற்குத் தந்தையானவர் "மகனே! நீ எப்போதும் என்னோடேயே இருக்கிறாய். என்னுடையதெல்லாம் உன்னுடையதே. இப்போது நாம் மகிழ்ந்து கொண்டாடி இன்புற வேண்டும். ஏனெனில் உன் தம்பியாகிய இவன் இறந்து போயிருந்தான். மீண்டும் இப்போது உயிர் பெற்றுள்ளான். காணமற் போயிருந்தான்; மீண்டும் கிடைத்துள்ளான்" என்றார்.

இந்தக் கதையைச் சொன்ன கர்த்தராகிய யேசு கிறிஸ்துவிடம் "என் சகோதரனை எத்தனை தடவை நான் மன்னிக்க வேண்டும்" என்று ஒருவர் கேட்டார். அதற்கு யேசு பெருமான் ஏழு முறைகள் என்றார். ஏழு முறைகள் தானா என்று அவன் திரும்பக் கேட்டான். அதற்கு யேசு பெருமான் ஏழு எழுபது முறைகள் என்றார். 'ஏழு என்றால் அநேகம் தடவைகள் என்றும் அர்த்தமாம்' என்றும் கர்த்தர் இருவாய் மலர்ந்தார்.

(தொடரும்)



# பகைவன்

தாதா சத்யராஜிடம், தொலைந்து போன தன் மகளை மீட்கும் பொறுப்பை விடுகிறார் அமைச்சர்.

வேலையில் சேர முன் பணமாகத் தேவைப்படும் ஐம்பதாயிரம் ரூபாய்க்காக மந்திரிகுமாரியைக் கடத்திச் சென்றிருப்பவர் அஜீத். புரட்சித் திலகமும், 'ஆசை' நாயகனும் 'பகைவர்'களாகி, பிறகு ஒன்றாகி, பிறகு பொது எதிரியைப் பந்தாடுகிறார்கள்.

சத்யராஜின் அரசியல் கிண்டல்கள் விறுவிறுப்பு. ஆனால் சிகரெட்டை குப்பென்று ஊதித் துப்பும் மானரிஸம் அருவருப்பு.

சகிப்புத்தன்மை கொண்ட இரு மதங்களை ரொம்பவும் சீண்டிப் பார்க்கிறார்கள். கறுப்பு உடையும், ஐயப்ப மாலையுமாக 'பள்ளிக்கட்டு சபரிமலைக்கு' என்றபடி மதுவைக் கலந்து சத்யராஜுக்குத் தருகிறார் வியாபாரி. 'ஃபாதர், டாடி' என்றெல்லாம் பாதிரியாரை (நாகேஷ்) அழைத்து "இந்த அங்கியை விட்டு லுங்கி கட்டினா உங்களுக்குக் கிடைக்கிற மரியாதையே தனி" என்ற உபதேசம் வேறு. (யாரும் இன்னும் ஸ்டே கேட்கலையா?)

அஜீத்தின் காதலியாக வரும் அஞ்சலா ஓரிரு ஷாட்களில் முழங்காலுக்குக் கீழும் உடை அணிகிறார். வாழ்க மும்பை!

இது இயக்குன-நடிகர்களின் பொற்காலம். இதில் மின்னுவது கே.எஸ். ரவிகுமார்.

'சத்யராஜ்-அஜீத்'தின் நேருக்கு நேர் காட்சிகளில் பின்னணி இசைக்குப் பாராட்டு. மற்றபடி பாடல்களைப் பொறுத்தவரை - தேவா சார், எப்ப 'டீ'க்கு மாறப்போறீங்க?

அமைச்சர் மகளைக் கடத்தும் காட்சியமைப்பு நம்பமுடியாத அடாஸ். 'அஜீத்'தின் ஒரேமாதிரி நடன அசைவுகள் சலிப்பு.

காட்சிகள் ஜவ்வின்றி டக் டக்கென முடிவது, சண்டைக்காட்சிகள், காமிராக் கோணங்கள் - சபாஷ்.

தொடக்க நீதிமன்றக் காட்சி வித்தியாசமான நகைச்சுவை ட்ரீட்மெண்ட்டால் சிரிக்க வைப்பது உண்மை. ஆனால் பணத்துக்காகப் பல கொலைகளைச் செய்த சத்யராஜ், போலீஸைக் கேலிப் படுத்தியபடி, ஜீப்பில் ஏறுவதை ஏற்க முடியவில்லை.

"நான் கஞ்சன்ஜங்காவில் கஞ்சா அடிச்சவன். தீவிரவாதிகளையே கடத்தியவன்" என்றெல்லாம் நண்பர்களிடம் ரீல் விட்டபடி விவேக் திரும்ப, பின்னால் ஒரு போலீஸ்காரர், போலீஸ் ஸ்டேஷனுக்கு வழிகேட்கிறார். "இவங்களை நம்பலாம். கடத்தினால் நிச்சயம் பிடிக்க மாட்டாங்க" விவேக் சரளமாகச் சிரிக்க வைக்கிறார்.

- ஜி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 208/-; Overseas : Rs. 1200/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 104/-; Overseas : Rs. 600/- (Air Mail)

# உங்கள் கதவுகளை தேர்ந்தெடுக்க சரியான வழி

**MOISTURE REDUCTION**
( New Wood contains 80% -
Desirable Level 14% to 18% )

**CHEMICAL PROTECTION**
(By Pressure Impregnation)

## மாயூரம் டிம்பர்

அதை சிறப்பான முறையில்
செய்து கொடுக்கிறது



*சிறப்பம்சங்கள் :*

- உன்னதமான மெஷின் தயாரிப்பு
- விற்பனைக்கு பின் தரமான சேவை
- 50 வருடங்களுக்கும் மேலான அனுபவம்.

ஆர்டரின் பேரில் கதவுகள் செய்ய அணுகவும் :

## மாயூரம் டிம்பர் டிரேடிங் கம்பெனி

83, ஜி.எஸ்.டி. ரோடு, தாம்பரம், சென்னை - 600 045.
போன் : 2368297 / 2368295 / 4345207.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392/97* Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka
( With 16 pages Supplement )

இந்தியாவின் மிகப் பெரிய தங்க நகைக் கடை

# சரவணா ஸ்டோர்ஸ்

(தங்க நகைகள், ஜவுளிகள், பாத்திரங்கள்,

ரெங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை - 17.

தங்க, வெள்ளி நகைகளுக்கு செய்கூலி இல்லை

பழைய பொன் நகைகளை கொடுத்து புன்னகையோடு புதிய பொன் நகை பெறவும்



22. Ct. தங்கம்
1 கிராம் ரூ. 421
(விலை மாற்றம் உண்டு)

அதிகம் கல் எடையுள்ள நகைகளுக்கு மட்டும் 10% தள்ளுபடி மேலும் செய்கூலி, சேதாரம் இல்லை

நாங்கள் விற்கும் தங்க நகைகள் மற்ற எந்த கடைகளையும் விட உயர்வான தரம் என்று சவால் விட்டு உறுதி கூறுகிறோம்.

விசா, மாஸ்டர் கார்டுகள் மட்டும் ஏற்றுக் கொள்ளப்படும்

இந்தியாவின் மிகப் பெரிய பட்டு ஜவுளி மாளிகை

பட்டுபுடவைகளுக்கு 10% தள்ளுபடி

ஜவுளிகள், ரெடிமேட் ஆடைகள், பாத்திரங்கள், டி.வி. ரேடியோ, ஃபிரிஜ், ஃபேன்

உண்மையே உயர்வு

ஞாயிறு விற்பனை